என்று கூறுதலாலும், கிரணாகமத்தில் பிராமணாசாரியர் மு
தல ஆசாரியர் நால்வர்க்கும் முறைமையில் நான்கு மூன்று இர
ண்டு ஒருவர்களுக்கே கல்யாணம் விதித்திருத்தலாலும், சா
வாகமங்களும் அப்படிச் சாற்றுவதால். ஓராகமத்திற் றனிய
து கொண்டு தனிகுல் பிராமணனே குரு, மற்றை வருணத்தா
ர் சாதகர் புத்திரர் சமயிகள் மாத்திரமா யிருப்பாரென்றும்
பிராமணன் பிராமணன் முதல் நால்வர்க்கும் குருவென்றும், அ
ரசன் அரசன்முதல் மூவர்க்கும் குருவென்றும், வணிகன் வணி
கன்முத லிருவர்க்கும் குருவென்றும், சூத்திரன் சூத்திரர்க்கு
குருவென்றும் மேருதந்திரத்திலும் காமிகம் பாராக்கியை முத
லிய ஆகமங்களிலும் முறைமையில் நிஷேதித்தும் விதித்தும் இரு
த்தலால் ஒருவசனத்தைப்பிடித்துப் பிராமணனே குரு
மற்றவ ரல்லரென்று பேசவேண்டும். அப்படியாகட்டுமென்று
நீ சொல்லில் மற்றையர்களுக்கு குருவென்னும் அநேகாகமவசன
ங்களுக்கும் அப்பிராமணியப் பிரசங்கம் வரும்

பிராமணனில் பிரஞ்ஞாவானக ளில்லாதிருந்தால் அரச
ன் முதலோர்க் கரசன்குரு, அரசரிற் பிரஞ்ஞாவானக ளில்லா
திருந்தால் வணிகன்முதலோர்க்கு வணிகன் குரு, வணிகரிற் பி
ரஞ்ஞாவானக ளில்லாதிருந்தால் சூத்திரர்க்குச் சூத்திரன் கு
ருவென்னும் வசனங்களுக்குப் பிராமாண்ணியம் சொல்லலா
மென்று நீ சொல்லில், காலாம வருணத்து யிட்டிகரிற் பிர
ஞ்ஞாவான்கள் இல்லாதிருக்கால் இரக்கதன் குருவென்னும் வ
சனத்துக்கும் பிராமாண்ணியம் நாம் பேசவோம். அப்படித்
தானே சொலுமென்று நீ சொல்லில் அதுவுங்கூடாது இரக்கத
ன் சாவவர்ணங்களிலும் பூசியனாகிய குருவென்று கூறுதலா
ல் காலாமவருணத்து யிட்டிகர் பிரஞ்ஞாவான்களா யிருந்தா

னும் கிரகத்தரும் பிரஞ்ஞாவான்களா யிருந்தால், இருவகை யாரும் குருவென்று கூறுவோம்.

அப்படித்தானுகட்டு மென்று நீ சொல்லில்? அதுவுங் கூடாது மந்தப் பிரஞ்ஞாவானாயிருந்தாலும் பிரவாக சந்ததிப் பிரசித்தப் பிரக்ஞிமானாயிருக்கின்ற குருபுத்திரனைத் தியாகஞ்செயமபண்ணலாகாதென்று சிவாகமங்கு செப்புதலால் ஒன்றுங் குறியாமற் பிரஞ்ஞாவான்களா யிருக்கிறசிஷாக ளுதவியாக அவனே குருவென்று கூறுவோம். இப்போது சொல்லிவந்த வசனங்களாலே விரதிகளில் பிரமசாரியும் கிரகத்தனும் குரு, வானப்பிரத்தனுஞ் சந்நியாசியுங் குருவல்லரென்று கூறப்பட்டது.

ஸ்ரீ காமிகாகமத்தில் சந்நியாசிக்கும் குருத்துவமுண்டென்று கூறியதேது? உள்ளது சாத்திர திட்சைமாத்திரத்திலென்று சமாதானம். சாட்சாத்சிருத சிவாதிபதார்த்த சித்த சிவயோகியாகில் சாம்பவ தீக்ஷைமாத்திரத்திலென்று சமாதானமாம்.

நாலாம் வருணத்தார்க்குப் பிரணவமாகாதென்று பிராமணர் முதலோர் பேசுவதேது? உள்ளது. குருத்துவம் வித்திருத்தலாற் பிரணவ பூர்வப் பிராசாதமறியாதவன் குருவல்லனென்று கூறுதலானும், ஸ்ரீ மகுடாகமத்தில

“நிர்வாணதீக்ஷிதே சூத்ரே
பரணவஞ்ச நியோஜயேத்”

என் றிருத்தலானும், காமிகத்திலு மப்படி யிருத்தலானும் பிரணவமாமென்று பேசுவோம்.

சோமசம்பு பத்ததி முதற் பத்ததி கர்த்தாக்கள் நிஷேதியாதபடியினாலே விசிஷ்ட சமயி முதலானோர்க்கும் பிராமாண்ணியங்கொடுத்திருத்தலானும் ஆமென்பது சூசிக்கப்பட்டது.

பிரஞ்ஞையில்லாப் பிராமணர் சிலர் நாலாம் வருணத்திற் சந்நியாசி இல்லையென்று சாற்றுவார்கள், அது நயிட்டிகப் பிரம

சாரிகளு ளடக்கிய பிராயச்சித்தாதி விதித்தலாலேயும், சிந்திய விசுவசாராக்கியத்தில் பிராமணர்முதற் பதினெண்சாதிக்கும் பிரமசரியம் கிரகஸ்தம் வானப்பிரஸ்தம் சந்நியாசமென்று நான்காச்சிரமமு முண்டென்று விதித்தலால் சைவத்திற் பிரசித்தம்

வைதிகத்திலும் இராமாயணத்தில் கிருதாயுகக் கிரமத்திற் பிராமணர் முதல்நால்வர்க்கும் தபோமுக்கியஞ் சாற்றுவது போலப் பிரமாண்ட புராணத்தில் கிருதயுகத்திற்குப் பிராமண சந்நியாசி முக்கியன், திரேதாயுகத்திற்கு க்ஷத்திரிய சந்நியாசி முக்கியன், துவாபரயுகத்திற்கு வைசிய சந்நியாசி முக்கியன், கலியுகத்திற்குச் சூத்திர சந்நியாசி முக்கியன் என்னும் வசன முதல வசனங்களால் பிரசித்தந்தானே.

சிகாச்சேதமில்லார்க்கு ஆசாரியாபிடேக மாகாதாதலாலும் கிரகஸ்தரிலும் விரக்தரிலும் நயிட்டிக இட்டசாவாணைகளால் நயிட்டிகாசாரியர்கள் உண்டென்று நாமுன் னாட்டுதலால் அவ்விருவகை நால்வருள்ளும் நயிட்டிகாசாரியர்களே சாற்றியபரிபாடையில் சைவத்திற் சந்நியாசங் கொடுக்கவேண்டும் வைதிகத்திற்குப்போலக் குருத்துவமில்லாத சந்நியாசங்கொடுப்பதின்று.

பஞ்சரக்ஷ கோத்திரத்தில் சிவபிராமணர் சர்வாதிகாரிகளென்று காமிகத்திற் சாற்றுதலால் அவர்களிடத்தில் சிவலிங்கத்திற் போல நயிட்டிகாசாரியர் பவுதிகாசாரியரென்னும் டாரியாலோசனை சந்நியாசாதி பரிக்கிரகம் பண்ணும் பொருட்டுப் பண்ணுவதின்றென்று சமபத்தி பண்ணுவதே சாற்பு ஆகையால், இனி யப்பால் நடப்போம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனிச் சபீசமாவது, மலபரிபாகத்தோடு கூடக் கூரறிவு மாற்றலு மிக்குடையராயினோர்க்கு, ஆசாரியனானவன் அஃதறிந்து சமயாசாரங் கன்மம் மாந்திர நிருத்தி வினையவற்றைச் சுத்திசெய்து தொழித்து சித்திப கன்மமுதலிய மூன்றினும் அதிகார முடையராகச் செய்வதாம். ஆகலின் இது சாதிகார தீக்கையெனவும் பெயர் பெறும். இத்தீக்கைப் பேறுடையார் தீக்கை வேறுபாட்டால் சாதகரு மாசாரியருமென இருதிறப்படுவர். இத்தச் சபீச தீக்கைதான் இல்லற முடையார்க்குத் திரோதான சத்திரூப சிகாச்சேதமின்றிச் செய்வதாய உலகதருமிணியுந் துறவற முடையார்க்குத் திரோதான சத்திரூப சிகாச்சேதத்தோடு செய்வதாகிய சிவதருமிணியுமென இருவகைப்படும். இவை முறையே பௌதிக தீக்கை நைட்டிக தீக்கை யெனவும் பரியாயப் பெயர் பெறும். சமய விசேட நிருவாண அபிடேக மெனும் பேதமெல்லாம் நிர்ப்பீசஞ் சபீசமெனும் இவ்விரண்டனு ளடங்கு மென்பதாம்.

சமயாசார சுத்தியின்றிச் செய்யும் நிருவாண தீக்கையும் அதற் கங்கமாய்ச் செய்யப்படுஞ் சமய விசேடங்களுஞ் சபீச தீக்கையெனக் கொள்க.

உத்தமத்தி லுத்தமனென்பார், நல்ல வுத்தமரென்றார்

ஓதியுணர்தலும் ஒழுக்கநெறி யொழுக்கலுமாகிய இரண்டுமுடையார் உத்தமத்தி லுத்தமரெனப்படுவதூஉம், இரண்டுமில்லாதார் உத்தமத்தி லதமரெனப்படுவதூஉம் பெற்றாம்.

பெறவே, நிர்ப்பீசஞ் சபீசமென இருதிறப்படுஞ் சாதார தீக்கைக் குரியார் இவ்வாறு முத்திறப் படுவரென்ப தாயிற்று.

இங்ஙனங் கூறிட வாற்றால் ஔதந்திரியென்ற தொகையா னொன்றும, ஞானவதி கிரியாவதியென்ன வகையா னிரண்டும, ஞானவதி நிரபீசஞ் சபீசம் கிரியாவதி நிரபீசஞ் சபீசமென விரியா னான்குமாயவாறு காண்க

நிரபீசஞ் சபீசமெனனும் இவற்றின விரியாகிய சமயவிசேட முதலியவற்றி னியல்பெல்லாம ஆகமங்களு— ணாணக

இவை மூன்று செய்யுளானுஞ் சாதார தீக்ஷையின வகையும் அவற்றியல்புகளுந் தொகுத்துக் கூறப்பட்டன.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன சொன்ன நிர்ப்பீச சபீசமென்ற விரண்டின நிரபீச மருளிச்செய்து மேல் சபீச தீக்ஷையின முறைமையும உலோக தனமணி சிவ தனமணியின முறைமையு மருளிச்செய்கிறா

ஒதியுணாக தொழுக்கநெறி யொழுக்கா கவல உத்தமாகக்குச் செய்வ தயாபீசம - வேதாகம சாத்திரங்க ளொல்லாதவையு மதிக்கித்தா அவையிற்றி லுண்டானவா தங்களையு மறிந்து அகதச சாத்திரஞ்சொன்ன முறைமையில் ஒழுங்கு தப்பாமல் நடக்கிற உத்தமரி லுத்தமரா யுள்ளவர்களுக்குச் செய்வது மேலான சபீசதீக்ஷை,—இவர்தம்மை - இந்தவுத்தமர்தங்களை,—நீதியிற்றல நித்திய நைமித்திய காமியத்தி நிறுத்தி- அவரவர்க்குத் தக்க முறைமையாக நித்திய கன்மத்தையும நைமித்திய கன்மத்தையும காமியத்தையும் கற்பித்து நிறுத்தி,—நிரம்பதிகார நிகழ்த்துவதுஞ் செய்து - பராநுக்கிரக முதலான எல்லாவதிகாரத்தையுங் குறைவறக் கொடுத்து,—சாதகராசாரியருமாககி- நிருவிகற்ப சமாதி முதலானவையிற்றையுங் கற்பித்து ஆசாரியபிஷேகமுஞ் செய்து—[illegible]த்தையும

கொடுப்பிக்கும் அது,—உலோகசிவ தனமணியென றிரண்டா
ம் - ஆசாரியன இந்த வானமாலை இவன போகங்களுக்கு இச்
சையான புவனங்களிலே யோசிப்பிக்கிறது உலோகதனமணி
யென்றும சிவனுடனே யோசிப்பிக்கிறது சிவதனமணி யென்று
ம இரண்டுவகைப்பட்டிருக்கும.—ஆதலின அதிகாரையாம- இ
ப்படிச் சொல்லிவந்த தீக்ஷைகளின விசேஷங்களினால் இவை
யெல்லா மதிகாரையாம —சமயவிசேஷ நிருவாண மபிடேகமி
வற்றடங்குமன்றே - முன சொல்லிவந்த தீக்ஷைகளெல்லாம
சமயத்திலும் விசேஷத்திலும் நிருவாணத்திலும் அபிஷேகத்தி
லும இந்த நாலு தீக்ஷையிலும அடங்கும.

'பாலரொடு வாலீசா'என்ற திருவிருத்தத்தில் 'நிரதிகாரை
யென றிரண்டாய விளங்கும'என்ற பதத்துக்கு வியாக்கியா
னம 'இவற்றடங்குமன்றே' என்ற வளவும வந்து முடிந்தது;
இது அதிகாரை என்னுமதற்கு கண்டுகொள்க

இதனாற சொல்லியது, வேதாகம சாஸ்திரங்களை ஓதியுண
ர்ந்து அந்தச் சாத்திரஞ் சொன்ன முறைமையினாலே நிற்கிற
உள்ளத் தவர்களுக்குச் செய்வது சபீசதீக்ஷை யென்றும, இவர்
களுக்கு முறைமையிலே நித்திய நைமித்தியங்களையும கற்பிக்
கிறது அதிகாரையாமென்றும்,இந்தத் தீக்ஷைகளெல்லாஞ் சம
ய விசேஷ நிருவாணம் அபிஷேகமென்கிற நாலிலு மடங்குமெ
ன்னு முறைமையு மறிவித்தது

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

உபாபீசம - இனிச் சபீசமாவது,—ஓதியுணர்ந் தொழுக்க
நெறி பிழுக்கல்ல வுத்தமர்க்கு-மலபரிபாகத்தோடு கூடக் கற்
றறிவு மொழுக்கவழியில் வழுவாது செய்யு மாற்றலு மிகவுடை
ய வுத்தமத்திலுத்தம ராயினோர்க்கு நிறைதி,—செய்வது - ஆ

சாரியனுவா னஃதறிந்து சமயாசார கன்மமாத்திர நிறுத்தி யேனையவற்றைச் சுத்திசெய்ய தொழிந்து,—இவர்தம்மை நீதியினுன - இவரை முறைமையான,—நித்திய நைமித்திக காமியத்தி னிரமப்பதிகார நிகழ்த்துவதனுஞ் செய்து - நித்திய நைமித்திக காமியமாகிய மூன்றினும் பேரதிகார முடையராகச் செய்வதாகலின,—அதிகாரியாம் - இது சாதாரதீக்கையெனவும் பெயர் பெறும் —சாதகாசாரியருமாகத் வீடுதருவிக்கும் - இத்தீக்கைப் பெறுடையார் தீக்கை வேறுபாட்டாற் சாதகரு மாசாரியருமென இருவகைப்படுவர்.—உலோக சிவதருமணியென நிரண்டாம் - இத்த சபீசதீக்கைதா னில்லற முடையார்க்குத் திரோதான சத்திரூப சிகாச்சேதமின்றிச் செய்வதாகிய லோகதருமணியும், துறவற முடையார்க்குத் திரோதான சத்திரூப சிகாச்சேதத்தோடு செய்வதாகிய சிவதருமணியுமென இருவகைப்படும். இவைமுறையே பவுதிக தீக்கை, நயிட்டிக தீக்கையெனவும் பரியாயப் பெயர்பெறும்.—ஆதலின்று சமய விசேட நிருவாண மபிடேக மிவற்றடங்குமன்றே- இவ்வாறுதலிற் சமயவிசேட நிருவாணம் அபிடேகமெனனும் பேதமெல்லா நிர்பீச சபீசமென்னு மிவ்விரண்டி னடங்கும்.

சமயாசார சுத்தியின்றிச் செய்யு நிருவாண தீக்கையும் அதற் கங்கமாய்ச் செய்யப்படும் சமய விசேடங்களும் சபீசதீக்கை யெனக்கொள்க

ஓதியுணர்தலு மொழுக்கநெறி யிழுக்காமையுமாகிய விரண்டையு முடையார் உத்தமத்தி லுத்தமரெனவே இவ்விரண்டி னொன்றிலாதார் உத்தமத்தில் மத்திமரெனவும் அவ்விரண்டு மில்லாதார் உத்தமத்தி லதமரென்பதூஉம்பெறும்.

இவை மூன்று செய்யுளானுஞ் சாதாரதீக்கையின் வகையும் அவற்றியல்புகளுந் தொகுத்து [illegible]

## மறைஞானதேசிகர் உரை



மேற் றீக்கை யிருவிதத் தொன்று மத்துவா சுத்திசெய்வ
தூஉ மவ்வத்துவா வாறென்பதூஉ மதனது வியாப
தியின முறைமையு முணர்த்துகின்றார்

அறிவிலாக் கிரியையினா லாதல்சத்தி மந்திரத்தா லாத
லத்துவாசுத்தி பண்ணிமலமகற்றி, யொழிவிலாச் சிவ
மபிரகாசித்தற்குஞான முகிப்பித்துற பவந்துடைப்ப
ரென்றுருமூவர்க்கும், வழுவிலா வழியாறு மந்திரங்க
ள்பதங்கள் வன்னங்கள்புவனங்க டத்துவங்கள்கலைகள்,
கழிவிலா துரைத்தமுறை யொன்றினொன்றுவியாத்தி
கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன்கண்ணாம். (௬)

| | |
|---|---|
| (இ-ள்) அறிவிலாக்கிரியையினாலாதல் | கேடில்லாத கிரியாவதியென்னுந் தீக்கையினாலே யாதல், |
| சத்திமந்திரத்தாலாதல் | அந்தரங்க வியாபாரத்தாற்செய்யு ஞானதீக்கையினாலே யாதல் அவரவர் சத்திநிபாதானுகுணமாக |
| அத்துவாசுத்திபண்ணி | தத்துவாத்துவா முதலான தெல்லாம பாசபந்த மாகலா னவைகளைப் பஞ்சகலைகளி னடைத்துச் சுத்திசெய்து, இஃதாற் பல மியாதோவென்றால்? |
| மலமகற்றி | ஆணவமுதலிய மூன்று பாசங்களைச் சேதிப்பதுஞ் செய்து. |
| ஒழிவிலாச்சிவமபிரகாசித்த | அஞ்ஞான நீக்கவே யிவனைவிட்டு நீங்காத், சிவஞானம் இரண்டறத் தரிசனமாகையி |

| | |
|---|---|
| ற்குஞான முதிப்பித்து | ன பொருட்டுச் சாவஞ்ஞத்துவாதி குணங்களைப் பிரகாசிப்பித்து, |
| உறபவத்துடையபன | மேற் றிருமேனிக்கு சனனமெடாதபடி செய்வன. அஃதெனபோலெனில்? நதியிற ஜலம சமுத்திரத்திலே பொருந்தி லத்தன்மையாயத் திரும்பாத வாறுபோல விததவானமாவு மசரீரியுமா யசஎவஞ்ஞமாய நிருமலனுமாயச் சாவஞ்ஞத்துவாதி குணங்களை யுடையனுமா யாதி முத்த சிற்சத்தியிற போரானந்தத்தை யனுபவனுமாய்ச் சிவத்தை யடைந்திருப்பன. |

மகுடோத்தரம், சௌரவமதிக

| | |
|---|---|
| அரனொருமூவர்க்குமா | இப்படி யெல்லாருடைய பாசங்களையு அரிக்கையினுன், அரனென்னுந் திருநாமத்தையுடைய சிவன மூற்கூறிய நிராதார சாதார தீக்கை பேதத்தான மூவகைப்பட்ட வானமாக்களுக்கு மனுக்கிரகஞ்செய்வன அத்துவா சுத்தி செய்யுமிடத்து, |
| வழுவிலா வழிபாறும | ஆனமாக்களைப் பரசுத்தி யடைவிப்பிக்கைக் காரணமாகக் குற்றமில்லாத மாத்திராத்துவா முதலிய மார்க்க மறுவிதப்படும் அவை யாவன? |
| மந்திரங்கள பதங்கள் வன்னங்கள் புவனங்கடத்துவங்கள் கலைகள் | அக்கருபஞ் சந்தரூபமாகிய மந்திர பத வன்ன புவன தத்துவ கலைகளென்று சொல்லிய வாறத்துவாவும், |
| கழிவிலா அரைந்திடுமுறையொன்றிடுனை | இவ்வாறு கூறியவாறினு ளொன்றுங் குறையாமற் சொன்ன முறையிலே யொன்றிலே யொன்றாக வியாபித்திருக்கும். அஃதா |

வியாத்தி — அது, மந்திர மக்கரங்களின் கூட்டமாகிய பதத்திலே வியாபித்திருக்கும், அப்பதம் வன்னத்திலே வியாபித்திருக்கும், அவ்வன்னம் புவனத்திலே வியாபித்திருக்கும், அப்புவனந் தத்துவத்திலே வியாபித்திருக்கும், அத்தத்துவம் கலைகளிலே வியாபித்திருக்கும்.

கருத்துக்கலை சத்தியின்கண் சத்தி சிவன்கண்ணும் — இவ்வாறினுக்குஞ் சத்தியே துணைக்காரணமாகையாற் கலைகளதனை வியாபித்திருக்கும் அச்சத்தி சிவனுக்குச் சமவாயமாதலாற் சிவனிடத்திலே வியாபித்திருக்கும். எ-று

கண்ணென்ப தேழாமுருபு

இதற்கு வருணபத்தியும் ரௌரவமுமென வறிக (௬)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



க்ரியா தீக்ஷையென்றும் ஞானதீக்ஷையென்றும் சாம்பவ தீக்ஷையென்றும் மூன்றுவித மாகையால் இந்த மூன்றுவகை தீக்ஷாதிகாரிகள் மூவர்க்கு முத்திபேத மூன்றோவென வினவிப் பேதமில்லையென்பதும் கன்ய¶ மாசசித்தத்துக்குவழி யீதென்பதும் மேற் கூறுகின்றது.

அரனெறிமூவர்க்கு மழிவிலாக் கிரியையினுலாதல் சத்திமத்தாலாதலத்துவா சுத்திபண்ணி மலமகற்றி யொழிவிலாச் சிவம் பிரகாசிக்க ஞானமுதிப்பித் தற்பவந் துடைப்பன - பக்குவானமாக ஞானட-ய பாசத்தை யறிக்கையினாலே அரனென்று நாமத்தையுடைய சிவ ஞாசாரிய மூர்த்தியை யபிஷேகித்துகின்ற கிரியாதீக்ஷாதிகாரிக்கும் ஞானதீக்ஷையிற் பேதம் சாம்பவ தீக்ஷையாகையால் ஞானதீக்ஷாதிகாரிக்கும் சாம

பல தீக்ஷாதிகாரிகளுமிந்த மூன்றுபேருக்கும் ஆகிலுமென்றது ×வியவஸ்தித விகற்பமாதலால் கிரியாதீக்ஷாதிகாரிகளுக்கு கன்ம*வைகல்யமில்லாத கிரியாதீக்ஷையினாலும் ஞானதீக்ஷாதிகாரிகளுக்கு சிற்சத்தி § சந்நிதமான மனோ பாவனையினாலே பண்ணும ஞான தீக்ஷையினாலும் கேவல சிற்சத்திமாத்திரத்தினாலே பண்ணுஞ் சாம்பவ தீட்சையினாலும் அத்துவ சுத்தியைப் பண்ணி

அத்துவசுத்தியாவது, ஷடத்துவாவிலும் சஞ்சிதமாயிருந்த கன்மங்களை யெல்லாம நசிப்பித்தல், கன்மங்க ளசிக்கவே மர்மையும நீக்கும் ஆணவமலத்தினுடைய தடையையு மொழித்து நித்தியஞானத்தை மயமானசிவ மானமாயினிட்டத்திலேயபி வியத்தியாவதற்குமுன னிராகாதி+கலுஷிதமா யிருக்கிற பசு ஞானமபோக ஆன்மசுவரூபஞானத்தை பிரகாசிப்பித்து மேல் சஞ்சயங்க ளடாதபடி சுத்த சுத்தம பண்ணுவன பதியுஞ்ஞானமாவு மவிபுவா யிருக்க அத்துவாவென்ற தாருக்கெனனில்? ஆன்மா மாயேத்தினாலே பந்திக்கப்பட்டு ஏகதேசத்தை யடைந்திருந்த சிறுமையினின்று தீக்ஷாக்கிரமத்தினாலேயொவ்வொரு தத்துவங்களாக நீக்கி ஸ்வஸ்வரூபமான விபுத்துவத்தையும சர்வஞ்ஞத்தையும பெற்றுச் சிவத்தை யடைகையினு லத்துவா வென்ற தொழிந்து தேசத் தேசாந்தரத்தை யடைந்ததென்றதல்ல,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

டஞ்சகலாபிமானிகளான பஞ்ச சத்திகளுக்குப் பண்ணின பூசா பூசைகளினாலே புண்ணிய பாபமென்றும,—

கழிவிலா துரைத்தமுறை யொன்றி லொன்று வியாத்தி கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன்கண்ணும் - இம்முறையொன்று நீங்காத முறைமையாய்ச் சொல்லுகையால் மந்திரங்கள் வியாப்பியமும் பதங்கள் வியாபகமும், பதங்கள் வியாப்பியமும் வன்னங்கள் வியாபகமும், வன்னங்கள் வியாப்பியமும் புவனங்கள் வியாபகமும், புவனங்கள் வியாப்பியமும் தத்துவங்கள் வியாபகமும், தத்துவங்கள் வியாப்பியமும் கலைகள் வியாபகமும், கலைகள் வியாப்பியமும் சத்திகள் வியாபகமும், சத்திகள் வியாப்பியமுஞ் சிவன் வியாபகமுமாம்.—

இவ்வாறு சிவன் சர்வ வியாபி யாகையா லாறத்துவாக்களினாலே யேற்பட்ட கன்மங்களைக் கூட்டிப் புசிப்பிக்கிறவனும் புசியாதபடிக்கு தீக்ஷையினாலே யொழிக்கிறவனுஞ் சிவனேயா மென்றிதன் பொருள்.

¶ ஆர்ஜிதம - சம்பாதிக்கப் பட்டது, × வியவஸ்தி- கட்டுப்பாடு * வைகல்யம்-குறைவு § சஞ்சிதம்-கூடினது ÷ கலுஷிதம்-கலங்கினது † உதாத்தம - உரத்துச் சொல்லல் — அநுதாத்தம-மௌனச் சொல்லல் ‡ ஸ்வரிதம - உச்சரிப்புப்பேதம ○ பிரசயம - கூட்டல், ● ஹ்ரஸ்வம் - குறில் ⫰ தீர்க்கம-நெடில் ▙ புலுதம்-அளபெடை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மேற்கிரியாவதி தீக்ஷையினாலேதான சாம்பவி தீக்ஷையோ சத்தி யென்று சாற்றும ஞானவதி தீக்ஷையினாலேதா

வசடத்துவ சத்திபண்ணி முத்திவியத்தி பண்ணும் பொருட்டு அறியுஞ் சடத்துவாக்களை மேன்மேற் செல்லுங் கிரமத்திலே யொன்றி னொன்று வியாத்தியை யுடையதாகி வியாப்பிய வியாபகங்களாயப் போயத் தத்துவங்களை வியாபிக்குஞ் சிவசத்தியோடு கூடச் சர்வவியாபக சிவனுக்கு வியாப்பியங்களா யிருக்குமென்று விளம்புகின்றார்.

மலமகற்றி யென்பதனால் முத்தி செய் தீக்ஷாலக்ஷண சிவசத்தியாற் பாசமுத்தி சொல்லப்பட்டது,—

சிவம்பிரகாசிக்கும்ஞான முதிப்பித்தென்பதனால், வியத்தி செய்தீக்ஷாலக்ஷண சிவசத்தியாற் சிவசாக்ஷாத்காரோத்திரேக காரண தீக்ஷித சிவதத்துவ லக்ஷண சிற்சத்தியினது வியத்திரூப சர்வபதார்த்த காப்ப சிவ சாக்ஷாத்கார சமுத்திரேக ரூப வியத்தி சொல்லப்பட்டது,—

உற்பவந்தடைப்ப னென்பதனால், மீளத்திரும்புதலில்லை யென்பது விளம்பப்பட்டது

சிவனார்க்குச் சிவசத்தி வியாப்பிய மென்றது சிவசமவேதை யாற்செலுத்தப்பட் டிருத்தலா லுபசாரம்.

மற்றவை வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அரன்; குருமூர்த்தியை யதிட்டித்துநின்று, மந்திரமுதலாறு வகைப்படும் மத்துவாக்க ளொன்றினொன்றடங்க இறுதிக்கணின்றகலை திரோதான சத்தியினும அது சிவத்தினு மடங்குமாறுணர்த்து அவ்வாறடங்கி நிர்ப்பீசமெனத் தனித்தனி யிருவகைப படுமென மேற்கூறிப்போந்த ஞானவதி கிரியாவதியெனனு மி

ரண்டனுளொருதீக்கையானே உத்தமத்திலுத்தமமாமுதலிய வம
மூவாசகும அறுவகை யத்துவாசகளையுஞ் சோதிக்குமுகத்தா ற
பிறவிக்கேதுவாகிய மலத்தைக் கெடுத்துச சிவமபிரகாசித்தற
கேதுவாகிய ஞானத்தைக் கொடுக்குமெனபதாய.

கிரியை ஆகுபெயா

ஔத்திரி யிரண்டுதிறனு மிலகுஞானங்கிரியையென முத
ற்கணெடுத்துசகொணடு முடிவினகண அழிவிலாககிரியை யிரு
ளூதல் சத்திமத்தாருதலென முடித்தமையின, இடைக்கட் கூ
றப்பட்டனவெல்லாம் இவவிரண்டக்கும பொதுவாமாறு கா
ணக.

சோமசம்புபத்ததி வருணபத்ததி முதலியவற்றினும் இய
வாறே கூறபபட்டன

இதனுனே ஆசிரியன் தீக்கை செய்யுமாறு தொகுத்துக் கூ
றப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

பரமேஸ்வரன கிரியாவதியாலாதல் ஞானவதியாலாதல்
அத்துவாககளைச சோதித்து ஆனமாக்கள் மலங்களைப் போக
குகிற முறைமையை மேலருளிச்செய்கிறூர்:

அழிவிலாககிரியையிருலாதல் சத்திமத்தாலாதல்-அநாதியே
நித்தியமாயுள்ள கிரியாவதியாலாதல் ஞானவதியா லாதல்,—
அத்துவாசுத்திபண்ணி - அத்துவாக்களிலே யெல்லையற்ற ஜன
னங்களுக்கு ஏதுவான கன்மங்களை யெல்லாஞ் சுத்திசெய்து,—
மலமகற்றி - மலமாயாதி கன்மங்களைப் போக்கி,—அழிவிலாச
சிவமபிரகாசிக்கு ஞானமுதிப்பித் தற்பவத்தடைப்ப னரனெ

ருமாவார்களும் - உயிர்களுயிராய் அநாதியே இவர்களைவிட்டு நீங்காமல் நிற்கிற சிவப்பிரகாசத்தை யுண்டாக்குகிற பரஞானத்தையுந் தோற்றுவித்து ஜநநத்தையு மறுப்பன் பரமேசுவரன் மூன்றுவகைப்பட்டஆன்மாக்களுக்கும்,—வழுவிலாவழிபாரும - மலத்தைப் போக்குகைக்கு ஏதுவாயிருக்கிற குற்றமற்ற அத்துவாக்கள் ஆறுவகைப்பட்டிருக்கும் அவையாவன?—மந்திரங்களபதங்கள் வன்னங்கள்புவனங்கள் தத்துவங்கள கலைகள - மந்திரங்கள் பதங்கள் அக்கரங்கள் புவனங்கள் தத்துவங்கள கலைகள என்கிற விதத ஆறிணங்களையும்,—கழிவிலாதுரைத்தமுறை - வழுவற வேதாகமங்கள் சொன்ன முறைமை,—ஒன்றிலொன்று வியாத்தி - இந்த ஆறு அத்துவாவும் தன்னில் ஒன்றிலே யொன்றாக வியாபித் திருக்கும். இவையே யிடமாக நிற்குமென்று விசாரிக்கில்,—கருதுகலை சத்தியினகண் - மற்றுள்ள அஞ்சத்துவாக்களுக்கும நிற்கைக்கிடம் இதுவென்று கருதப்பட்ட கலைகள்,இந்தக் கலைகள் நிற்கைக் கிடமாயிருக்கும் சத்தி, இந்தச்சத்திக் கிடமேதெனனில்,—சத்திசிவனதனனும்- இவையிதற்கெல்லாம் மேலான சத்தி பரமேசுவரனிடமாக நிற்கும

இதனாற் சொல்லியது ஆன்மாக்களுக்குப் பரமேசுவரன அத்துவாக்களைச் சோதித்து மலத்தையும் போக்கி அநாதியே யுயிர்க்குயிராய் நிற்கிற தன்னைத் தரிசிப்பிக்கிற ஞானத்தையுந் தோற்றுவித்து இவர்கள் ஜனனத்தையு மறுப்பனென்றும், அத்துவாக்கள் ஆறுவகைப்பட் டிருக்குமென்றும, இவையொன்றிலேயொன்று வியாத்தியா யிருக்குமென்றும், இந்த அத்துவாக்கள சத்தியிடமாக நிற்குமென்றும்,இந்தச்சத்தி சிவனிடமாக நிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அரன்-முதல்வன், குருமூர்த்தியதிட்டித்துநின்று,—மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகளாறும் வழுவிலாவழி-மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலைகளென்ன ஆறுவகைப்படும் வழுவிலாத அத்துவாக்கள்,—கழிவிலாதுரைத்தமுறை யொன்றிலொன்று வியாத்தி- கீழ்வருகின்ற சொல்லிய முறையே யொன்றிலொன்றடங்க,—கருத்துக் கலைச்சத்தியின்கண் - இறுதிக்கணின்ற கருத்துகின்றகலைத் திரோதான சத்தியினும்,— சத்திசிவன்கண்ணும் - அத்திரோதானசத்தி சிவத்தினு மடங்குமாறுணர்ந்து அவ்வாறடக்கி,—அழிவிலாக கிரியையினாலாதல சத்திமத்ததாலாதல் - நிராதீசம சபீசமென்த தனித்தனியிருவகைப்படுமென மேற்கூறியபோந்த ஞானவதி கிரியாவதியென்னு மிரண்டினு ளொருதீக்கையானே,—ஒருமூவர்க்கு மத்துவா சுத்திபண்ணி மலமகற்றி- உத்தமத்திலுத்தமமாமுதலிய வம்மூவர்க்கு மவ்வகை யத்துவாக்களையுஞ் சோதிக்கு முசசத்தார பிறவிக்கேதுவாகிய மலத்தைக் கெடுத்து,—ஒழிவிலாச சிவம் பிரகாசித்தற்கு ஞானமுதிப்பித்து - எவ்வி—த்தும வியாபகமாய் விளங்குகின்ற சிவம் பிரகாசித்தற்கேதுவாகிய ஞானத்தைக் கொடுத்து,—உற்பவம் தொடைப்பன - பிறவியையொழிப்பன

இதனுனே ஆசாரியன் தீக்கைசெய்யுமாறு தொகுத்துக் கூறப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை.

இலக்கணம் வியாப்தியின்று முறைமை தொகுத்துக் கூறி யதீக்கையின மந்திர முதலிய வைந்தினையும பஞ்ச கலை

களில் வியாபித்து நிற்கு மதனைப் பிறித் தடைவே
மூன்று விருத்தத்தா லுணர்த்துகின்றார்.

மந்திரங்களை முதலைந்துங் கலையைந்தின் வியாத்தி மருவுமந் திரமிரண்டு பதங்களுலே, மூந்தநிலை யெழுத்தொன்று புவனநூற்றெட் டெனித்தத் துவமொன்று நிவிர்த்தியெனத் தெய்வம், வந்திடுமந் திரமிரண்டு பதங்களெழுவேழ் வனங்களுலாறு புரமைம்பத்தாறு, தந்திடுந்தத் துவங்களிரு பத்துமூன்று தரும்பிரதிட்டா கலைமா லதிதெய்வந்தானும். (௭)

| | |
|---|---|
| (இ-ள்) மந்திரங்களை முதலைந்துங் கலையைந்தின் வியாத்தி | மந்திராத்துவா முதலிய வைந்தும் நிவிர்த்தி முதலிய கலைகளிலே வியாபித்து நிற்கும். அஃதாவது, |
| மருவு மந்திரமிரண்டு | சத்தியோசாதம் இதயம் ஆக மந்திரமிரண்டு |
| பதங்களுலே | பதாத்துவாவிற் பதங்களோம நமோ நம வென்னும் பதமுதலாக மஹாதேவ என்னும் பதமீறாக விருபத்தெட்டு |
| அந்த நிலையெழுத்தொன்று | அந்தமுறையே அக்கரம் க்ஷகாரமொன்று. |
| புவன நூற்றெட்டு | புவனங்கள் ௱௮. அவையாவன — |

பிரமாண்டத்துட் காலாக்கினியாதி யுருத்திரபுவனமீறாகப் புவனம் ௯

கபாலீசாதி திரிதேசாதிபதி யீறாகக் கிழத்திக்கி . ற புவனம் ௪௦

அக்கினி யுருத்திரராதியாக ஊயாநதரீருக அ
கக்கினிதிக்கிற் புவனம கO
யாமிய வுருத்திராதியாக அதனமரீருக யமதிக
கிற புவனம கO
நிருதியாதி தௌஷ்டரிகனீருக நிருதிதிக்கிற் புவ
னம கO
பௌரூதி சுதாநதருததிர ரீருக வருணதிக்கிற் பு
வனம கO
சீக்கிரருதியாக மேகவாகன னீருக வாயுதிக்கிற்
புவனம கO
நிதிசாரதியாகப் பிரகாச ருததிரரீருகக குபேர
திக்கிற புவனம கO
வித்தியாதிப ராதியாக பலிப்பிரிய ரீருக வீசான
திக்கிற புவனம கO
அவடகடாகததுககுக கீழாக மாயருதி யநதி
வசசிர தேவகடிரனீருகப் புவனம கO
அணடகடாக வோடடுககுமேல் சமபுருததிரா
தியாகத் திரிலோசன ரீருகப் புவனம கO
இவர்களுககுமேலாக வீரபததிரர் பததிரகாளி
புவனம உ
ஆக புவனம் ... கOஅ

அவனிததுவ பிருதிவிததுவம் - க
மொனறு இபபடி வியாபித்திருக்கும்
நிவாததியயன நிவிருததி கலைககு அதிபதி பிரமமா என
றெயவம் வறிக

நிவிர்த்தியெனனுஞ சொற்பொருள் தன்னிடத் தடைநத
பக்குவாக்ளுக்குச் சங்கற்பங்களை விலகித்துத திருப்புவிக்கை
யா னிவிர்த்தியெனக் காரணத்தாறபெயராயிற்று

மேல்பிரதிட்டா கலையில் வியாபிக்கு முறையாவன?

மந்திரங்கள்	வாமதேவம் சிரசு ஆக மந்திர மிரண்டு
மிரண்டு

பதங்கள் மூ	மகேசுர மென்னும் பதமுதலாக அரூபின
வேமூ	அரூபின என்றபதமீறாக பதங்களிருபத
தொன்று

வன்னங்க ளொ	ளகாரமுதல டகாரமீறாக வெழுத்துகளி
லாறு	ருபத்துநாலு

ரண்டு ளகாரம் டகாரம் தம்பெயர் கிளத்தலால் மொ
ழிக்கு முதலாகக் கூறிடதெனவறிக

புர மைம்பத	புவனங்களைம்பத்தாறு, அவையாவன?
தாறு

அப்புத்தத்துவத்தில் அமரேசாதி லகுளீசுர ரீறு
கப்புவனம் ௮
தேயுவில் அரிச்சந்திராதி வைரவ மீறாகப்
புவனம் ௮
வாயுவில் இபக்ஷாதிபராதியாக ஈமேசுர ரீறாகப்
புவனம் ௮
ஆ[illegible]சத்தில் வத்திராபராதி ஈசானவுருத்திர ரீறு
கப் புவனம் ௮
தன்மாத்திரையில் சகலண்டம் துவிரண்டம்
மாகோடம் மண்டலேசுரம் ஆகப்புவனம் ௪
கன்மேந்திரியத்தில் காலசோமம் என்னும்
புவனம் ௧
ஞானேந்திரியத்தில் சங்குகன்ன
மென்னும் புவனம் ௧
மனத்தில் தூலேசுர மென்னும் புவனம் ௧
அங்காரத்தில் தலேசுர மென்னும் புவனம் ௧
ஆகப் புவனம் ... ௮

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆறத்துவாக்களுக்குள் மந்திரமுதலைந்தும் கலையொன்றினை வியாத்தியையுடைய தாதலினாலே, வியாபகமாயிருக்கும் கலைகளுக்கு வியாப்பியமென்றுஞ் சூசிப்பித்துச் சடத்துவாவில் மந்திரத்தட பஞ்சப்பிரமங்களுக்குச் சங்காரக்கிரமம் சத்தியோஜாதாதி யீசானாந்தம்.

நேத்திரம் விட்டுச் சடங்கங்களுக்குச் சங்காரக்கிரமம் இருதயாதி அத்திராந்தம்

பதங்களுக்கு ஓமாதியோமாந்தம்.

வன்னங்களுக்கு க்ஷகாராதி அகாராந்தம்.

புவனங்களுக்குக் காலாக்கினியாதி யநாசிருதாந்தம்

தத்துவங்களுக்குப் பிருதிவியாதி சிவதத்துவாந்தம்

கலைகளுக்கு நிவிர்த்தியாதி சாந்தியதீதையந்தமென்று சிந்தித்துக்கொண்டு, சங்காரக் கிரமத்தில் மந்திரமுதலைந்துங் கலையொன்றினிற்கு முறைமை மூன்று திருவிருத்தத்தால் வகுத்துரைக்கின்றார்.

இது முதல்-கூ-வது, செய்யுள்வரை வெளிப்படை

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இதனை கூ-வது செய்யுளுரையிற் காண்க.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன் சொல்லி வந்த அத்துவாக்களாறில் மந்திரமுதலான ஐந்தத்துவாவும் கலையத்துவாவிலே வியாத்தியாயிருக்கிற முறைமை மேலருளிச் செய்கிறார்.

மந்திரங்கள் முதலெண்ணுங் கலையைந்தில் வியாத்தி - மந்திரங்கள் முதலாக வெண்ணப்பட்ட ஈந்தத்துவாவும் கலைகளைந்திலும் வியாத்தமாயிருக்கும் அதெங்ஙனே யெனின்?—மருவு மந்திரமிரண்டு பதங்களுமே மூந்தங்கிலெழுத்தொன்று புவனநூற்றெட்டெனத் தத்துவமொன்று நிவிர்த்தியினதெய்வம் - நிவிர்த்தி கலையிலே பொருந்தப்பட்ட மந்திரமிரண்டும் பதங்களிருபத்தெட்டும் அதிலே நிலைபெற்று நிற்கும் அக்கரமொன்றும் புவனம் நூற்றெட்டும் பிருதிவி தத்துவமொன்றும் இதற்குத் தெய்வம் பிரமமாவுமாகும்—வாந்தும் மந்திரமிரண்டு பதங்களேழு வன்னங்களொலாறு புரமைம்பத்தாறு தங்கும் தத்துவங்களிருபத்து மூன்று தரும் பிரதிட்டாகலை மாலதிதெய்வதாறும் - பிரதிட்டாகலையிலே யிரண்டு மந்திரமும் இருபத்தொரு பதமும் இருபத்துநாலு அக்கரமும் ஐம்பத்தாறு புவனமும் இதற்குள்ள இருபத்துமூன்று தத்துவமுமாகப் பொருந்தும். இதற்குத் தெய்வம் விஷ்ணுவுமாம்.

இதனாற் சொல்லியது, மந்திரங்கள் முதலான ஈந்தத்துவாவும் கலைகளைந்திலும் வியாத்தமாயிருக்குமென்றும் நிவிர்த்திகலையிலே இரண்டு மந்திரமும் இருபத்தெட்டுப் பதமும் ஓரக்கரமும் நூற்றெட்டுப் புவனமும் பிருதிவி தத்துவமொன்றும் தெய்வம் பிரமமாவுமாகப் பொருந்தி நிற்குமென்றும், பிரதிட்டாகலையிலே இரண்டு மந்திரமும் இருபத்தொரு பதமும் இருபத்துநாலு அக்கரமும் ஐம்பத்தாறு புவனமும் இருபத்துமூன்று தத்துவமும் தெய்வம் விஷ்ணுவும் ஆகப் பொருந்தி நிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மந்திரங்கண்முதற்கலைந்தாங் கல்லையந்தில் வியாத்திமருவு ம-அசுத்தமிச்சிரஞ் சுத்தமென மூவகை யத்துவாக்களு மந்திரங்கள் முதலாக வைக்கப்பட்டு ஒன்றிலொன்று வியாத்தியாய முறையானே பஞ்சகலைகளு ளடங்குமா றெங்ஙன மெனின்?—நிவாத்தி - அவற்று ணிவர்த்திகலையின்கண்,—அவனி தத்துவ மொன்று - பிருதிவிதத்துவ மொன்றும்,—புவன நூற்றெட்டு-நூற்றெட்டுப் புவனங்களும்,—அந்நிலையெழுத்தொன்று-இறுதியாகிய வெழுத்தொன்றும்,—பதங்களேழு-பதங்க ளிருபத்தெட்டும்,—மந்திரமிரண்டும் - மந்திரங்க ளிரண்டுமாக விவைகளி லொன்றிலொன்றாக வடங்குவன;—அயன்றெய்வம் - அதற்குப்பிரமன் றெய்வமாம்— தருமபிரதிட்டைகலை-தரப்பட்டபிரதிட்டாகலைக்கண்,—ஈங்கிடும தத்துவங்கள் இருபத்துமூன்று-தரப்பட்ட தத்துவங்க ளிருபத்துமூன்றும்,—புர மைம்பத்தாறு-புவன மைம்பத்தாறும்,— வன்னங்களாறு-வன்னங்களிருபத்தினாலும்,—பதங்களேழே-பதங்க ளிருபத் தொன்றும்,—வந்திடுமந்திரமிரண்டு-வாராநின்ற மந்திரமிரண்டுமாக விவைக ளொன்றிலொன்றாக வடங்குவன,—மா லதிதெய்வந் தானும் - அதற்குமால் அதிதெய்வமாம்

---

## மறைஞானதேசிகர் உரை.

மேல் வித்தை சாந்திக்கலைகளை யுணர்த்துகின்றார்

வித்தையினமந் திரமிரண்டு பதநாலெந்து விரவுமெ
ழுத் தேழுபுர மிருபத்தேழு,தத்துவமு மோரேழு தய
குமதிதெய்வந் தாவிலுருத் திரனுஞ் சாந்திதன்னி

ல், வைத்தனமந திரமிரண்டு பதஙகளபதினொன்று வ
னனமொரு மூனறுபுரம பதினெட்டாகு, முத்தமமா
ந தததுவமு மொருமூனருகு முணரிலதி தேவதையு
முயரிசனுமே. (அ)

(இ-ள) வித்தை வித்தியாகலையில் அகோரஞ சிகையாக
வின மநதி மநதிர மிரணடு.
ரமிரண்டு
பதநாலந்து பதங்க ளிருபது. அவையாவன? வியாபி
னவியாபினனனனும் பதமுதலாகத தியான
காராயாவெனனும பதமீறுக வெனறறிக
விரவுமெழுத ஞகார முதல் யகாரமீறுந வக்கரஙக
தேழு ளேழு
புரமிருபததே புவனஙக ளிருபத்தேழு. அவையாவன
ழு புருட தத்துவத்தில்
வாமாதி ஏகவீராநதபுவனம கூ
இராகத்தில் பிரசணடசதி யாகச் சிவாநதமான
புவனம ரு
நியதிமுதலிய தத துவஙகளிற குரோதராதியா
க சிகேத ருததிராநதமாக வொவவொனறி லி
ருவராக வெணம ரிருபயாகள அ
மாயையில மகாத ததிமுத லங்குட்ட ருததிராந
தமாகப புவனம அ
ஆகப புவனம் உஎ
த த து வ மு புருடதத்துவமுதல் மாயையீறுகத தத்
மோரேழு துவங்கள் எ
தஙகு மதிதே இதக்கலையை யதிட்டித்துக் கொண்டெ
யவந தாவிருரு மூத்தருளி யிருக்கும் சேடில்லாதிருக்கிற வுரு
ததிரனுகும் த்திர மூாததியாகும்.

வித்தியா கலையென்பதன்பொருள் அத்தை யடைந்திருக்கி றவான்மாக்க ளறிவைப் பிரகாசிப்பிக்கையால் வித்தையென்ப பெற்றபெயர் மேற்சாந்தி கலை

சாந்திகலையில் — சாந்திகலைக்கு மந்திரந் தற்புருடம் கவசைத்தன மந்தி சம ஆக ௨.
ரமிரண்டு

பதங்கள் பதி — நித்தியயோகினேயென்னும் பதமுதல் வினொன்று — யோமவியாபினேயென்னும் பதமீறாகப் பதமபதினொன்று

வன்னமொரு — ம-வ-க-எனவெழுத்து-௩
மூன்று

புரம் பதினெட்டாகும் — சுத்தவித்தியா தத்துவத்தில் வாமைமுதல் மனோன்மனி புவனமீறாகப்புவனம் ௯
ஈசுவரதத்துவத்தில் அநந்தேசுவராதியாகச் சிகண்டியீறாகப்புவனம் ௮
சாதாக்கியதத்துவத்தில் சாதாக்கியபுவனம் ௧
ஆகப் புவனம் ௰௮

உத்தமமாந் தத்துவமொரு மூன்றும் — உத்தமமாகிய சுத்தமாயையிற்றோற்றிய சுத்தவித்தை யீசுரஞ்சாதாக்கியம் ஆகத் தத்துவம் ௩

உணரிலதிதேவனையு முயர்ச றுமே — இக்கலைக்குத் தேவதையைவிசாரிக்கி லீசுவரமோதத்திட்டாதா-எ-று.

சாந்திகலைக்குப்பொருள் இந்தக்கலையை யடைந்திருக்கிற வான்மாக்களுக்குக் கிராகத்துவேஷமில்லாதபடியாலும் சங்கற்பித்த் தனவழிச் செல்லாமற் பரமமான சாந்தியுறுகையால்பெற்ற காரணப்பெயர் (அ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



வித்தையில் இதுவுமது.



## ஞானப்பிரகாசருரை வருமாறு.



வெளிப்படை.



## சிவஞானயோகியருரை வருமாறு.



௬-உரையிற் காண்க.



## நிரம்பவழகியருரை வருமாறு.



மேல் வித்தைக்குஞ் சாந்திக்கும் அத்துவாக்கள் நின்ற முறைமை யருளிச்செய்கின்றார்

வித்தையின் மந்திரமிரண்டு பதநாலைந்து விரவுமெழுத்தே ழு புரமிருபத்தேழு தத்துவமுமோரேழு தங்குமதிதெய்வங் கா வினுத்திரனாகும் - வித்தியாகலையிலே பொருந்தப்பட்ட இரண் டு மந்திரமும் இருபது பதமும் ஏழு அக்கரமும் இருபத்தேழு புவனமும் ஏழு தத்துவமும் இதற்குநிற்கு மதிதெய்வம் விட்டு நீங்காத உருத்திரனுமாகும்.—சாந்திதனில் வைத்தமந்திர மிரண்டு பதங்களபதினொன்று வன்னமொரு மூன்று புரம்பதி னெட்டாகு முத்தமமாந் தத்துவமு மொருமூன்றுகு முன்னில தெய்வ மயீசனுமே - சாந்திகலைக்கு மந்திரமிரண்டும் பதி னொருபதமும் மூன்று அக்கரமும் பதினெட்டுப் புவனமும் நன

மைப பதியினையுடைய தத்துவமூன்றும விசாரித்துப்பார்க்கில் அதிதெய்வம மேலான மஹேசுவரனுமாகும

இதனுற சொல்லியது வித்தியாகலையிலே யிரண்டு மந்திரமும இருபது பதமும ஏழு அக்கரமும இருபத்தேழு புவனமும ஏழு தத்துவமும் அதிதெய்வம உருத்திரனும் ஆகப பொருந்தி நிறகுமெனறும, சாந்திகலையிலே இரண்டு மந்திரமும பதினொரு பதமும மூன்றக்கரமும பதினெட்டுப புவனமும மூன்று தத்துவமும அதிதெய்வ மஹேசுவரனு மாமெனனு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

வித்தையின - வித்தியாகலையினகண,— தத்துவமோரேழு - தத்துவமேழும்,— புரமிருபத்தேழு-புவனமிருபத்தேழும,— விரவுமெழுத்தேழு-விரவுகினறவனனமேழும,—பதங்கலந்த - பதஙகளிருபதும,— மந்திரமிரணடு - மந்திரஙகளிரணடுமாக விவைகளொனறிெனறுக வடஙகுவன,—தாவிலுருத்திர னதிதெய்வமாகும் - அதற்குமுடிவிலதாத உருத்திர னதிதெய்வமாம,—சாந்திதனனில் - சாந்திகலைககண,— உத்தமமாந்தத்துவ மும்மொருமூன்றுகும - உத்தமமாகிய தத்துவமூன்றும,— புரமபதினெட்டாகும - புவனமபதினெட்டும,—வனனமொருமூன்றும - வனனஙகளமூன்றும்,—பதஙகளபதினொன்று - பதஙகளபதினொன்றும,—மந்திரமிரணடு - மந்திரஙகளிரணடுமாக விவைகளினெனறினெனுக வடங்குவன,—உணரிலுயீசனதி தேவதையுமாகும் - உணருமிடத்து தத்றகு மயேசுர னதிதெய்வமாம.

கீழுள்ள குணதத்துவ முதலாயின வற்றுக்கு மிவ்வாறுணர்ந்துகொள்க.

சிவதத்துவத்திற் புவனம் இந்திகை தீபிகை ரோசிகை மோசிகை ஊர்த்துவகாமினி வியாபினி வியோமரூபினி அனந்தை அநாதை அநாசிருதை ஆக ௧௦

ஆக புவனம்-௧௫

தத்துவங்களி ரண்டு — சத்திதத்துவம் சிவதத்துவம் ஆக ௨

மருவு மதித்தே வதையு மனுச தாசிவமாம் — இந்தக்கலைக் கதிட்டாதா சதாசிவதேவ நாயனார்

இங்ஙன மோதியவற்றை முடித்துணர்த்தினனூர்

எய்த்த முறை — இப்படிப் பஞ்சகலை வியாபித்து நின்ற முறை.

மந்திரங்கள் ப — ஈசான முதலிய பதினொரு மந்திரம்
தினொன்று பதங் — மந்திரங்கள் பலவுண்டாயினு மவற்றுட்
க ளெண்பத்தொ — டலைமை யாதலா லிதனையே யோதினார் சி
ன் றக்கரங்களைம் — த்தாகமங்களில் மந்திரம் நேத்திரங்கூடிப்
பத்தொன் றாகு — பனிரண் டென்றுஞ் சொல்லும். கண்ணி
மாயத்தபுர மிரு — லாதவன்போ லெனவறிக
நூற்றே டிருபத்
துநாலா மறிகரு
த்தத்துவ முப்பத்
தாறு கலைகளை
ந்தே

ஓம் நமோ நமவெனனும் பதமுதலான வெண்பத்தொரு பதத்துக்கு அகார முதலாக வெழுத்து முன்னூற் ருருக வாகமங்களிற் கூறும். பஞ்சமுகங்களிற் றோற்றிய பதமந்திரங்க

## ஞானப்பிரகாசருரை வருமாறு

———0———

பொருள் பத்துத் தீக்கைகளிற் பிரசித்தம்

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

அத்துவாக்கள் ஒன்றினொன்று வியாத்தியாய முறை யானே பஞ்சகலைகளு ளடங்குமாறு யாங்ஙனமெனின்? அசுத்தம் மிசிரஞ் சுத்தமெனும் மூவகை யத்துவாக்களும் ஐவகைப் பட்டுப் பஞ்சகலைகளு ளடங்குமாறு சங்காரமுறையின் வைத்தெண்ணி யிவ்வாறு கண்டுகொள்க வென்பதாம்.

மந்திரமுதலியவற்றிற்குக் கலையில் வியாத்தி கூறியது பரம்பரையின் வியாப்பியமாதல் பற்றியாகலான், மேல் ஒன்றினொன்று வியாத்தியென்பதனோடு முரணாமையறிக.

சாந்தியாதீதகலை நீட்டிமைவழி நீட்டல்

இவைமூன்று செய்யுளானுந் தீக்கைசெய்தற்கண் அத்துவாக்க ளொன்றினொன்று வியாத்தியாத லறிந்தடங்குமாறு வகுத்துக் கூறப்பட்டது.

அற்றேல், இறைவனிங்ஙனங் குருமூர்த்தியை யதிட்டித்துநின்று செய்யுந் தீக்கையில் ஏனைமலசத்திகளை யொழித்து அத்துவசுத்தியே மிகுத்துக் கூறியது என்னையென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யுளென்பது

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

மேல் சாந்தியாதீத கலைக்கு அத்துவாக்கள் நின்றமுறைமையும் இந்த அத்துவாக்களுக்குத் தொகையு மருளிச் செய்கிறார்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு

—o—

பொருள் பத்துத் திக்குகளிற் பிரசித்தம்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அத்துவாக்கள் ஒன்றினொன்று வியாத்தியாய முறையானே பஞ்சகலைகளு ளடங்குமாறு யாங்ஙனமெனின்? அசுத்தம் மிச்சிரஞ் சுத்தமென்னும் மூவகை யத்துவாக்களும் ஐவகைப்பட்டுப் பஞ்சகலைகளு ளடங்குமாறு சங்காரமுறையின் வைத்தெண்ணி யிவ்வாறு கண்டுகொள்க வென்பதாம்.

மந்திரமுதலியவற்றிற்குக் கலையில் வியாத்தி கூறியது பரம்பரையின் வியாப்பியமாதல் பற்றியாகலான், மேல் ஒன்றினொன்று வியாத்தியென்பதனோடு முரணாமையுணர்க.

சாந்தியாதீதக்கலை நீட்டும்வழி நீட்டல்

இவைமூன்று செய்யுளானுந் தீக்கைசெய்தற்கண் அத்துவாக்க ளொன்றினொன்று வியாத்தியாத லறிந்தடங்குமாறு வகுத்துக் கூறப்பட்டது.

அற்றேல், இறைவனிங்ஙனங் குருமூர்த்தியை யதிட்டித்து நின்று செய்யுந் தீக்கையில் ஏனைமலசத்திகளை யொழித்து அத்துவசுத்தியே மிகுத்துக் கூறியது என்னையென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யுளென்பது

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் சாந்தியாதீதகலைக்கு அத்துவாக்கள் நின்றமுறைமையும் இந்த அத்துவாக்களுக்குத் தொகையு மருளிச் செய்கிறார்.

சாந்தியாதீதகலை தன்னில்மந்திரங்கள் தானமூன்று பத மொன்று அக்கரங்கள் பதினாறு வாய்ந்தபுர மீரைந்து தத்துவங் களிரண்டு மருவுமதிதேவதையு மனுச்சதா சிவராம - சாந்தி யாதீத கலைக்கு மூன்று மந்திரமும் ஒருபதமும் பதினாறு அக்கர ங்களும் வாய்ந்த புவனங்கள் பதினைந்தும் இரண்டு தத்துவமும் இதற்குப் பொருந்தும் அதிதெய்வம் நிலைபெற்ற சதாசிவமா கும் (மந்திரங்கள் முதலைந்துங் கலையைந்தில் வியாத்தி யென றபக்கத்துக்கு வியாக்கியானம் இவ்வளவும் வந்து முடிந்தது) மேலிந்த அத்துவாக்களுக்குத் தொகை யருளிச் செய்கிறார் — ஏய்ந்தமுறை - இப்படி முன் சொன்ன, வடைவே,— மந்திரங் கள்பதினொன்று பதங்கள்ஐம்பத்தொன் றக்கரங்க ளைம்பத் தொன்றுடு மாய்ந்தபுரமிருநூற்றி ருபத்துநாலா மதித்த தத்துவமுப்பத்தாறு கலையைந்தே - ஆக மந்திரங்கள் பதினொன் றும் பதமைம்பத்தொன்றும் அக்கரங்க ளைம்பத்தொன்றும் ஆராய்ப்பட்ட புவன மிருநூற்றிருபத்து நாலும் அறியப்பட்ட தத்துவ முப்பத்தாறும் கலை யைந்துமாம்

இதனாற் சொல்லியது, சாந்தியாதீதகலைக்கு மூன்று மந் திரமும் ஒரு பதமும் பதினாறு அக்கரங்களும் பதினைந்து புவன மும் இரண்டு தத்துவமும் அதிதெய்வஞ் சதாசிவமும் பொருந்து மென்றும், ஆறு அத்துவாக்களுக்குத்தொகை மந்திரங்கள்-கக என்றும், பதங்கள் - ருக - என்றும், அக்கரங்கள் - ருக - என் றும், புவனம் - உஉச-என்றும், தத்துவங்கள் - ௩௬-என்றும், கலைகள் - ரு - என்றும், ஆக ஆறத்துவாக்களுக்கும் வகை இப் படியென்று முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—0—

சாந்தியாதீத கலைதனில் - சாந்தியாதீத கலைக்கண்.—தத்துவங்க ளிரண்டு - தத்துவங்க ளிரண்டும்,—வாய்ந்தபுர மூவைந்து - பொருந்திய புவனம் பதினைந்தும்,—அக்கரங்கள் பதினாறு - வன்னங்கள் பதினாறும்,—பதமொன்று - பதமொன்றும்,—மந்திரங்க டாமூன்று - மந்திரங்கள் மூன்றுமாக விவை யொன்றிலொன்றாக வடங்குவன,—மன்னுசதாசிவரா மருவு மதிதெய்வமுமாம் - அதற்கு நிலைபெற்ற சதாசிவர் பொருந்திய அதிதெய்வமாம்.—ஏய்ந்தமுறை - பொருந்திய விம்முறையே,— கலையைந்து-நிவிர்த்திமுதற்கலைகளைந்தும்,—அறிதருதத்துவ முப்பத்தாறு - அறியப்பட்ட பிருதிவிதத்துவ முதலிய முப்பத்தாறும்,—ஆய்ந்தபுர மிருநூற்றிருபத்து நாலாம் - ஆராயப்பட்ட காலாக்கினி புவனமுத லிருநூற்றிருபத்திநாலும்,—அக்கரங்க ளைம்பத்தொன்றும் - க்ஷகாரமுதலிய ஐம்பத்தொரு வன்னங்களும்,—பதங்க ளெண்பத்தொன்று - சிவாயநமோ நம முதலிய எண்பத்தொரு பதங்களும்,— மந்திரங்கள் பதினொன்று - சத்தியோசாத மிருதய முதலிய பதினொருமந்திரங்களுமாகச் சங்காரமுறையினவைத் தெண்ணி யிவ்வாறு கண்டுகொள்க வென்பதாம்.

மந்திரமுதலிய வற்றிற்குங் கலையில் வியாத்தி கூறியது பரம்பரையில் வியாப்பியமாதல்பற்றி யாதலான் மேலொன்றி னொன்று வியாத்தியென்பதனோடு முரணாமை யறிக.

இவை மூன்று செய்யுளானுந் தீக்கைசெய்தற்க ணத்துவாக்க ளொன்றினொன்று வியாத்தியாத லறிந் தடங்குமாறு வகுத்துக் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



மேற் சிவ ஞாசாரியனை யதிட்டித்துக்கொண் டநேக யோனியி லுண்டாய்க் கட்டுப்பட்டுப் புவனசதேசத்துக்குக் காரணமாயிருக்கிற சஞ்சித கன்மங்களை மந்திர சாமர்த்தியத்தினாலே புசிப்பித்துத் தொலைத்துப் பிராரத்த கன்மம் புசித்துத் தொலைத்து ஆகாமிய மேருமலு மாணவப்புக் குமபடியையு முணர்த்துகிறார்.

மூன்றுதிறத் தனுக்கள்செய்யுங் கன்மங்கட்கு முனின்லயா மூவிரண்டா மத்துவாவி, னூன்முறைமை யுவையருத்தி யறுத்துமலமுதிர்வித் தருமபருவ மண்டதனுமே யாசானுறுத், தோன்றிநுக ராதவகை முறைசெயகன்மந் துகளறுத்தங் கத்துவாத் துடக்கறவேசோதித், தேனறவுடற் கன்மமனு பவத்தினா லறுத்திங் கினிசெயகன்ம மூலமல ஞானத்தாலிடிப்பன் (க0)

(இ-ள்) மூன்று ஆன்மாக்கள் மூன்று வாசகுக் காயமாகிய
திறத் தனு மூன்று திறத்தினாலே யனுபவ வேறுவாகச்
கக்கள் செய் செய்யும் வினைகட்கு திரண்டு வகையுங் கூறு
யுங் கன்மங்கட் பாடாகும்.

கு

மூன்று திறத்தனுக்க ளென்பது, மூன்றும் வேற்றுமைத் தொகையென வறிக. இக்கருத் தறியாதார் மூன்றென்றது மெலனை விளக்க, விஞ்ஞானகலர் முதலியன மூன்றுபெய ரிட்டதினு மேற்றிக் கூறுவர். அஃது தபசித்தாந்த மாதலால் கூடா தெனக் கொள்க.

முன்னிலையா தனுகரணாதிகளுக்கு முன்னிலையான வஸ்து
ரூபமிரண்டாம துவாவாறினு மமைந்த கன்மங்களை
த்துவாவினை

அன்றமுறைய அமைந் தமைந்த முறையிலே யநந்தக
வெயருத்தி யறு கன்மங்களை யநுவதுவாகப் புசிப்பித்துத்
த்து தொலைத்தவாறே

மலமுதிர்வித் ஆணவ மலத்தைப் பக்குவமாக்குவது செ
து ய்து

அருமபருவம மாணாக்கருக்குக் கிட்டுதற்கரிதாகிய மிகக
டைந்துமே பக்குவ முண்டானவாறே

தேகாதி பிரபஞ்ச மெய்யென்று புத்திபண்ணினவனு
னே மீண்டதனையெல்லாம பொய்யென்று மதித்திந்தச சங
சார சமுத்திரத்தைக கடப்பிப்பான யாரோவென்று தேடு
மறிவுண்டாகையா லரும்பருவமெனச சிறப்பித்தார.

ஆசானாகி சிவ ஞாசாரியனை யதிட்டித்துக்கொண்டு வந்
து பாசத்தைச் சேதமயணுவன அஃதெங்ங
னமெனனில்?

தோன்றி நுக முற் சஞ்சிதத்திற புசித்துச் சேடித்தக
ராதவகை முற்செ னமம புசித்துத் தொலையாதபடியாலே
கன்மத் துகள யநேக யோனிகடோறு மாரசித்த கன
றாத்து ம மந்தமாதலால், புசித்துத் தொலைக்கும
படி வாகீசுரி வாகீசுரிட்டத்தி லோருடலிற்றனே பிறருக்குச
செய்த இமசை சௌரிய முதலியனவற்று லுண்டாகிய வந்
துகளங்களையும வாவி கூவ தடாகமுதலியனவற்று லுண
டாகிய விக கன்மங்களையும வேதத்திலவிதிவழி செய்யப்ப
ட்ட வககினிட்டோமாதிகளாகிய விதாகிதகனமங்களையு மொ
னறொழியாமல் நீக்ஷானுகுணமாக

க்கப்பட்ட மலபரிபாகம் பிறந்தவுடனே சிவ ஞசாரிய மூர்த்தி
யை யதிட்டித்துக்கொண்டு சாந்நித்தியம் பண்ணி,—

நுகராதவகை முற்செய்கன்மத் துகளறுத்து தங்கத்துவாத்
தொடக்கரவே சோதித்து - அத்துவாக்களிலே சஞ்சிசமாயிரு
க்கிற புண்ணிய பாபங்களானவை பக்குவமா யினிப் புசியாதப
டித் துவந்தமறச் சுத்திபண்ணி,—

என்றவுடற் கன்ம மனுபவத்திலறுத்து - பொருந்தின
தேகப்பிராரத்தகன்மபலம் புசிப்பதும - சுவாநுபவத்திலே
யவனுக்குப் பரம்றும்படி பண்ணி —

பரமறுமாறு -புஷ்டிகாரியம் தேககருமமாகவும் சப்தா
திகளை கிரகிப்பது சுரோத்திராதி கருமமாகவும சோகமோக
* ஆஷணிக ளந்தக்கரண தருமமாகவும கண்டு தா னிவை
யிற்றுக்குச் சாக்ஷியாய்ச் சிவனுடன வேறறநிற்கை —

இங்கினிச்செய் கன்ம மூலமல ஞானத்தாலிடிப்பன-இவ்
விடத்து குரு வநுக்கிரகத்துக்குமேல் பண்ணு மாகாமிய கன்ம
த்தையு மாணவ சத்தியையுஞ் சிவஞானத்திலுலே பொடிப
ண்ணுவனென்றதன்பொருள.

* ஆஷணம - சந்தோஷம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

குருவதிகாரணா யிருக்குஞ் சிவன தத்துவசோதனை பண்
ணுமுறைமை யறைகின்றார்.

மூன்று திறத்தணுக்கள செய்யுங் கன்மங்கட்கு - ஆன்மா
க்கள மனோவாக்குக் காயங்களினது வியாபாரப் பிரகாரத்
தாற் புத்தியில வாசனையாய்ப் புகுத்தப் பண்ணுங் கன்மங்கட்
கு,—

முனைவிலையா மூவிரண்டா மத்துவாவின - சஞ்சிதமாயக் குறித்துப் பகுத்தமைக்குத் தானமா மூவிரண்டா மத்துவாவினை,—

ஆன்றமுறையவை யருத்தியறுத்து - அந்தச் சஞ்சித கன்மங்களை யபக்குவங்களை விட்டுப் பக்குவங்களைப் பிராரத்த கன்மமாக்கிப் புசித்துத் தொலைத்து,—

மலமுதிர்வித்து - அந்தக்கன்ம போகதேகசம்பந்தத்தினாலே மலசத்தியை வளர்த்துத் தன்முதிர்ச்சியினாலே யந்தமலசத்தி,—

அரும்பருவ மடைதலுமே - பழுத்துப் பக்குவமாயுள்ளளவில்,—

ஆசானாகி - சிவன் குருவதிகரணாகி,—

தோன்றி - பிரசன்னனாய், (தோன்றி யென்பது நடுநிலைத் தீபகமாதலால்) தோன்றி நுகராதபடி - திரும்பச் சென்மித்துப் புசியாதபடி,—

முற்செய் கன்மத் துகளறுத்து - மலபரிபாகத்தினது தீவிரதரத் தன்மையாற் பக்குவங்களாயும் மாந்தியத்தினால் அபக்குவங்களாயிருந்தாலுந் தீக்ஷாமந்திர சமஸ்காரத்தாற் பக்குவங்களாயுமிருக்கின்ற சஞ்சித கன்ம மலத்தைக் கலைகளிற் பகுத்துத் தீட்சா பலார்க்கலாகங்களாய்ச் சேஷித்து நிற்கவும் நில்லாமலும் சுத்தி பண்ணி,

அங்கு அத்துவாத் தொடக்கறவே சோதித்து - சடத்துவக் கட்டுவிடச் சுத்திபண்ணி சடத்துவாவிற் புகுதப்படுத்துச் சஞ்சித கன்ம மோசனமாகும் சுத்தியே அத்துவ சுத்தி யென்றதாற்பரியம்—

என்ற உடற் கன்மம் - பிராரத்த கன்ம மலத்தை,—

அனுபவத்திலறுத்து - புசிப்பினாற் போக்கி,—

இங்கு இனிச்செய்கன்மம் - தீக்ஷைக்குப் பின் பிராரத்தம் புசிக்குமிடத்துத் தபிமானத்தினாலே வேறும் வைதிகாதி சாத்திரமாத்திரப் பிரசித்த காமிய கன்ம மலம் சிவதன்மியிருந்தீட்சாசுத்தகளிடத்தில் லுவாத்தரையில் விதைத்த விதைபோ லுகப்போம் அல்லால், சிவசாத்திர மாத்திரத்தில் விதித்த கன்மம் பண்ணுதல் விடுதல் நிஷித்த கன்மம் விடுதல் பண்ணுதலென்னும் சுகதுக்கத்த மனோவாக்குக் காய வியாபாரத்தால் சுத்தாசுத்த புத்தியிற் புகுந்தும் புண்ணியா புண்ணிய காமிய கன்ம மலத்தையும்,—

மூலமலம் - தீட்சையிற் சேஷித்த அணவ மலத்தையும் தீட்சா பலாக்க கலாக்கங்களாயப் பரிசேஷித்தும் பரிசேஷியாது மிருப்ப—

ஞானத்தாலிடிப்பன - தானே கற்பித்த சாலம்ப நிராலம்ப புவனபதி விஷய திரிபதார்த்த காப்ப சிவ விஷய ஞானத்திபான காரிய சாக்ஷாத்கார காரணமாகும் சாலம்ப நிராலம்ப புவனபதிவிஷய சமாதி சிவவிஷய சமாதி யிருவித சமாதியினு விலயிப்பிப்பன

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அநாதிமறைப்பாகிய வாணவமலமும் வாதனைபற்றி நிகழுமாகாமியவினையும் ஒளிமுன் னிருள்போல இறைவனது ஞானசத்தியா லொழிதலானும் அவ்வாணவமலத்தை முதிர்வித்தற்பொருட்டு ஈட்டிய முறையானன்றிப் பக்குவமுறையா னுகர்விக்கப்பட்டு எஞ்சிக்கிடந்த கன்மமலமும் அதற்குப் பற்றுக்கோடாய் நிற்கும் முனைவினையாகிய மாயேயமலமும் கிரியாசத்தியா லொழிதலானும். உடம்பு முகந்துகொண்ட பிராரத்தகன்மம

அனுபவத்தா லொழியற்பாலன இங்ஙன மாகலாற் கிரியா சத்தி விருத்தியாகிய தீக்கையா லெஞ்சிநின்ற கன்மங்களையுஞ் சுத்திசெய்தற் பொருட்டு, அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய வத்துவசுத்தியே யீண்டுக் கூறப்பட்டன வென்பதாம்.

இவ்வாறு வருந்தோற்றப்பாலனவற்றை விரிவஞ்சி பொருமுடிபாக வைத்தோதினார்.

இரண்டும் ஒருபொருள் வினையாதற்குரிய வினையுந்தோன்ற அருத்தியறுத்துத் தோன்றியறுத்தென உடன்கூறினார்.

ஆன்றமுறை பக்குவமானமுறை.

மலமுதிர்தலாவது தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்க ளெல்லாவற்றோடுங் கூடிப் பதனழியுஞ் செவ்வி தந்தாதல்.

உயிர் பருவமடைதலாவது அறிவித்தவாறே யறியவல்லுஞ் செவ்விதந்தாதல்.

அரும்பருவமென்றார், எய்துதற்கருமை நோக்கி.

அது வருஞ் செய்யுளிற் பெறப்படும்.

பருவமடைதலுமே யாசானுக்குத் தோன்றியென்றதனானே பருவமடையாதார்க்குத் தீக்கைசெய்தலும் அடைந்தார்க்கு அது செய்யாமையும் பழுதென்பது பெற்றாம்.

இதனானே அத்துவசுத்தியின் சிறப்புக் கூறப்பட்டது.

'உரைதரும்' என்பதுமுதல் வித்துணையுங் குருவாகிவந்துணர்த்தி, என்னும் முதற்கூற்றுப் பொருளை விரித்துணர்த்தியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன் சொல்லப்பட்ட ஆறத்துவாக்களிலும் ஆன்மாக்களுக்குக் கட்டுப்பட்டுக் கிடக்கிற கன்மங்களைக் கர்த்தா புசிப

பிந்தப போககுகிறபடி யெப்படியென்ற மாணாககனுககு மே
லருளிச செய்கிறார

மூன்றுஇறந்த தனுககளசெய்யுங கன்மஙகட்கு முன்னிலை
யா மூவிரண்டா மததுவாவின - மூன்றுவகைப்பட்ட வான
மாககளும அநாதியேசெய்த கன்மஙகள அநாதியே கட்டுப்படு
கைககு முன்னில்லையான வூடாததுவாககளிலே,—அனறமுறை
யடைவயருந்தி யறுததுமல முதிரவிதது - அவரவர செய்ததறகு
த தககதாக வகுததது,அவைததவடைவிலே அவைபிறவைப பு
சிபபிததத துலைப்பிததது,மலததையும் டகருவமாககுவிதது.—
அருமபருவ மடைதலுமே - இநத வானமாககளுககுச சொல
லுதறகரிதான மிககப பககுவமுணடாகவே,—ஆசானாகிததோ
னறி - பரமேசுவரன தனது காருண்ணியததினாலே ஆசாரிய
மூரத்தியாக வெழுந்தருளி வந்து,—நுகராதவகை முறசெயக
னமத தகளயதது - முனபுசெய்யபபட்ட கனமமாய அதது
வாவிலே கட்டுபபட்டுக கிடககிற சஞசிதமான புணணிய பாவ
ஙகளையும இவன புசியாதபடி நாசமாககி,—அஙகத துவாதது
டசகறவே சோதிதது - அநதப பாசநாசம பணணின வவதர
ததிலே அததுவாககளி லுணடான தொநதஙகளையு மறுதது,—
வனறவுடற் கனம மனுபவத்தினாலறுதது - தேகததுககு
அடைநத பிராரதத கனமத்தை அனுபவததினாலே நோககவி
லையாககி,—இஙகு இனிச்செய்கனம மூலமல ஞானததா லிடப
பன-கனமஙகளெல்லாம் போக்கியும சரீரமிருககையாலே மீளவு
மபிராரததமும ஆகாமியமும் வாதனையாலே போகாது, அது
போகைககு இவவிடததிலே மேற் செய்யபபட்ட வாகாமியத
தையும அதுக கேதுவான ஆணவமலத்தையும பரமேசுவரன
தனனுடைய ஞானததினாலே இவனுக கில்லையாககி விடுவன

இதனாற் சொல்லியது, பரமேசுவரன மூன்றுவகைப்ப
ட்ட ஆனமாககளும் செய்தகனமம அததுவாககளிலே கட்டுண

டுகிடக்கிறவையிற்றை அடைவிலே புசிப்பித்துத் தொலைப்பித்து மலத்தையும் பாகம்வருத்தி ஆன்மாவுக்கு மிக்கதொரு பக்குவத்திலே ஆசாரியமூர்த்தியாக வெழுந்தருளிவந்து அத்துவசோதனையினாலே சஞ்சிதத்தையும் அனுபவத்தினாலே பிராரத்தத்தையும் மேல் ஏறுகிற வாகாமியத்தையும் ஆணவமலத்தையுந் தன்னுடைய சிவஞானத்தினாலே போக்குவனென்று முறைமையுமறிவித்தது.

'பலவிதமாசான' என்ற திருவிருத்தமுதல், 'மூன்றுதிறத் தணுக்கள்' என்ற திருவிருத்தமீறாக, எடுத்த திருவிருத்தம் சகலரைப்பற்றியெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், அ-சூ, ங-வெ, "அஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம், பின்னுணர்த்தும்" என்னுமதுங் கண்டுகொள்க.

'உரைதருமிப் பசுவர்க்கம்' என்ற திருவிருத்தத்தில் 'சகலர்க்குக் கன்மவொப்பிற் றரையிலாசான் மூர்த்தி யாகாரமாகித் தரித்தொழிப்பன் மலஞ் சதுர்த்தா சத்திநிபாதத்தால்' என்ற பதத்துக்கு வியாக்கியானம் இவ்வளவும் வந்து முடிந்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மூலமலம் - அநாதிமறைப்பாகிய வாணவமலமும்,—இங்கினிச் செய்கன்மம்-இவ்விடத்து வாசனைபற்றிநிகழும் ஆகாமிய வினையும்,—ஞானத்தாலிடிப்பன்-ஒளிமுன் னிருள்போல விறைவன்து ஞானசத்தியா லொழியற்பாலன,—மலமுதிர்வித்து-அவ்வாணவமலத்தை முதிர்வித்தற்பொருட்டு,—அணுக்கள் மூன்றுதிறத்துச் செய்யுங்கன்மங்கட்கு-ஆன்மாக்கள் மனவாக்குக் காயமென்று முத்திறத்தா லீட்டப்படும் கன்மங்களை,—மூவிர

ண்டா மத்துவாவி லுள்ளமுறை யடையவருத்தி யறுத்து,—ஈட்டிய முறையானன்றி யாரத்துவாவின் பசுத்துவமுறைமையா லுகாவிக்கப்பட்டு ஒருசேரக்கெட்ட கன்ம மலமும்,—முன்னிலைப் பாமருபருவ மடைந்துமே யாசானாகித் தோன்றி யறுத்து-அகர்குட்டறஊங்கொடுத்து நிற்கு முன்னிலையாகிய மாயேயமலமும் பசுத்துவம் வந்தழிக்க குருவடிவாய் வருதலாற் கிரியாசத்தியா லொழிகிற பாலன,—என்றவுடற்கன்ம மனுபவத்திலைவறுத்து-உட்புழுகந்துகொண்ட பிராரத்த கன்ம மனுபவத்தா லொழிந்தபாலன,—நுகராதவகை முற்செய்கன்மத் துகளறுத் தங்கத்துவாத்கொட்டகத்தைவ சோதித்து - இங்ஙனமாகலாற் கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையா லொழிகின்ற கன்மங்களைச் சுத்திசெயற்ற பொருட்டு அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய அவ்வத்துவாசுத்தியே யீண்டுக் கூறப்பட்டன

இதனுனே யத்துவா சுத்தியின் சிறப்புக் கூறப்பட்டது 'உரைதரும்' என்பதுமுதல் விதத்தினையும் 'குருவாகி வந்துணாத்தி' என்னுமுதற்கூற்றுப் பொருளை விரித்துணாத்தியவாறு



அ-ரு, முதலதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை

மேலிந்தத் தீக்கையிற் சிறப்பு பரமமுத்தி யடையப்படா
தென்பதூஉம் புறச்சமயத்தினக ணின்றுஞ்சத்த
னமா றுட்டானத்திலேல் சைவசமய வதிகா
ரியாவ னென்பதூஉ முணாத்துகின்றார்

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாசிரம, வறத்துறை

களவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைக
ளயலறிந்து மாரணங்களபடித்துஞ், சிறப்புடைய
புராணங்களுணர்ந்தும் வேதச் சிறப்பொருளை மிகத்
தெளிந்துஞ் சென்றாற் சைவத், திறத்தடைவரிதற்சரி
யை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவ
னடியைச் சேர்வர். (௧௧)

(இ-ள்) புறச்சமய நெறிநின்றும — உலோகாயுதம் பௌத்தம் ஆருகதம் மீமாஞ்சம் மாயாவாதம் பஞ்சராத்திரமென்னு நூலமாகிய புறச்சமயங்களாறில் நின்றும்,

அகச்சமயம்புக்கும — சைவம் பாசுபத[illegible] வாமம் வைரவம் மாவிரதம் காளாமுகம் என்னுஞ் சூக்குமமாகிய உட்சமயங்களாறினும் புகுந்தும்,

புகன்மிருதி வழிபுழன்றும — மனுமுதலிய வாசாரியர் சொன்ன தருமசாத்திரம் பதினெட்டின்வழி யனுட்டித்தும்

அவையாவன? "மனுவே யத்திரி-சங்கு வாசிட்டமியமம் அங்கிரசம்-யோகீசுரமே வருணம் பராசரஞ்-சாதாதவமே சமவாத்தமமே-யுசநசம் லிகிதம் விட்டுணுத்தட்சமம்-பிரகற்பதிகௌதமே கவுதமமென்றே கட்டுரைசெய்வர் அவர் பதினெண்மர்" மிருதியைப் பண்ணினார் பெயரால் என்வறிக.

புகலுமாச்சிரம — வேதத்திற் சொன்டாடிச் சொல்லப்பட்ட வறத்துறைகளாகின்ற பிரமசரிய முதலியன வாச்சிரமங்களை யடைந்தும் களநான்கின்வழியின் றனுட்டித்தும்

அவையாவன?

பிரமசரியம் நயிட்டிகம் பௌதிகம் என இருவிதமாம்.

இல்லறம் சாதகன் உதாசீனன் என இருவிதமாம்.

வானப்பிரஸ்தம் சபத்தினிகன் விபத்தினிகன் என விருவிதமாம்

சன்னியாசம் வித்துவான் விபித்சு தவசுவி என மூன்றுவிதமாம்

இந்நான்கு வைதிகத்தில் ஒவ்வொன்றை நந்நான்காக்கிப் பதினாறாகக்கூறும். அவையாவன?

காயத்திரம் பிராமம் பிராசாபத்தியம் நைட்டிகம் எனப் பிரமசாரிய நான்கு

வார்த்தா விருத்திசாலீந விருத்தியாயாவரம் கோசாரம் எனக் கிரகபதியும் நான்குவிதமாம்.

வைகானசம் வாலகில்லியம் தேனபம் ——————— என வானப்பிரஸ்தம் நான்கு விதமாம்

வேகூதகம் குடீசகம் அங்கிசகம் பரமஅங்கிசகம் எனச் சந்நியாசமும் நான்குவிதமாம்

அருந்தவங்கள் புரிந்தும — அனுட்டித்தற் கரிதாகிய பஞ்சாக்கினி முதலியவற்றினை ஈரிடத்துச்சலிச்செய்து,

அருங்கலைகள் பலதெரிந்தும் — கற்பதற் கரிதாகிய கலைஞானங்களை யாராய்ந்தும் "கற்றிலேன் கலைகள் பலஞானம் இடைமருதுறை யெந்தைபிரானே" என்னுந் திருவாக்கானுணர்க.

ஆரணங்கள் படித்தும — "நால்வகை வேதம் இருக்கு தயித்திரியம்-சாமம் அதர்வணமெனச் சாற்றினர் புலவர்" எனக்கூறிய வேதங்களைச் சந்தையிரட்டை முதலியன விலக்கணத்தோ டோதியும

சிறப்புடைய புராணங்களுணர்ந்தும — சிறப்புடைய பதினெண் புராணங்களை யுணர்ந்தும். அவையாவன?

பிரமம பாதமம வயிணவமே - சைவம பாகவதமென ச சாரவருகாலம - நாரதம மாாககம ' டேயமாககினேயகு- கைவாதத மிலிஙகம வராகங-காநதம வாமனங கருடிற கூா மம - மசசியங காருட மதிககிற பிரமாணடம-பதினெண புரா ணம பணணினா புலவா.

**வேதச சிறப** வேதாநதததிற சொலலிய உபநிடததுக பொருளை மிகுத கள முப்பததிரணடினையு மோதித தெளிந தெளிநதும தும அவையாவன?

பிரககாரணயம சாநதோககியம கடவலி முணடகம மா ணடூகியம தைததிரியம் சாபாலம பிரகதசாபாலம அதாவசி ரசு அதரசிகை பிரமமோபநிடதது கைவலலியம சுவேதாசு வதரோபநிடதது நாராயணோபநிடதது காலாககினியுருதரோபநிடதது சாவசஙகறபம சுரிகை யுருததிரோபநிடதது ஈசோவாசோபநிடதது நாரசிஙகம தாமோபநிடதது சுவரோ பநிடதது கோபாலோபநிடதது பரம அமசோபநிடதது சாபா லோபநிடதது வாசுதேவோபநிடதது காநிசாகை கௌஷீப ம பாரததுவாசியம.

**சென்றுறை வைத திறத தடைவா** இவாகள காட்டோறு மனுட்டிதத தபோ பலததாலே சைவசிததாநதமாகிய காமிகா கம மிருபததெடடையு மதிகரிததற குரிந தாவாகள

**இதற சரியை கிரியா யோகஞ செலுததியபின** இங்ஙனங் கூறிய வாகமஙகளிற சொல லியபடியே ஞானாசாரியனிடத்தில தீக்ஷை பெற்றுச சரியை கிரியாயோக மிவை களின வழிநின றனுட்டித்த தபோபலத்தி னாலே கிரியை யென மருவுமவையாவு ஞானங கிடைததற கு நிமித்தமெனக கொள்குமென வறிக.

ஞானத்தால் ஞானத்திலே தானே பரம முத்தியை
சிவனடியைச் யடை-வார் எ-று
சேர்வார்

இதற்கு யோகசூத்திரஞ் சிந்தியவிசுவஞ் சுப்பிரபேதம்
தேவிகாலோத்தரம் சைவபுராணத்து மறிக (௪௧)

---

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.

—o—

மேலிந்த மலபரிபாகம் வருமாறு கூறுகின்றது

புறச்சமய நெறிநின்றும் - வேத * பாஹ்யமான பௌத்தாதி மதங்களிலே பிரவேசித்து அந்தந்த சாஸ்திரங்கள் சொன்ன படி தவம் பண்ணியதனால்,—

* பாகியம் - வெளிப்பட்டது,

அகச்சமயம்புக்கும் - தருமாதியான சதுர்வித புருஷார்த்தத்தையுஞ் சொல்லும் வைதிகத்திலே பொருந்தி,—

புகன்மிருதிவழி யுழன்றும் - ருஷிகளாற் பண்ணப்பட்ட ஸ்மிருதி யுக்தாநுஷ்டான மார்க்கத்திலே நின்று வருந்தியும் மற்று முதலியன,—

புகலு மாச்சிரம வறத்துறைகளனைத்து மருந்தவங்கள் புரிந்தும் - மேலும் மநுஸ்மிருதியிலே சொல்லும் பிரமசரிய கிரகஸ்திய வானப்பிரஸ்த சந்நியாசமென்னு மாச்சிரமங்களை யடைந்து தந்தவாச்சிரமங்களுக்கேற்ற கருமங்களை யநுஷ்டித்தும்,—

அருங்கலைகள் பலதெரிந்தும் - வேதாங்கங்களாகிய வியாகரணாதி சகலஞானங்களை யுணர்ந்தும்,—

ஆரணங்கள் படித்தும் - வேதாத்தியயநத்தைக் குறைவறப் பண்ணியும்,—

சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் - அஷ்டாதச மகா புராணங்களையு மறிந்தும்,—

வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்தும - வேதாந்த சிரவண மனந † நிதித்தியாசநங்களைப் பண்ணியும்,—

சென்றால்-இவ்வாறு உத்தரோத்தர மாகச் சநநங்கடோறு மப்பியாசம பண்ணிவந்தால்,—

சைவத் திறத்தடைவர் - அந்த புண்ணிய பலத்தினாலே சைவ சமயத்தைப் பொருந்துவார்கள —

இதிற சரிதைகிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர் - இந்தச் சைவத்தில் சரிதை கிரியை யோகமென்னும மூன்று வித்தையையுங் கிரமத்திலே யநுஷ்டித்தவை யிறுதிகளின் பலமாகிய சாலோக சாமீப சாரூபங்களை யடைந்த பின்பொரு சன்மத்திலே யாசாரியனுடைய வநுக்கிரகத்தினாலே சிவ சாயுச்சியத்தை யடைவார்களென றிதனபொருள்

† நிதித்தியாசநம - தியானம்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவசமாதி சித்தாந்தத்தனறிச சேரப்படாதென்று செப்புகின்றார்.

புறச்சமய நெறி நின்றும - உலோகாயதம பௌத்தம ஆருகம மீமாமசம மாயாவாதம பாஞ்சராத்திரம என்னும புறச்சமயங்களினின்றும,—

புகன் மிருதி வழியுழன்றும் - அப்பொருள்வழி பொருந்தி யபோய்,—

வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றால்,—

அகச்சமயம-சைவம் பாசுபதம வாமம் வைரவம் மகாவிரதம காளாமுகம என்னு முளளறுசமயம்

புகலும்,—

பின்னைச் சைவத்திறத்தடைவர் - சைவசித்தாந்தத்திற் பிரவே
சிப்பர்

இதில் எனப் பொருள் வழி பொருத்திப் பொருளுரைக்க. ப
த்தக்கிரமத்திற் பொருளுரைத்தாற் சமயக்கிரமம் மாறுபடும்,—

ஞானத்தால் - சிவ தீக்ஷாங்க நிராலம்ப சிவ சமாதியி
னால்,—

சிவனடியைச் சேர்வர் - சிவசத்தி சமானமாய்த் தமது சி
ற்சத்தி விரிவு திருத்தி யிருப்பார்கள்.

போகமாத்திரத்தை நிமித்தீகரித்தவரு மலபரிபாகத்தி
னரும், மலபரிபாகமாத்திரத்தை நோக்கிவருஞ் சிவசத்திநிபாத
த்தரும், சிவதீக்ஷானுக்கிரகத்திற்கு, ஞானத் தியான சமாதி
சிவனமுத்தி சாட்சாத்காரக்குறித் திட்சாங்கத்தருக்கும், மோ
க்ஷத்தருக்கும், சாதிக்கிரம மாச்சிரமக் கிரமஞ் சமயக்கிரமங் கா
லதேசக்கிரமங் கருதி வருத லில்லாமையாற் சமயக்கிரமத்தினி
னறு சைவத்திறத் தடைவரெனபது தந்திரமனறு

சகல சமயிகளுக்கு மிலிங்கோத்தாரஞ் சைவத்திறசொல்
லுதலால், சைவத்து வாதல்லது பரமுத்தி சித்தியிலலை, பத்மு
த்தியென்று தாற்பரியம்

மறறைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனி, மனனுமருள ஞ்னாச்சி' எனறு மிரண்டாங் கூற
றினை இருபத்தைந்து செய்யுளான விரித்துணர்த்துகினறா

மேற்கூறிய அரும்பருவமடைதல், இங்ஙனஞ் சோபானமு
றையாற பலபிறவிகளின் மேற்பட்டு நிகழ்ந்து முற்றுப்பெறுவ

தனறி, ஒருஙகே யொருகாலத்தது முற்றுபபெறுவ தனறெனப
காம

சைவததிறமெனறது சைவககூறறின முடிபாகிய சிததா
நத சைவததை.

செனறுசெலனபது சேறலருமை விளககி நினறது

இதனுனே மேறகூறிய பருவமடையுமுறைமை கூறுமுகத
தான மனனுமருளெனறகண வகையும் அவறறிறகு வாயிலிவை
யெனபதூஉம வகுததுக கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படி முன சொல்லப்பட்ட சிவஞானம் ஆனமாக்களு
ககு உண்டாமபடி யெப்படியென்ற மாணுககனை நோககி மே
லருளிச்செய்கிறார்.

புறசசமய நெறிநினறும் - உலகாயதன முதல் பாஞ்சராத்
திரியீறுகச சொலலப்பட்ட புறச்சமயஙகளிலே செனறுசென
று அநதநத சாஸதிரஙகு சொனன முறைமையிலே யனுட்டித
தும,—அகசசமயமபுககும் - உட்சமயமாகிய பாசுபதம மாவிர
தம காளாமுகம வாமம வயிரவம எனறுசொல்லப்பட்ட அநத
நதச சமயஙகளிலே புகுநது அந்தநதச் சாததிரஙகள சொனன
முறைமையிலே யனுட்டித்தும்,—புகலமிருதி வழியுழனறும -
சொல்லப்பட்ட மிருதிவழிகளிலே திரிந்தும்,—புகழுமாசசிரம
வறததுறைகளவையடைந்தும்-கொண்டாடப்பட்ட ஆசசிரம
மான தனம நெறிகளைச செய்தும்,—அருந்தவஙகள் புரிநதும்-ப
ஞசாக்கினியை முதலானஅரிய தபசுகளைவிரும்பிச் செயதும,—
அருஙகலைகள் பலதெரிநதும் - அரிய சாத்திரங்கள பலவுமோதி
யுணாந்தும்,—ஆரணஙகளபடித்தும்- வேதங்களையோதியும,—

கிருபையுடைய புராணங்களுமாகிறதும் - நவமைப் பகுதிகளைச சொல்லுகிற புராணங்களை யோதியறிகிறதும்,—வேதசிரபொருளை மிகத்தெரிகிறதும் - வேதாந்தத்தினர்த்தங்களைமிகவும் ஆராய்ந்து இதுவே யதர்மென்று அறுதியிட் டறிகிறதும்,—சென்ற சைவத்திறத்தடைவர் - இவையிற்றை வழுவறச்செய்து முடித்த்து யாதொரு ஜனனம், அந்த ஜனனம்போய மற்ற ஜனனத்திலே சைவநெறியைச் சென்று பொருந்துவார்கள் —இந்தச் சரியைகிரியாயோகஞ் செலுத்தியபின் - இந்தச் சமயத்திலே நின்று சரியை கிரியாயோகங்களைச் செய்து அவையிற்றின் முதிர்சசியினாலே ஞானத்தைப்பெற்று,—ஞானத்தால் சிவனடியைச சேர்வர் - அந்த ஞானத்தினாலே சிவனுடைய ஸ்ரீபாதத்தைப் பொருந்துவார்கள்.

என்னவே கிரியையாலே மோக்ஷமென்ற சைவரை மறுத்து ஞானத்தினாலே மோக்ஷமென்றதெனக் கொள்க

இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம், "பல்பணி ஞான காரணமெனவிற் றொல்பணி தொறும்பயன் றொடுபதனுலு-மொருபணிசெய்யாச சிரபுரச் சிறுவரு-மரசராய தருணததலைவரு-முதிர்பரசமையத் திருமுறுமரசரு - ஞானம்பெற்ற நனையினுலு-மீனமில்பணியருட் கேதுவன்றன்றெல- ஞானேற்பத்தி நிமித்தமித்தொழிலென- வேறேறகிறைறு வியம்பிற றெனனும்" என்றும், சிவஞானபோதம், அ-சூ,க-வெ, "தவஞ செய்தா ரொன்றுந்தவலோகஞ் சார்ந்து, பவஞ்செய்து பற்றறுப்பாராகத் —தவஞ்செய்த, நற்சாரியில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக், கற்றூர்சூழ் சொல்லுமாறு கண்டு" என்னுமதுங் கண்டுகொள்க.

இன்று சொல்லியது, உலோகாயதன், புத்தரில் சவுத்திராந்திகன் யோகாசாரன் மாத்தியமிகன் வைபாடிகன், அமணரி

ல்நிகண்டவாதி ஆசீவகனை, மீமாஞ்சரில் பட்டாசாரியனை பிரபா
கரனை லோகாயதிகனை மாயாவாதி பாற்கரியனை நிரீச்சுரசாங்கி
யனை பாஞ்சராத்திரி ஆகப் புறச்சமயத்திற் பேதம் பதினாறும்;
அந்தந்த முறைமைகளிலே நின்றும், பாசுபதம் மகாவிரதம் கா
ளாமுகம் வாமம் வயிரவம் என்கிற உட்சமயத்திற் பேதம் ஐந்
திலும் புக்கு அந்தந்த முறைமைகளிலே நின்றும் 'புகல் மிருதி'
என்ற பதமுதல் 'வேதசிரப்பொருளை மிகத்தெளிந்தும்' என்
ற பதம் ஈறாக உழன்றும் அடைந்தும் புரிந்தும் தெரிந்தும் படிந்
தும் உணர்ந்து மிகத்தெளிந்தும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட
முறைமைகளை வழுவறச்செய்து முடிந்தால் சைவநெறியைப்
பொருந்துவாரென்றும், இதிலே நின்று சரியைகிரியை யோ
கங்களை யனுட்டித்தால் அந்தமுதிர்ச்சியினாலே ஞானமுண்டா
யந்த ஞானத்தினாலே சிவனுடைய ஸ்ரீ பாதத்தை யிரண்டறச்
சென்று பொருந்துவார்கள் என்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

புறச்சமய நெறிநின்றும் - புறச்சமய நூல்வழியே யொழுகியும்,—அகச்சமயம் புக்கும் - அகச்சமய நூல்வழியேசென் றொழுகியும்,—புகல்மிருதி வழியுழன்றும் - சொல்லப்பட்ட மிருதி நூல்வழியே சென்றொழுகியும்,—புகலுமாச்சிரம வறத்துறைகளவையடைந்தும்-வேதங்களிற் கூறியவாறு ஆச்சிரம தருமங்களிற்குறைவின்றியொழுகியும்,— அருந்தவங்கள் புரிந்தும் - செயற்கரிய தவங்களைச்செய்தும்,—அருங்கலைகள் பலதெரிந்தும்-அரிய கலைஞானங்களைப் பலபயின்றும்,—ஆரணங்கள் படித்தும் - வேதங்களை யோதியும்,— சிறப்புடைய புராணங்களுணர்

நதும - சிறப்புப் பொருந்திய புராணங்களை யறிந்தும்,—வேதச் சிறப்பொருளை மிகத் தெளிந்தும - உபநிடதப்பொருளை மிகவு மாராய்ந்து தெளிவுறலும்,—சென்ற சைவத்திறத்தடைவா- இங்ஙனஞ் சோபான முறையாற் பலபிறவிகளினு மேறப்பட்டு நிகழ்ந்து சென்ற சைவக்கூற்றின் முடிவாகிய சித்தாந்த சைவத்தைத் தலைப்பட்டுவா,—இதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்திய பின-இச்சித்தாந்த சைவத்தினுஞ் சரியைகிரியா யோகங்களை யனுட்டித்து முனியபின் — ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர-ஞானத்தைப்பெற்று அதனாற் சிவனருளைச் சேர்வருக்கின மேற்கூறிய பருவமடைதல் ஒருங்கே யொருகாலத்து முற்றுப பெறுவதன்று.

இதனானே மேற்கூறிய பருவமடையு முறைமை கூறுமுகத்தான மனனுமருளென்றதன்* வகையும் அவற்றிற்கு வாயி லிவை யெனபதூஉம வகுத்துக் கூறப்பட்டன.

## மறைஞானதேசிகர் உரை



ஒருதலை துணிதலென்னுந் தந்திரவுத்தியா லுலோகாயதன்
முதலியோர் முத்திச் சிறப்பினையுஞ் சித்தாந்த
முத்தியே பரமுத்தியென்று முணர்த்துகின்றார.

இம்மையே யீரெட்டாண் டெய்தியெழிலாரு மேந்திழையார முத்தியென்று மிருஞ்சுவர்க்கமுத்தி, யம்மையே யென்றமுத்தி யைந்துகந்த மறக்கெடுகை யென்றுமட்ட குணமுத்தியென்று, மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தியென்றும் விவேகமுத்தி யென்றுநதன் மெய்வடிவாஞ் சிவத்தைச், செம்மையே

பெறுகைமுத்தி யென்றுஞ்செப்புவர்கள் சிவனடியாய
ச் சேருமுத்தி செப்புவதிங்கியாமே. (௧௨)

(இ-ள்) இம்மை யேயீரெட்டாண்டெய்தி யெழிலாரு மோக நிழைபார் முத்தியென்றும் — இந்தவுலகத்தின மடந்தைப் பருவமுடைய மாதருடன்கூடி யவருட னூடுத லுணர்த்த ல் பிரிவுறாவிட்டு வாடுதல் வணங்குத லிவைகளை யரிய தபசுபண்ணுத லவர்களிடத்தி லுண்டாகிய சுகத்தை யடைகிறதே முத்தியென்றும்

இருஞ்சுவர்க்க முத்தி யம்மையே முத்தியென்றும் — வேதத்திற் கிரியாபாகத்தைப்பற்றி யனுட்டிக்கு மீமாஞ்சகர் சோதிட்டோம முதலிய வனுட்டானத்தாலே யொரு கன்ம முண்டா யதுதானே பலத்தைக் கொடுக்கும், சுருதி வாக்கியார்த்தமாகிய சத்தமே தேவதையொழிந்து வேறொரு தேவதை கன்மபலத்தைக் கொடுக்க வேண்டுவதில்லை சுவர்க்கத்தை யடைகிறதே முத்தியென்றும்

கந்தமைந்து மறக்கெடுகை யென்றும் — புத்திதத்துவ முதல் ஒழுளை (?) தத்துவங்க ளடங்கலும் க்ஷணிகமாயிருக்கும், ஆன்மாவு மீசுரனு மெனப் பொன்றில்லை, முத்தி புத்தி னுடையதா யிருக்கிற கட்டமேயென்று,

ரூபக்கந்தமும், சுகதுக்க ரூபமாயிருக்கிற புத்தியினுடைய சந்ததியென்னும் வேதனாக்கந்தமும், யாதொன்றுக்கு யாதொரு சங்கேதக் கூட்டங்களுடைய சத்தத்தின் சஞ்ஞாக்கந்தமும், ஞான மிடைவிடாம லிருக்கிறதே ஞானக்கந்தம், இந்த ஞானத்தை விசேடித்தறிகிற சந்ததியே விஞ்ஞானக்கந்தம், ஆக விந்தப் பஞ்சக்கந்தங்களும் ரோகக் கெடுகிறதென் றறிகிற பிந்த நூலை யுபதேசித்த சுகத பகவானையே வழிபடுகை முத்தியென்றும்

அட்டகுணமு தலிவென்றும — அருகசாதகிரீஞ சொல்லிய அநந்தஞானம அநந்ததரிசனம அநந்த வீரியம அநந்த சுகம நிர்நாமம நிட்கோத்திரம நிராயுஷ்யம சகலசமயிபகபாவம எனக்கூறிய குணங்களொட்டு.

இது தொகை

அதனை வகுத்தறியில் அநந்தஞானம் ஐந்துவகைப்படும் அஃதாவது? மிதி சுருதம் அவதி மனபரியாயம கேவலம எனவரும இதனை ஞானுவர்ணிய மெனபாகள்

இனித் தரிசனுவர்ணியம ஒன்பது பேதப்படும அவையாவன? சட்சுதரிசனம அசட்சுதரிசனம் அவதிதரிசனம கேவல தரிசனம நித்திரை நித்திராநித்திரை பிரசலை பிரசலாபிரசலை திபானககிரந்தியென வரும.

இனி வேதநீயம இரண்டு சாதவேதநீயம் அசாத வேதநீயம் எனவரும்.

ஆயுஷியம் நாலு, தேவாயுஷியம் திரியககாயுஷயம மனுஷயாயுஷபம நரகாயுஷ்யம எனவரும.

இனி மோகனுவர்ணிய மிருபதெட்டு மித்தியாதத்துவம மிகவு மிதியாதத்துவம் சமமியகம பிரகிருதி அநநாணுசந்திகுரோதம மானம மாயாலோபம் அப்பிரதி யாசகியானதிகுரோதம சசுவலனம் அதிக்குரோதம் அதிமானம அதிமாயம் அதிலோபம் சிரிப்பு அரதிருதி சோகம பயம் நிந்தை மாதாவேதம புருடவேதம் அலிவேதம சதுராவலோகனம் மாதிருதரிசனம் சாகாகிரகணதரிசனம் ஞானம் எனவறிக.

நாமக் தொண்ணூற்று மூன்றுபேதப்படும். உமயம சநதம இரசம் பரிசம உத்தியோகம் உச்சுவாசம் வாதாமபரியாததி அபரியாத்தி ஆககுமலியாததி பிரசித்தம் அப்பிரசித்தம சேவக தற்பக அதேய அநாதேய சாக்காய சகிர்தி அபகீ

தி அருரு இவத உபகாதா பரகாதா ஊறுபூாவி இதமுடலா கப பிண்டாபிண்ட பிரகிருதி பேதத்தினாலே யவைகளை யறிக.

இனி கோத்திரமிரண்டு உயர்ந்த கோத்திரம் தாழ்ந்த கோத்திரம் எனவரும்

இனி அந்தராயம் அஞ்சுபேதம், தானாந்தராயம் இலாபாந்தராயம் போகாந்தராயம் உபபோகாந்தராயம் வீரியாந்தராயம் எனவரும்

இந்த வட்டவித கன்மத்தை விசாரித்தறியில் நூற்று நாற்பத்தெட்டென வறிக.

இதனைமேல் விரிக்கிற் பெருகுமென வறிக.

| | |
|---|---|
| மெய்ம்மையே<br>பாடாணம்போ<br>ல்கை முத்தியெ<br>னறும | உண்மையாகவே கருவிகரணாதிகளொல்லா<br>ங் கழிந்து பாடாணம்போலே கிடக்கிறதெ<br>னும் பாடாணவாதி முத்தியும் |
| விவேகமுத்தி<br>யெனறும | மாயாவாதி சமுத்திரத்தி னிடத்திலே தி<br>ரைதோன்றி யதிற்றானே யொடுங்குமாறு<br>போலப் பிரமத்தி னிடத்திலே சகத்துத்<br>தோன்றி யதிலேதானே யொடுங்கு மாயையிற் காட்டில வில<br>ட்சணமான பிரமசுரூபத்தை வேதாந்த ஞானத்தினாலே விவே<br>கித் தறிகிறதே முத்தியெனபதும் |
| தன மெய்வடி<br>வாஞ்சிவத்தைச்<br>செம்மையே பெ<br>றுகை முத்தி | சிவசமவாதி யான்மாவுக்குச் சுபாவமா<br>ன சைதன்னியத்தின் முறைமையினையும் சி<br>வனது சீர்பாதத்தினையுந் தானினைதலையு மி<br>ன்றி மயக்கத்தாற் றன்னையே சிவனென<br>மதிக்கு முத்தியும் |
| என்றுஞ்செப<br>புவர்கள் | உமையாற் சங்கிராந்தமாகிய பாசுபத<br>முத்தியும் சமாவேசமாகிய காபாலமுத்தி |

காலாந்தரத்திற் றிரும்பு மதுவு மாகாது சித்தாகிய சிவனிடத்திலே மலரகிதரூப வானமாத தோன்று மெனில்? யாதொன் றநேகமுமா யுறபத்தியையு முடைத்த தது நாசமடையா இந்த மாவிரத முத்தியன்று.

இப்படிச் சமயங்கடோறு முத்தியைப் பலவாகக் கூறும தன்மை மெய்யென்று கருதிப் பலங்கொள்ளக் கருத வெத்தனையைக் கொடுக்குமெனனில்? அக்கினியை விரும்பினவன மின்மினியி னிடத்த தத்தனைப் பெறுவோமென முறைப்படி மதறகொடுக்கும அவைகளெல்லாஞ் சிருட்டிகாலத்தில் அழிந்துபோகிற முத்திகள அழியாமுத்தி யாதெனின?

சிவனடியைச — தீக்கையில் மும்மலங்களையுஞ் சோதித்து
சேருமுத்திசெப் — ச சிருட்டிகாலத்தில் கீழே திரும்பாமல் சிவ
புவதிவகியாமே — னைப்போல சாவஞ்ஞத்துவா ஷட்குணங்க ளபிவியத்தமாகிறதே யானுசொல்லும பாமுத்தி எ-று. (கஉ)

செம்மையே பெறுகையென்னும் ஏகாரந் தேற்றம.

யாமே - சுற்றசை

யாம் - எழுவாய் செப்புவம்-பயனிலை

இதற்குச் சித்தியம் மிருகேந்திரம் சிவாசம "ஞானமகச் சேதோ" என்னுஞ் சுலோகத்து மறிக.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் பரமதமுத்தியைத் தூஷித்து ஸ்வமதமுத்தி கூறுகின்றது.

இம்மையே யீரெட்டாண் டெய்தி யெழிலாரு மேல்நிலை யார் முத்தியென்றும்- இதுமெய்யுள்ளது, பரமென்பதில்லை, சுயா

க்கம் நரகமென்ப தேசெனவில்* மஜ்ஜன போஜன கந்த புஷ்பாதி சௌக்கியமே சுவர்க்கம், இவைகளின்றி தரித்திரத்தினாலும் வியாதியினாலும் பீடிக்கப்படுகிறதே நரகம், அழகையுடைத்தாகிய அவயவங்களை யுடைத்தாய பதினாறு வயதாய † மதனகலா வல்லபைகளாயிருக்கிற ஸ்திரீகளுடனே கூடி யநுபவிக்கிற வேளையில் ‡ நீவி விடுகிறதே மோக்ஷ மென்னும் லோகாயதனும்,—

* மஜ்ஜனம் - ஸ்நாநம், † மதனகலாவல்லபை - மன்மதநூலில் கெட்டிக்காரி. ‡ நீவி - தாணிமுடிச்சு.

இருஞானவறக முத்தியமைவேயென்றும் - வேதோக்தக் கன்மானுட்டானங்களினாலே யிந்தப் பூதபரிணாம தேகத்தை விட்டு திவ்விய தேகியாய் மறுமையிலே பெரியபோகத்தை யுடைத்தாகிய சுவர்க்கத்தை யடைவதே மோக்ஷமென்னும் பூர்வமீமாம்சகனும்,—

ஐந்து கந்த மறக்கெடுகை முத்தியென்றும் - ரூபம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமாகிற பஞ்சஸ்கந்தமும் § சந்தானமின்றியில் நிச்சேஷமாகக் கெடுகிறதே மோக்ஷ மென்னும் பௌத்தனும்,—

§ சந்தானம் - பரம்பரை.

அட்டகுண முத்தியென்றும் - அனந்தஞானம் அனந்ததரிசனம் அனந்தவீரியம் அனந்தசுகம் நிர்நாமம் நிர்கோத்திரம் நிராயுஷியம் சகலசமயத்தீதா பாவமென்னு மெண்குணப் பிராப்தி மோக்ஷமென்னுஞ் ஜயினனும்,—

மெய்ம்மையே பாடாணம்போல்கை முத்தியென்றும் - ஆத்மா சடமாய் ஞானசூனியமாயிருக்கும். அதெப்படி யெனில் ? விளக்குத் தகளியும் விளக்கும்போல அந்த ஞானத்தினாலே சுகதுக்கானுபவ முண்டாயிருக்கும் ¶ ஷோடச பதார்த்தவ

¶ ஷோடசம் - பதினாறு

ஞானத்தினாலே சுகதுக்கங்களும் நசித்தவாயிருக்கிற ஞான
மும் நீங்கப் பாஷாணம்போல வோரறிவுமற்றிருப்பதே மோ
க்ஷமென்னும் நியாய வைசேஷிகனும்,—

விவேக முத்தியென்றும் - பிரகிருதிபுருஷ விவேகத்தைப்
பண்ணிப் பிரகிருதி விகாரங்களுக்குத் தானன்னியமாகக் கர்த்
ருத்துவ போகத் திருத்துவங்களற நிற்பதே மோக்ஷமென்னும்
நிரீசுவர சாங்கியனும், மேல் மாயாபுருஷ விவேகத்தைப் பண்
ணி மாயையை நீங்குவதே மோக்ஷமென்னும் மாயாவாதியும்,—

தனமெய்வடிவாஞ் சிவத்தைச் செம்மையே பெறுமுத்
தியென்றுஞ் செப்புவார்கள் - பாஞ்சராத்திரிகள் மகாவிஷ்ணு
வினுடைய கிருபையினாலே பிராகிருத தேகத்தை நீங்கித் தங்க
ளுக்கு சத்திய ஸ்வரூபமான சுத்த சித்தரூபியாய் விஷ்ணு× து
ல்யனாய் ஸ்ரீ பூமி நீலாசத்தித்திரய வியதிரிக்தமான சகல
போகங்களும் மகாவிஷ்ணுவைப் போலே நித்தியமாயுடைத்
தாயிருக்கை மோக்ஷமென்றும், பூர்வ சைவர் சிவானுக்கிரகத்
தினாலே யாணவ மாயை காமியங்களினீங்க சத்தியமும் சுத்தமு
மாயத் தங்கள் ஸ்வரூபமாகிய ஞானக்கிரியை பிரகாசிக்க வத
னால் சர்வஞ்ஞத்துவாதி ஷாட்குண்ணியாபி வியத்திபாய்ச்
சிவசமமா யிருப்பதே மோக்ஷமென்றுஞ் சொல்லுவார்கள், ஆத
லால் இதெல்லாம் பதமுத்தியே.—

× துல்யம் - சமானம்.

சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங்கியாமே - ஆன்மா
வுஞ் சிவனு மநாதியே பிறிவற்றது; அந்தப் பிறிவில்லாமையைத்
தோன்றும்படி யன்றியே யாணவசத்தி தடுத்திருக்கையா லிந்
த வுபாதிகளினாலே யசத்தியமாகிய போகங்களை சத்தியமெ
ன்று மயங்கினது சிவானுக்கிரகத்தினாலே யுபாதித் திரயங்க
ளும் நீங்கக் கண்ணினது காச காமலாதி தோஷநீங்கக் காக்ஷி

யைப் பெறறதுபோல,சிவனுடைய பிரிவிலலாமையைச் சிவஞா னத்தா லனனியமாகக் கணடு சிவானநத பரவசத்திருகே சிவ மேயாய நிறபது மோக்ஷமென்று சொல்லிய பரம மூர்த்தியை யடைவது உத்தர சைவராகிய வெமமொழுேரெயென றிதன பொருள

பதமென்ற சொல்லுக்குப் பொருள் நிச்சயம், ரக்ஷை, இரு ககுமிடம், அடையாளம்,அடி, ஒருவஸ்து, இத்தனையுமாகையா ல், இவவிடத்துச் சிவனடியைச் சேரவென்றது சிவமாகியவஸ் துவைப் பொருந்தவென்றது.

பொருந்த வென்றதினு லிரண்டிருந்து கூடிய தல்ல, தன னுடைய பிள்ளையானவன் வியாதியினுலே மிகவும் பீடிக்கப்பட டுக் குணமானபொழுதுதப் பிள்ளையை யிப்பொழுது பெற்றே னென்றதுபோல வுபாதியினுலே சிவானுபவம் விளங்காமலிரு நது விளங்கினபிறகு கூடியதென்று சொல்லவேணடியது

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆகலால், லோகாயதன முதலோர் முத்தி, முத்திப்போலி யெனபதுந் தெரிவித்து, சித்தாநத முத்தித்திறனுஞ் செப்புகின றார்.

இம்மையே யீரேட்டாண் டெய்தி யெழி லாரு மேக்திழை யாா முத்தி யென்றும் - முழுதுதல் புசித்தல் பூசுதல் முடித்த ல முதற் சுகமே சுவர்க்கம், அநதச் சுகமின்மையே நரகம், மகளி ரை மணத்த லிமமையே முத்தியென்று லோகாயதன சொல லுவன,—

இருஞ் சுவர்க்க மம்மையே முத்தி யென்றும்- பூர்வமீமா ம்சன சொல்லுவன,—

ருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞான மென்கின்றார,

சந்தானமற்று மாசு கெடுகை முத்தி யென்றும - புத்தரிற் பிரதீப நிருவாணவாதி பேசுவன —

அனந்தஞான மனந்ததரிசன மனந்தவீரிய மனந்தசுகம நிர்நாமம நிர்க்கோத்திரம் நிராயுஷ்யம் சகலசம்மியக்பாவ மென்றார்,

அட்டகுணமுத்தி - என்று மருக னிசைப்பன —

ஞான முதலிய செயற்கைக் குணங்கள்கெட் டியற்கை யஞ்ஞானமே குணமாய்,

மெய்யுமையே பாடாணம் போல்கைமுத்தி என்றுந் தார்க்கிகன் சாற்றுவன,—

பிரகிருதி புருஷ,

விவேக முத்தி என்றும் - சாங்கிய னுரைப்பன —

தன் மெய் வடி வாஞ் சிவத்தை - தனதிந்த வடிவு போற சாகார சிவமூர்த்தி சாரூப சிவாகாரத்தை,—

செம்மையே பெறுகைமுத்தி - பரமுத்தியாகப் பரியபத முத்தி,

என்றும் - சிவசமவாதி,—

செப்புவன - இப்படி வாதிகள் செப்புவார்கள்.

சிவனடியைச் சேருமுத்தி - சிவசத்திக்கொத்த விரிசுருக்க சாட்குண்ணிய சிற்சத்தி காம சிவத்துவாபி வியத்தியா முத்தி,—

யாம இங்குச் செப்புவதே.

சில ஆதுநிக சைவாசாரியர் யாஞ்சொல்லு மிந்த முத்தியைச் சாரூப முத்தி சாற்றுஞ் சிவசமவாதி முத்தியாய்த் திருபபி மதது சிவசித்தாந்த சித்த சிவசாதிர்ச்சிச சிவசாத்தியைக் கிய சிவசுத்தாத்துவைத முத்தித் துவேஷிகளாய் வேதாந்த வி

சேஷசித்த விசிஷ்டாத்துவைத கோடி கொளுவிச் சிவ விசுத்தி யத்துவைத விசிஷ்டாத்துவைதப போலிமுத்தி விளம்பி விட்டி ரலமபராய விட்டார்கள்

வாதிகளுடையும் பதமுத்திக் கிரமம பகுப்பு வகுப்பாம —

பூதானம ஞானோபாய முபதேசிக்கு முலோகாயதனுக்கும், பூதவிசேஷப பிராணனம ஞானோபாய முபதேசிக்கும் கௌத னுக்கும், விஞ்ஞானகந்த விசுசிஞஞானோபாய முபதேசிக்கும் பிரதிப நிருவாண வாதிக்கும், கனமேச்வர ஞானோபாய முப தேசிக்குக மீமாமசனுக்கும், சோத்திரானம ஞானோபாய முபதே சிக்குஞ சோதிசாத்திர வித்துக்களுக்கும், சூரியாக்கினி சமாத ம ஞானோபாய முபதேசிக்குஞ் சூரியாக்கினி சாம்யவாதிகட்கு ம, அவரவாக்குக்கமான பஞ்ச பூதபுவனப் பிராபதிதானே மோட்சம

பூதாணடகாரணப் பிரம ஞானோபாய முபதேசிக்கும ஸ் மார்த்தர்க்குத தன்மாத்திர புவனப பிராபதி தானே மோட் சம

இந்திரியானம் ஞானோபாய முபதேசிக்கு முலோகாயத னுக்கொருவனுக்கு இந்திரியபுவனப் பிராத்திதானே மோட் சம

மனந்தம ஞானோபாய முபதேசிக்கு முலோகாயதர்க்கு ளொருவனுக்கு மனோ புவனப்பிராப்திதானே மோட்சம்.

அகங்காரானம ஞானோபாய முபதேசிக்கும் வைசேஷிக னுக்கு அகங்கார புவனப் பிராத்திதானே மோக்ஷம்.

புத்தியானம ஞானோபாய முபதேசிக்கும் நையாயிகனுக் கும், புத்திவிர்த்தி யானம ஞானோபாய முபதேசிக்கும் புத்தனு க்கும் புத்தி புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

சலஞ்சல சத்சதகுணனம ஞானோபாய முபதேசிக்கு மரு கனுக்குக் குணபுவன பிராபதிதானே மோக்ஷம்.

பிரமகாரியானமா ஞானோபாய முபதேசிகரும் பரிணத வேதாந்திகரும நாராயணப பிரகிருதி காரியானம ஞானோபாயமுபதேசிகரும பாஞ்சராத்திரிகரும பிரகிருதி புவனப் பிராப்திதானே மோக்ஷம

சத்தப்பிரம கிரீடாப்பிரம சித்திரப் பிரமவாதிப் பிரமுகர்களும் பிரகிருதிபுவனப் பிராப்திதானே மோக்ஷம்

யோகோபாய முபதேசிகரும் பாதஞ்சலரும பிரகிருதி புருஷ விவேக ஞானோபாய முபதேசிகருஞ் சாங்கியருக்கு ஞ சாங்கியாசோபாய முபதேசிகரும விவாதத வேதாந்திகருமானம வாதிகளாதலால் புருஷபுவனப் பிராப்திதானே மோக்ஷம

சிவ தீக்ஷாங்கியங்க சிவஞானோப கிருத சாகார சிவாதம பாவனோபாய முபதேசிகருஞ் சிவவாதிகளாரும சைவரிற சைவ பவுராணிகாக கிராக புவனப் பிராபதிதானே மோக்ஷம

சாகார நிராகார சிவபாவனை பரசோம சித்தாந்திகட்கு கலார்க கர்ப்ப வித்தியா புவனப் பிராபதிதானே மோக்ஷம.

சிவாவேச வாதிபாசுபதர் காபாலாகருக் கலாபுவனப் பிராப்திதானே மோக்ஷம்.

காலேசுர வாதிகட்குக் காலதத்துவப் பிராப்திதானே மோக்ஷம.

சங்கிராந்த வாதியாகிய சைவபாசுபதர் வைதிகபாசுபதர்க்குஞ் சமுத் பத்திவாதி மாவிரத விசேஷர்களும மாயா புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

கலாதத்துவாந்த சோதினியாகிய தீட்சாவானகளுக்கு விஞ்ஞான கைவல்லியந்தானே மோக்ஷம்.

சர்வஞ்ஞத்துவ மாத்திரவாதி மகாவிரதர்க்குச் சுத்த வித்தியா புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

பிரயோசகிய காதகிருதத்துவ வாதிசடகும பிரவாகே சுர வாதிசடகும அநேகேசுவர வாதிசடகும ஈசுவர புவனப பிராப்திதானே மோக்ஷம

சதாசிவ சாமிப வாதிபாகிய சிவசமவாதிகளுக்குச் சதா சிவ புவனப பிராப்திதானே மோக்ஷம

சுத்தசாதகர்களுக்குச் சத்தி புவனப பிராப்திதானே மோக்ஷம

வாம தக்ஷிண காருட பூதரோகதிரிகர்களுக்குச் சத்திலோக புவனப பிராபதி தானே மோக்ஷம்

சிவ தீக்ஷா சாகல்லிய சுத்தராயிருந்தும் சிவவியத்திமை கழியுஞ் செய்பு மிப்போதுள்ள சைவர்க்கு

"சக்ஷு கலந்துஜாதீயாத
புருஷம லோகபாவகம்"

என்னும் வசனத்தினால் சத்தி புவனப் பிராப்தி தானே மோக்ஷம

தீக்ஷா வைகல்லிய வானசோகிய முறசொல்லிய புருஷ புவனப பிராப்தி தானே அல்லது சிவலோகப பிராப்திதானே மோக்ஷமென்று சித்திக்கப்படும்

சிவனுக்கு வைந்தய சரீரம வாஸ்தவ மெனனுஞ சாமானிய சைவர்களுக்குச் சிவதத்துவ புவனப பிராப்திதானே மோக்ஷம

உலோகாயதாதி வேதாந்தியந்த ஆன்மவாதிகளுக்கு மானம விவேகப் பிரவிர்த்திமானகளாகையாற் சிவவாதிகள் பலனும் சிவவிவேகத்திற்கு மானம விவேக ம[illegible]ப்படையாதலான அவவானம விவேகிகட்கு மலபரிபாக சோக்குஞ் சிவசமான பரமுத்தி பார்க்கும பாத்திரமாங் கால மெண்ணிக்கைக்கு கிசையுமாதலா லவரவர முத்தி சாதனங்கள் சபலங்கள் தானே, நிஷ்பலங்களன்று.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

புறச் சமயநூலார் கூறு முத்திகளாவன? சோபானமு றையான் இம்முத்தியிருக்கிடந்த முப்பத்தாறு தத்துவங் களினிடைக்கட்ட புவனவாய அரியைய தின்புறுமுத்தி முதலாயி னவாம வேதாகமநூ லுண்மையுணர்ந்த யாங் கூறுமுத்திய ன்று, முப்பத்தாறு தத்துவங்களுக்கு மப்பாற்பட்ட சிவனுக்கு ணைபச் சேருமுத்தியாமென்பதாம் கக

ஏந்திழையை யென்னு மிரண்டாவது விகாரத்தாற் றொக் கது

ஆமுத்தி வினைத்தொகை.

உமைபங்க னென்றது தழீஇயிருக்கின்ற சிவனைக்கூறுந்த சமய முத்திகளையும் இவற்றுடன் வைத்துக் கூறிக்கொள்க

இதனானே புறச்சமயநெறிநின்றான் முதலியவெல்லாஞ் சைவசித்தாந்தத்தை யடைதற்குச் சோபானமுறையான வாயிலாமாறு அவற்றது பயன் கூறுமுகத்தானே இனிது விளக்கப்பட்டது

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

மேல் முத்தித்தொகை யருளிச் செய்கிறார்.

இம்மையேயீரெட்டாண் டெய்தியெழிலாரு மேந்திழை யாரா முத்தியென்றும் - இம்மையிலே பதினாறு வயதைப்பொரு ந்தி அழகினையும்பொருந்தி ஆபரணங்களையுந் தரித்திருப்பதாயுள் ள ஸ்திரீகளுடனே கூடி அவர்களிடத் துண்டான சுகத்தை யநுபவிக்கிறதே முத்தியென்னும் உலோகாயதன முறைமையு ம்,—இருஞ்சுவர்க்கமுத்தி யம்மையென்று - எக்கியாதி கன்மங

களைச்செய்து மறுமையிலே சுவர்க்கத்தைப் பெறுகிறதே முத்தியென்னும் பட்டாசாரியன் முறைமையும்,—முத்தி யைந்துக்தமறக் கெடுகையென்றும் - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்கிற பஞ்சக்கந்தங்களும் நேராகக் கெடுகிறதே முத்தியென்னும் பௌத்தரில் சவுத்திராந்திகன் முறைமையும்,—அட்டகுண முத்தியென்றும் - எட்டு பதினெழு ஆறு என்று மூன்றுவகையாயுள்ள குணங்களை விடுகிறதே முத்தியென்னும் சமணரில் நிகண்டாவாதி முறைமையும்,—மெய்ம்மையே பாடாணம்போல்கை முத்தியென்றும் - உண்மையாகவே ஆன்மா ஒன்றுமறியாமற் கற்களைப்போலே கிடப்பதே முத்தியென்னும் அகச்சமயத்திற் பாடாணவாதி முறைமையும்,—விவேக முத்தியென்றும் - இந்த ஜீவான்மாவுக்கு விவேகஞான முண்டாகிறதே முத்தியென்னும் மாயாவாதி முறைமையும்,—தன்மெய் வடிவாஞ்சிவத்தைச் செம்மையே பெறுகை முத்தியென்றும் - ஆன்மா தனக்குள்ள லிங்கச்சரீரமானது ஸ்வரூபத்தைப் பெற்று நித்தியமாயிருக்கிறதே முத்தியென்னும் அகச்சமயத்தில் சமவாதி முறைமையும்,—செப்புவர்கள் - இப்படிப் பலவாகச் சொல்லுவார்கள் அப்படிச்சொல்லுகிற விவை குற்றத்தைப்பொருந்தின முத்திகளாம்,—சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங்கியாமே - ஆகையால் பரமேசுவரனுடைய சீபாதத்தைப் பெறுகிற முத்தியே இவ்விடத்தில் முத்தியென்று சொல்லப்படுவதும், யாவ கொள்ளப்படுவது மதுவே.

இம்மையே யீரெட்டாண் டெய்தியெழிலாரு மேநிழையார் முத்தியென்றது உலோகாயதன் பிரத்தியட்ச மொழிந்து அநுமான முதலானவை கொள்ளாத படியாலே இம்மைப்பயனாகிய மகளிரிடத்துச் சிற்றின்பமே முத்தியென்று கொண்டானெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மதம்-௨௰-செ "ஊண்டு வதுண்ணாவதூற்ற கலவிமங் கையனையுளகி, வாடுயதடியில் வீழ்ந்து வருந்துவ தருந்தவமயின், கூடுவதனைவு கெடுக குணமெலா மவேட்கைபாகி, நீடுவதினபமுத்தியீத்தினினர்கள் முத்தர்," என்றும், அவன் மறுமைப்பயன் கொள்ளானென்பதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மதம்-௨௪-செ "வீட்டினையுள்தென் றேடி மெலிவதிங் கன்னைவீடு, காட்டுவோர் கண்டோர்கேட்டோர் கரியவையுண்டேற் காட்டார், நாட்டினிலரசனைக் கிசையவே நடந்து நாளும், பீட்டியபொருள்கொண் டிங்கே யின்பத் துளியைந்திடரோ" என்னுமதனாற் கண்டுகொள்க

இருக்குசுவர்க்கமுத்தி யமமையேயென்றது பட்டாசாரியன் இம்மையிலே நித்திய கன்மங்களைச் செய்ய நன்மை பகுதிக ளுண்டாமென்றும் சோமயாக முதலாயுள்ள யாகங்களைச் செய்ய மறுமையிலே மகத்தாகிய சுவர்க்கத்தைப் பெறுகிறதே முத்தியென்றும் கொண்டான் எனக்கொள்க

இதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மதம்-௧௧-செ "நித்தியாலந்தகன்ம நிகழ்த்திட சுபத்தைநீங்கார், தீதிலாவிசசா கன்மஞ் செந்தழலோமஞ்செய்ய, வேதுதானவேண்டித் தெல்லா மெய்தலாஞ் சோமயாக,மாதிதா னுகைக்கீசி யமைத்திட்டவிட்டதாமே" என்ற திருவிருத்தத்திற் கண்டுகொள்க

அவன் செயல்களே முத்தியைக் கொடுக்கும் தொழிற்கு ஒரு கர்த்தா வுண்டென்றுகொள்ளான் என்பதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மதம் ௧௨ செ "கருதியகன்மஞான மிரண்டு காலாக்கொண்டு" என்ற திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

முத்தியைப் தூக்கத் மறக்கெடுகை யென்றது சவுத்திராந்திகன் பிருதிவி யப்பு தேயு வாயு என்ற பூதரூபம் நாலும், அறிவுக

தமிரதம் வன்மை என்கிற உபாதான ரூபம் நாலும், ஆக ரூபகந்தம் எட்டு. குசலாவேதனை அகுசல வேதனை குசலாகுசலா வேதனை என்கிற வேதனாகந்தம் மூன்று. சோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் மனம் என்கிற குறிப்புக்கந்தம் ஆறு. பொய்ச்சொல்லல் கோட்சொல்லல் கோபித்துச் சொல்லல் பயனில் சொல்லல் என்கிற வாக்கின் குணம் நாலும், களவுக்குப் போகல் வறிதே தொழில் செய்தல் கொலைசெய்தல் ஆக காயத்தின் குண மூன்றும், கொலை நினைக்கை காமப்பற்று ஆசையென்கிற மனத்தின் குணம் மூன்றும், ஆகத் தீக்குணம் பத்து. மெய்யுரைத்தல் வார்த்தை இனியன கூறல் பயனட்டு சொல் என்கிற வாக்கின் குணம் நாலும், பள்ளிவலம் வருதல் தவம்புரிதல் தானஞ்செய்தல் என்கிற காயத்தின் குணம் மூன்றும், அருணினைவு ஆசையறுத்தல் தவப்பற்று என்கிற மனத்தின் குணம் மூன்றும் ஆக நற்குணம் பத்து. ஆக பாவனை கந்தம் இருபது. சத்த பரிச ரூப ரச கந்தம் சித்தம் என்கிற விஞ்ஞான கந்தம் ஆறு. ஆக இவ்வனைத்தும் நாற்பத்து மூன்றாக எண்ணப்பட்டு வருகிற பஞ்சகந்தங்கள் ஐந்தும் காரணங்கட்க்க காரியங்கட்கு மென்பது மிகுந்துரை யில்வழக்குமாய்ப் பந்த துக்கமுமாய இது குற்ற மென்றும் கந்தங்களை நந்தம் ரோகக்கெட்டு வீட்டினப்பத்தை யடையுமென்பதுவே முத்தியின்பமாகக் கொண்டானெனக் கொள்க.*

இதற்குப் பிரமாணம் பரபக்கம் அவன்மதம்,௯௧ செ, "ஓங்கி யுருவமோடு வேதனை கருதிப்பிறேடு" என்னுந் திருவிருத்தத்தேற் கண்டு கொள்க

அட்டகுண முத்தியென்றது நிகண்டாவாதி. அட்டகுணங்களாயுள்ள மூன்றுவகைக் குணங்களையும் விடுகிறதே முத்தியென்று கொண்டானெனக் கொள்க.

மூன்றுவகைச் குணமாவன, ஞானவாணீயம் தரிசனவா ணீயம் வேதனீயம் மோகனீயம் ஆயுஷ்யம் நாமம் கோத்திரம் அந்தராயம் என்கிற குணங்கள் எட்டும், பசித்தல் தாகம் பயம் செற்றம் உவகை மோகம் சிந்தனை பழித்தல் நோய் நசித்தல் வேர்வை கேதம் மதம் அதிசயித்தல் புசிப்பு பிறப்பு உறக்கமென்கிற குணங்கள் பதினேழும் ஆசசிகம் இரதி ஆரம் சோகம் சுகுச்சை பயம் என்கிற குணமாறும் ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட முப்பத்திரண்டு குணமுதலான மூவகைக் குணங்களையும் விட்டு பூர்வத்திலுண்டாகிய கன்மங்களை புசித்துத் தொலைந்த வந்தரந் தானே வீட்டின்ப மெனக்கொண் டானெனக் கொள்க.

முதற்சொன்ன ஞானவாணீயமாதியாயுள்ள எட்டுக்கும் பிரமாணம் பரபட்சம் அவன்மதம் - ௨-செ, "எறிலாதன வனந்த ஞானமுதலெண் குணங்களொடு மொண்குணம், மாறிலாதமதி மேவுசித்தமென மன்னிவானவர் வணங்கவே, வேறுலாவுகுண ஞானவாணீயமாதியெட்டினையும் விட்டசீர், கோறுபானமையுடை நீடிவாழுருக வெனங்களுக்கிறைவ னென்றனன்"

இரண்டாவது சொன்ன பசித்தலாதியாயுள்ள பதினேழு குணங்கட்கும் பிரமாணம் பரபட்சம், அவன்மதம் - ௬ - செ "பசித்தல்தாகபய செற்றமோடுவகை மோகசிந்தனை பழித்தல் நோய், நசித்தல்வேர்வையொடு கேதமோடுமதம் வேண்டலின்றி யதிசயித்தலும், புசிக்கவந்திடு பிறப்புறக்கமிவை விட்டொரா றட்டகுண பூதரும், வசித்தவனுலகின் மேலிருந்தொருசொ லிகலனுக்கருளு மென்றனன்"

மூன்றாவது சொன்ன அரிசசிகமாதியாயுள்ள குணங்களாறுக்கும் பிரமாணம் பரபட்சம், அவன்மதம்-அ-செ. "ஏனுமொன்றுடைய வாகியெங்குமனு வாயிரும்புகன மரங்களும், பூனுமங

த்துவெல்லாமுமாகுமிவை புறக்கலப்பொருளென்னலாம், காறுமயச்சறு வகைத்தொழில்களை கட்டுவிட்டொழி கன்மமேல், மானாகினாறுவரு மாறிமாறிமுன வைகநதுண்டுவிட மா—சிடே" என்னும் பிரமாணங்கள் கண்டுகொள்க.

மெய்யுணமையே பாடாணம்போலகைமுத்தி யென்றது பாடாணவாதி அறிவிலாதவர்கள் அதிகப்பட்டுக் கிடக்குந் தன்மைபோல ஆன்மாச் சுதந்திரத்தையிழந்து ஒன்றுமறியாமல் கல்லைப்போலே கிடக்கிறதே முத்தியென்று கொண்டானெனக்கொள்க் இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "கொத்தை மாந்த ருத்துறு துயில்போற - காட்சியென்னக் காணுத நயா- மாட்சியையுமுத்தி யெனவகுத்தனரே" என்னுமதுவு கண்டுகொள்க

விவேகமுத்தி யென்றது மாயாவாதி நிர்மலமாயிருக்கிற ஆகாயத்தை மேகமறைத்த தன்மைபோல சுத்தமாயிருக்கிற பரப்பிரம மாயா வுபாதிகளினாலே வாதிக்கப்பட்டு இந்தவுடலிலே மயங்கிநிற்கிறதே ஆன்மாவாவது, அந்த ஆகாயத்திலே ஒரு வாயுத்தோன்றி அந்த மேகத்தை நீக்கின தன்மைபோல தன்னிடத்திலே ஒரு விவேகஞானந்தோன்றி யந்த மாயாவவித்தையை நீக்குகிறதே முத்தியென்று கொண்டானெனக் கொள்க இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "இவவியற் பந்தப் பவவமதகல - வினைமுதற்றந்த கொண்மூப்படலந் - திருளறவுந்தக் காற்கவிவேகந் - தனனிற்றோன்றிச் சாதக மனைத்தையு - மனைகப்பிரியப் படியினிழுவாங்கலும் - போலஞாலம பொய்யாகக்கழிந்த - தானேதானாய்த் தன்னிறைவனே த- தானேகண்டு தன்னலமுறறும" என்னுமதுங் கண்டுகொள்க.

தன்மெய்வடிவாஞ்சிவத்தைச் செம்மையே பெறுகைமுத்தியென்றது சமவாதி வேட்டுவாளி யொன்றுமறியாத பசுவைச

டபுமுறைவையெடுத்துத் தற்சொரூபமாக்கின தன்மைபோல ஒன்றுமறியாமற் கிடக்கிற ஆன்மாவையுஞ் சிவனுடைய ஞானமெடுத்துத் தற்சொரூபமாக்கி அந்தவுடலே நித்தத்துவத்தைப் பெறப்பிருப்பது முத்தியெனக் கொண்டானெனக் கொள்க. இதற்குப் பிரமாணஞ் சற்கற்பநிராகரணம். "முன்னோன்றனது முத்தொளிஞான- மறிபாபசமைச் சிறப்புழுக்கவாந்த- வண்டென யுயிரைக் கொண்டெழுமெழுயிரது- தன்னைநோக்கித் தன்னுருவாகி- யவ்வகைத்தொழிலு மெய்வகையுணர்வும் - பிரிடாவாறு பெற்றுத - திரியாடபெரியோர் திருக்ஷிசோதிடுமே" என்னுமதனைக் கண்டுகொள்க.

செப்புவாக்கென்றது உலோகாயதன் முதலாயுள்ள எழுவகை முத்தியையுங் குற்றத்தையுடைய முத்தியென்றெனக் கொள்க. அவை வருமாறு —

உலோகாயதன் முத்திக் குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது, பன்றியானது கன்மத்தாற் கீடாக விட்டையை விரும்பிப் புசிக்குந் தன்மைபோல வசுத்தமாகிய மகளிரிடத் துண்டாகிய சிற்றின்பத்தையுங் கன்மத்தாற் கீடாக விரும்பிப் புசிக்கையினுலெனக் கொள்க. இதற்குப் பிரமாணம் பரபக்ஷம், அவன் மறுப்பு-உஅ-செ. "ஆசையுறுமழல் சூகரங்க ளசுத்தமேவி" என்கிற திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

பட்டாசாரியன் முத்தி குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது, கன்மத்தினாலும் ஞானத்தினாலும் மோக்ஷமென்று சொல்லுகையில் கன்மத்தினாலே ஆசையுண்டாயதினாலே முத்தியுண்டாகா தாகையினு லெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் பரபக்ஷம் அவன் மறுப்பு,௧0-செ "கருமங்கண் ஞானமத்துவுடனின்றலானமருவு சத்திங்கலாந் தெளிவி" என்னுந் திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

சவுத்திராந்திகன் முத்தி குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது, கர்ப்பூரவிளக்குப்போலக் கந்தசரீரந்துமறச் செடுகையினாலே பெறுவானில்லாத படியினாலென்று கொள்க, இதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன் மறுப்பு நக-செ "ஞானதுக்கந்தம் சந்தானத்தழிந்தல்பந்த துக்க" மென்னுந் திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

நிசண்டாவாதி முத்தியைக் குற்றம் பொருந்தின முத்தியென்றது, குணங்களை விட்டுவிட்டுத் தவமாகாத் தெளிபதாலும் பூர்வசன்மம் நிச்சயித்துப் புசிக்கைக்கு இவ்விடத்து ஆன்மாவுக்குத் தனக்கென வேறோரறிவில்லாதபடியாலுமெனக் கொள்க இதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன் மறுப்பு-கக-நக-செ "ஆறுகாரியங்களை மாறவேதவங்க ளாமெனில்" என்னுந் திருவிருத்தத்திலும் "பூர்வகன்மம் மறிந்ப் புசித்தபின்பு" என்னுந் திருவிருத்தத்தில்" தென்கடலின்ற வறந்தபின்பு பூவில் மீனிருந்து நின்றதே" என்னுமதுவுங் கண்டுகொள்க

பாடாணவாதி முத்தியைக் குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது அவன் கேவலப்பட்டுக் கிடக்கிறதை முத்தியென்று சொல்லுகையினாலே அது முத்தியாகாது எனக் கொள்க இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் அவன் மறுப்பு "காட்சியென்னக் காணுந்துயர் - மாட்சிமை முத்தி யெனவகுத்தனாக்கிற - காணுபாவமரணங்கரும - மெய்ந்தவா முத்தி சேர்ந்தவரன்றே - யிளையகதிக்கோ முன்னவருமவேண்டா - தனிதருந்துயர மெனுமித்திடமே - பாடாணத்திற கூடாமுத்தி" என்னுமதுவுங் கண்டுகொள்க.

மாயாவாதி முத்தியைக் குற்றத்தைப்பொருந்தின முத்தியென்றது. இவனிடத்திலே தோன்றின விவேகஞானம் முன்பே யுள்ளதாமாகில் இவனுக்கு மயக்கம்வர வழக்கில்லை, பின்பு

கூடானதாகில் ஆகாயப் பூப்போலே இல்லாத தொன்றாகா து, ஆகையினாலென்க கொள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம், "பந்தமகற்ல முந்துவிவேகம் - வானவளியெனக் தனிற் றுனேதோன்றின் - முன்புளதாயின் மங்காதிவ்வெளிற- பின்புளதாகா திலதுளதெனில்வெளி-மலர்த்தரு மணம்" என றமைந்து கண்டுகொள்க.

சமவாதி முத்தியைக் குற்றத்தைப் பொருந்தின முத்தி யென்றது, அருவினைப்பொருந்தின ஆன்மாக்களுடைய மாயா தேகசம்பந்தம் நித்தியத்துவத்தைப் பெற்றிருக்கிறது பதமுத்திபோல அதொழிந்து சாயுச்சிய மாகாதாகையினாலும் யாதொ ருபாதொரு சரீரத்தோடுங் கூடியுளமட்டும் மூன்று மலங்களு நீங்கா தாகையினாலு மெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம், "முத்தியுற்ற நற்றவரவையிடை-சோவொன் றனை சாற்றுமுத்தி - சாலோகமோ சாயுச்சியமேற்- பந்த முற்ற கலசுழித்த-வறிவிவேகமுற்றறிவு பிறிபாபெறுதி - வேள்வு மெனப்பகர் தீண்டியவரிவவா - திருப்பவெனப்பகர் குருந்தான வேண்டும்" என்னுமதனைக் கண்டுகொள்க.

"சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே" என்றதற்குப் பிரமாணம் பரபக்கம், சௌத்திராந்திகன் மறுப்பு-௩0 செ. "அனாதிமுத்தனாய்ப்பரனாய் யகலனாயெல்லா மறிவுதொழி லனுக்கிரக முடையவரனகன்ற, நானாவிதமற் றொத்தவிடத்தே சத்திபாத நுழைவித்து மலங்களெல்லா நூங்கநீக்கி, மனாதி கரணங்களெல்லா மடக்கித் தனனை வழிபடுநல் லறிவருளி மாக கருணைசகையா, லினாதிபிறப்பினின்று மெடுத்துமாறு வினை பழுத்திக்கே வைப்ப னெங்கள் முத்திமிதுவே" என்னுமதனைக் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, உலோகாயதன் முதலாயுள்ள சமயிகள் கொள்ளப்படு முத்திகள் குற்றத்தைப் பொருந்தின முத

றியென்றும் இவ்விடத்து முத்தியென்று சொல்லப்படுவது பர
மேசுவரனுடையசீ பாதத்தைப் பொருந்துகிறதே முத்தியென்
று முறைமையும் அறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஏனைச் சமயநூலார்கூறு முத்திகளாவன? சோபான மு
றையா னிலமுத லுத்தமீறாய்க் கிடந்த முப்பத்தாறு தத்துவங்க
ளிடைக்கட் படுவனவாம் அவற்றுள்,—இம்மையே யிரட்டா
ணடையதி யெழிலாருமேகநிறையாா முத்தியென்றும் - உலகா
யதநூலா ரிப்டைமைக்கண் பதினாறு ஆண்டுள்ள அழகுபொருந்
திய ஆபரணங்க ளணிந்த அரிவைய ரிணைபுறுதலே முத்தியென்
பர—அம்மையேயிருஞ் சுவர்க்க முத்தியென்றும் - மீமாம்சை
நூலார் யாகாதிகன்மங்கள் செய்து அம்மைக்கண் சுவர்காதி
போக மனுபவித்தலே முத்தியென்பர்—ஐந்துகந்த மறக் கெ
டுகை முத்தியென்றும் - சௌத்திராந்திக நூலார் உருவமுதலிய
ஐந்துவகை கந்தங்களு மறக்கெடுதலே முத்தியென்பர.—அட
டகுண முத்தியென்றும் - ஆருகத நூலார் அநந்தஞான முத
லிய எண்குண மடைதலே முத்தியென்பர,—மெய்யேமையே பா
டாணம போல்கைமுத்தி யென்றும் - மெய்ம்மையாகப் பாடா
ணம்போற் கிடக்கை முத்தியென்பர் வைசேடிக நூலார— வி
வேக முத்தியென்றும் - சாங்கியநூலார் பகுதிதத்துவரும் விவே
கஞானமே முத்தியென்பர—தன் மெய்வடிவாஞ் சிவத்தைச்
செம்மையே பெறுகை முத்தியென்றும் செப்புவர்கள - சிவச
மயவாதிகள் முதலியவாகச் சமயநூலாருந் தன்னுடை
ய வடிவாகிய சிவசாரூப முதலிய பதமுத்திகளைப் பெறுதலே
முத்தியென்றுஞ் சொல்லுவார்கள்.—இங்கு யாஞ்செப்புகத -

வேதாகமநூ லுண்மையுணர்ந்த யானுகூறு முத்தியாவது,— சிவனடியைச் சேருமுத்தி - முப்பத்தாறு தத்துவங்களுக்கு மப் பாற்பட்ட சிவனடியைச் சேருமுத்தியாம்.

இதனானே புறச்சமயநெறிநின்றன முதலிய வெல்லாஞ் சைவத் திறத்தடைதற்குச் சோபானமுறையான வாயிலாமாறு அவற்றது பயன்கூறுமுகத்தானே யினிது விளக்கப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை

மேலிந்தச் சித்தாந்தமே சிறப்புடைத்தென்
றுணர்த்து கின்றார்.

ஓதுசமயங்களப்பொரு ளுணருநூல்க ளொன்றோ
டொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள், யாதுச
மயம் பொருணூ லியாதிங்கெனனி லிதுவாகு மதுவல
ல வெனும்பிணக்க தின்றி, நீதியினா லிவையெல்லா
மோரிடத்தே காண நின்றதியா தொருசமய மதுசமய
ம பொருணூ, லாதலினா லிவையெல்லா மருமறையா
கமத்தே யடங்கியிடு மவையிரண்டு மானடிக்கீ ழட
ங்கும் (௧௬)

(இ-ள்) ஓதுசமயங்கள் — இப்படிப் பலவாகச் சொல்லப்பட்ட சமயங்களையு மதற்கதற் கேற்ற தேவதைகளையு ம
பொருளுணருநூல்களொன்றோடொன்றொவ்வாமலுள — தற்கதற் கேற்ற சாத்திரங்களையு முத்தி பெறுமதங்களையும் பலவாக வுரைத்தது, இவற்றுள் உண்மையான சமயம் யாது வுண்மைப் பொருளாயாது அச்சமயத்திற்குக் கூறுமாக

பலவு மிவற்றுள் யாதுசமயம்பொருணூ லியாதிங் கென்னில்

மங்களை யாது என்று கேட்கிறாயாகில்? அவைகளை யுணர்த்துதும்

இதுவாகுமது வல்லவெனும் பிணக்கதின்றி நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காணநிற்பது யாதொருசமயம் மதுசமயம் பொருணூல்

தத்தஞ் சமயத்தி லிருப்பவர் தேவதைகளை முறைமையினையு மந்தநூல்களுண்டாய வழியினையு நோக்காது சலம்பற்றி நின்றமது பொருளையுண்மை மற்றொன்று முண்மைப் பொருளல்லவென்னுஞ் சந்தேக விகற்பமின்றிக் கடாவிடையாலும் பிரமாணப் பொருளாகச் சொல்லா மெய்ப்பொருளென்று விருவிதாலுந் திருட்டாந்தத்தாலும் அவ்வியாப்தி முதலிய குற்றங்களாற் சோர்வுபடாத வுண்மைப் பொருளு மிதுவே சமயமு மிதுவே இந்தச்சமயத்துட் டுணிந்து கூறப்பட்டதே பரமமான மோட்சமென்று கூறும் வாலோனமத்தா வாகிய மலையுமாறுபோல முனைவனுடைய மலைவின்றிய பிறமதங்களைந்து தனதுண்மைப் பொருளை யறுதியிட்டுணர்த்துகின்ற சமயநூலாகிய நூலேநூல்?

ஆதலினா லிவையெல்லா மருமறை யாகமத்தே யடங்கியிடும்

இச்சிறப்பினையுடைய தாகையினாலே அச்சமயப் பொருள்களெல்லாம் வேதாகமங்களிரண்டினு மடங்கியிருக்கும்

அவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்.

இந்த வேதாகமங்களாகிய விரண்டு மர்த்தவாதமின்றி விதிவாதமே கூறுகையாலவனது திருவாக்கே சிறப்புடைத்தெனப் பெறுமன-று

இதற்குச் சித்தியஞ் சிவதருமோத்தரம் மகுடஞ் சாமிகத்து மறிக. (௪௫)

## சிவாகரயோகியருரை வருமாறு.

—o—

மேல் வேதசிவாகமங்களை சாஸ்திரமென்றும் சிவஞான
மே ஞானமென்றுங் கூறுகின்றது.

ஒது சமயங்க ளுங்களுநூல்கள் பொருள்க ளொன்றோடொ
னறொவ்வாமை யுளபலவு மிவற்று ளியாதுசமயம் பெருநூ
லியாதெனில் - சொல்லுஞ் சமயங்களு மந்தந்த சமய
சாஸ்திரங்களும் சாஸ்திரங்களில் § பிரதிபாத்தியமான பதா
ர்த்தங்களும் பந்தமுத்தியி னுடைய தன்மைகளும் மோக்ஷோ
பாயங்களும் ஒன்றுக்கொன்று விரோதமாகப் பலவாகவுள்
இவையிற்றுக்களுக் குள்ளே யெந்தச்சமயம் பெரியது, எந்தச்சா
ஸ்திரம் சாவத்தையுஞ் சொல்லுகிறது, எந்தச் சாஸ்திரத்தி
லே சொல்லும் பதார்த்தம் யதார்த்தம், எந்தச் சாஸ்திரத்தி
ல சொல்லு மோக்ஷோபாயம் பரமுத்தியைக் கொடுப்பது,
எந்தச் சாஸ்திரத்திலே சொல்லுந் தருமத்தைப் பண்ணவேண்டு
வது, என்று வினவில்?—

§ பிரதிபாத்யம் - சொல்லத்தக்கது.

இதுவாகு மதுவல்லவெனும் பிணக்கதின்றி நிதியினு வி
வையெல்லா மோரிடத்தேகாணநின்ற தியாதொருசமய மது
சமயம் பொருணூல்-உலகாயிதாதி சிவாவாத்துவைதி யந்தமா
கச் சொல்லும் பதார்த்த லக்ஷணங்களையும் தருமங்களையு
மோக்ஷோபாயங்களையு மோக்ஷங்களையு மிதுவாகு மதுவல
லவென்று ¶ சமுத்திர கலசநியாயமாக வேதாகமங்களிலே

¶ சமுத்திரகலசநியாயம் - சமுத்திரத்தில் குடத்தைப்
போட்டுமொண்டால் குடங்கொண்ட ஜலந்தான வருமெனகி
ற நியாயம்.

பேகதேசத்தை யறிவிப்பது பூர்வபக்ஷமுஞ் சித்தாந்தமு மாகத்
தாக்கப்பித்து, ஆறு குருடர் யானையினுடைய வேகதேசத்தை
ஸ்பரிசித்து யானை யிப்படியிருக்கு மிப்படி யிருக்குமென்று த
ர்க்கம் பண்ணக் கண்ணுள்ளவ னவர்களைச் சொல்லு மவயவங்க ளெ
ல்லா முடைய தியானையென்று நிச்சயித்ததுபோல, இந்தச்ச
மயங்க ளெல்லாஞ் சொல்லுவது வேதாகமத்தி லேகதேசத்
தைப் பற்றியென்று பரத்தத்துவத்தை யுணர்வதான சமயமே
சமயம், அந்தச்சமய சாத்திரமே சாத்திரம், அந்தச் சாத்திரத்
தில் சொல்லும் பதார்த்தமே பதார்த்தம், அதிற்சொல்லும் த
ருமமு மோக்ஷோ பாயமுமே சாதிக்க வேண்டியது,—

ஆதலின் றிவையெல்லா மருமறை யாகமத்தே யடங்கி
யுமையிரண்டு மரனடி கீழடங்கும் - சாவத்தையுஞ் சொல்
லுவது சாஸ்திரமென்ப தாதலால் வேதசிவாகமங்களுக்குள்
ளே சகல சாஸ்திரங்களு மடங்கும். வேதாக மோக்தானுஷ்
டானங்களையே பண்ணவேண்டுவதும், அதிலே அதிலேசொல்லு
ம் பதார்த்தங்களே யதார்த்தமும், வைதிகமுஞ் சைவமுமே
சமயமும் இவ்விடத்து மிரண்டாகச் சொல்லுகையிலு லிரண்
டிலே யதிகமேதென்னில்? வேதசிவாகம மாகிய அபரஞானமி
ரண்டும் பரஞானமாகிய சிவஞானத்திலே × பரியாவசானமா
கையால் *வேதோபப் பிரமிதமானது கொண்டு வைதிக சைவ
மென்றும், சிவகுண † சங்கிராந்தி சமுற்பத்தி + சமாவேச சிவ
சமத்துவ மென்கிற முத்திகளுக்கு மேலாயிருக்கிற சிவசாயுச்சி
யப் பிரதமாகையா லுத்தரசைவ மென்றும், இதை பூர்வபக்ஷ
ம் பண்ணுவதற்கு ஒருசமய மில்லையாகையால் சித்தாந்தசை
வமென்றும் பெயரையுடைய வைதிகசைவமே சர்வோத்கிருஷ்
டமான சமயம். வேதசிவாகமங்களே சாஸ்திரம். இதிற்சொ
ன்ன பதிபசுபாசம் பதார்த்தத்திரயமே யதார்த்தம். விசிஷ

டகருமமாகிய சரிகை கிரியாயோக சிவதருமமே பண்ணவேண்டுவது கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிஷ்டை யென்பதே மோக்ஷோபாயமென் றிதன்பொருள்

× பரியாவசானம்-முடிவு ✻ வேதோபப்பிரமிதம் - வேதத்திலே அதிகமாகச் சொன்னது, † சங்கிராந்தி - சம்பந்தம், + சமாவேசம் - பிரவேசம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மேற்சாமானிய வேதவிசிஷ்ட விசேஷவேத சிவசித்தாந்தமே சிறப்புடைத்தென்று செப்புகின்றார்

பொருள் - அந்த அந்தச் சமயத்தார்க்குச் சொல்லும் பதார்த்தங்கள்,—நூல் - அப்பொருளைச் சொல்லுஞ் சாத்திரம்,—பிணக்கின்று-சந்தேகமற்று,—ஓரிடத்தே - ஒருசமயத்திலே,—காண - அடங்க வேதத்திற் சாவதிப்பட்டதும், சிவாகமத்திலே நிரவதிபட்டதும்,—அரனடிக்கீழடங்கும்-அபரஞானமாதலால் வேதஞ் சிவாகமத்தடங்கும்; சிவாகமம் வேதத்தைக் குறித்துப் பரஞானமானாலும் சிவசத்தி சின்ன சிவாகமத்தைக் குறித்து அபரஞான மாதலால் சிவசத்தியாகுஞ் சேதன பரஞானசிவாகமத்தடங்கும்

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

கண்ணில்லாதபலர் குழீஇக்கொண்டு வேழமினை யறிந்த தலைப்பட்டுக் கையிற்றடைவந்த வேறுவேறு கூறு மிலக்கணங்க

ளெல்லாங் கண்ணுள்ளானொருவன் கண்டு கூறுமக் கிலக்கணத்துள் ஏகதேசமாய்க் காணப்பட்டடங்குமாறுபோல, ஏனைச்சமயநூலார் தத்தஞ் சிற்றறிவுக்குப் புலனாயவாறுபற்றி அவ்வநூல்களிற் கூறும் பொருளியல்புகளெல்லாம் முற்றுணர்வுடைய முதல்வனாற் செய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும் பொருளியல்பின் ஏகதேசமாய்க் காணப்பட்டு அவற்றுளடங்கும். சிவபிரானாற் செய்யப்பட்டு அவனையே தமக்கு முதலாகக்கொண்டுரைக்கும் அவ்விருவகை நூலும் அவ்விறைவன் றிருவடியி டங்கு மென்பதாம்

---

## திரம்பவழகியருரை வருமாறு.

—o—

முற் சொல்லப்பட்ட சமயங்களும் அததற்குப் பொருந்தின அர்த்தங்களும் அததற்குப் பொருந்தின நூல்களும் ஒன்றுக்கொன்றொவ்வாமல் எண்ணிறந் திருக்கையினால் இவையிற்றுள் எந்தச் சமயத்தை எந்தப் பொருளை எந்த நூலைப் பொருளாகக் கொள்ளுவதென்ற மாணக்கனை நோக்கி மேலருளிச் செய்கிறார்.

ஓது சமயங்கள் பொருளுணரு நூல்க ளொன்றோடொன்றொவ்வாமலுளபலவும் - சொல்லப்பட்ட சமயங்களும் அந்தந்தச் சமயிகள் கொள்ளத்தக்க அர்த்தங்களும் அதற்கு அறியத்தக்க சாத்திரங்களும் இவை யொன்றுக்கொன் றொவ்வாமற்பல அநேக விருத்தியுண்டாயிருக்கும்,—இவற்றுள் - இவையிற்றுக்குள்ளே,— யாது சமயம் பொருள் நூல் யாதிங்கெனவில் - எந்தச் சமயத்தை எந்த அர்த்தத்தை எந்த நூலையுண்மையாகக் கொள்ளுவதென்று நீ கேட்கில்?—இதுவாகு மதுவல்லவெனும் பிணக்கதின்றி - இந்தச் சமயமும் இந்தப் பொரு

று இந்தச் சாத்திரமும் ஆமென்றும், அந்தச்சமயமும் அந்தப் பொருளும் அந்தச் சாத்திரமும் அல்லவென்றுஞ் சொல்லுகிற மாறுபாடு இல்லையாய்,—நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காணநின்ற தியாதொரு சமய மதுசமயம்பொருணூல் - உலோகாயதமுதல் பாஞ்சராத்திரியீறாகப் புறச்சமயத்திற் பேதம் பதினாறும், பாசுபதமுதல் வயிரவமீறாக உட்சமயத்திற் பேதம் ஆறும், சைவத்தில் ஐக்கியவாதி முதல் சைவரீறாகப் பேதம் மைந்தும், ஆக இருபத்தேழு சமய பேதத்துக்கும் அந்தந்தத் தக்கதாகப் பொருந்தின பொருளும், அதற்குப் பொருந்தின சாத்திரங்களும், அவரவர் பக்குவத்திற்குத் தக்கதாகப் பரமேசுவரன் அருளிச்செய்தான் என்கிற முறைமையை யொருசேரவைத்திலே யறியப்பட்டது யாதொரு சமயம் அதுவே யுண்மையான சமயமென்பதும், அதுவே யுண்மையான அர்த்தமென்பதும், அதுவேயுண்மையான சாத்திரமென்பதும் இந்தவுண்மையைச் சொல்லுகிற சாத்திரந்தானேது என்னில்?—ஆதலினாலிவையெல்லா மருமறையாகமத்தே யடங்கியிடும் - சர்வஞ்ஞருஞ் சொல்லுகிற வேதாகமங்களாகையினால் முன்சொல்லப்பட்டவையெல்லாம் ஒருவராலு மறியப்படாத வேதாகமங்களிலே யடங்கியிருக்கும். அந்த வேதாகமங்க ளிரண்டும் எங்கே யடங்குமென்னில்?—அவையிரண்டு மரனடிக்கீழ் அடங்கும் - அந்த வேதமும் ஆகமமும் இரண்டும் பரமேசுவரனுடைய ஞானமாகிய ஸ்ரீபாதத்தினிழே யொடுங்கும் என்னவே சைவசமயமே சமயமும், சைவசித்தாந்தமே சித்தாந்தமும், வேதாகமமே சாத்திரமும்.

இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் பாயிரம், "பெருகடலு ளேழ்வுல கொருங்கவே வாங்கிக் - கந்தரத் தடைத்த வந்தமில் கடவுள் - பாலனை யுணர்த்து மேலவர் போலக் - கேட்போ

ராளவைக் கோடபதி பொருளா - லருளிய கலைக ளருளில வா லவை - பலபலசமயப் பாண்மைக்கத்தனரே - பஃகாலனூறா றன்மையுனலிய - மாகசரிதமே பொருளென்றுகந்திலே - யானாது வினவேறுறோ பனுவலேறுறாக - கிரையாரறு பாடுகூறுவ ரதனால்-புறசமயங்கள சிறப்பில வாகி-யருளினமாநதனா வெ ருணற மயக்கி- யலகைத்தேரி னிலையிற்றீரு - மீவகைநிறைக நீ யகாசசமய - முவிருதகுதி மேவியதாகு - மொன்றொடொன று சென்றுறுநிலையி - லாறுமாறு னிறுடைத்திவற்று - ளெவ்வ மில்லாச சைவநாசமயத் - திலகிலாகம நிலவுதநூதவை - கண கமிரணடு காருசனமீழ்த் - தனதிரியாடகத் தமனியமென்றி வை - பலபெயரயப்பட்டோர் பொருளேபோலப் - பதிபசுபா ச விதிமுறைநிளக்கும்” என்னுமதனுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது. சொல்லப்பட்ட சமயங்களுட பொருளகளும சாத்திரங்களும் ஒன்றோடொன்று ஒவ்வாமற் பலவாகச் சொல்லுகையினாலே எந்தச் சமயத்தை எந்தப் பொருளகளை எந்த நூல்களை உண்மையாகக் கொள்ளுவதென்று மாறுகைகன கேட்கு ஆன்மாக்கள பக்குவத்துக்கிடாகப் பரமேஸ்வரன இப்படிப் பலவாக அருளிச்செய்தாரென்று அறிகிறது சைவமாகையினால் சைவசமயமே சமயமும் சைவசித்தாந்தமே பொருளும் வேதாகமங்களே நூலுமென்று அருளிச்செய்ததென்று முறைமையு மதிக்கது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஓதுசமயங்கள்-சொல்லப்பட்ட சமயங்களும்,—பொருளுணரு நூல்கள் - அச்சமயப் பொருள்களை யுணர்த்து நூல்களும,— ஒன்றோடொன றொவ்வாமல் பலவும் - மாறுபட்டன

லாக வுள்ளன பலவாகலின்,— இவற்றுள் சமயமியாது பொ
ருணூலியா திங்கெனின் - இவற்றுள் முதன்மையான சமய
மியாது அச்சமயப் பொருளுணர்த்து நூலியா திவ்விடத்தெ
னில்,—இறைவாகு மதுவல்ல வெனும் பிணக்கின்றி - கண்ணி
லலார் பலர் குழீஇக்கொண்டு வேழத்தினுருவத் தலைப்பட்டுக் கை
யிற்றுறைவந்து வேறுவேறு கூறு மிலக்கணங்க ளெல்லாக்
கண்ணுள்ளா னொருவன் கண்டுகூறு மதனிலக்கணத்தி னேகதே
சமாயக் காணப்பட் டடங்குமாறுபோல, இதுபொருந்து மிது
பொருந்தா தென்னும் பிணக்கின்றி,—நீதியினு லிவையெல்லா
மோரிடத்தே காண நின்றது யாதொருசமயம் - முறைமையா
லிவையனைத்து மொருங்கே காணப்படுகின்றதெச் சமயம்,—
அதுசமயம் பொருணூலாதலினும் - அதுவேசமயமும் அச்சம
யப் பொருளுணர்த்து நூலுமாதலின்,— இவையெல்லா மரும
றையாகமத்தே யடங்கியிடும் - ஏனைச்சமய நூலார் தத்தஞ்
சிற்றறிவுக்குப் புலனாய வாறுபற்றி யவ்வநூல்களிற் கூறும்
பொருளியல்புக ளெல்லா முற்றுணர்வுடைய முதல்வனாற் செ
ய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும் பொருளியல்பி னேகதே
சமாயக் காணப்பட் டடங்குதலின், அவையே நூல
களும்,— அவையிரண்டு மரனடிக்கே யடங்கும் - சிவபிரானா
ற் செய்யப்பட்ட அதனையே தமக்கு முதலாகக் கொண்டொழு
கு மவ்விருவகை நூலு மவ்விறைவன் திருவடியி லடங்குமாத
லின் அதுவே சமயமுமாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



ஆகமப்பிரமாண முணரும் முதலிய விருத்தம் இதற்
குவதென வுணர்த்துகின்றார்

அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக்கைபின
னளப்பரிதா மப்பொருளை யரனருளா லுணர்க்க, டருவ
ராகளபின் றனித்தனியே தாமறிந்தவளவிற றர்க்க
மொழித்தரங்களினாற சமயஞ்சாதித்து,மிருதிபுராண
கலைகண மற்றுமெல்லா மெய்ந்நூலின வழியுடையா ரா
யகம்வேதாகமம், சுருதிசிவா கமமொழியச் சொலலு
வதொன்றிலலைச் சொல்லுவார் தமக்கறையோ சொ
ல்லொணாதே. (௧௪)

(இ-ள்) அருமறையாகம முதனூல — பொருளறிதற் கரிதாகிய நாலுவேதங்களுங் காமிகமுதலிய விருபத்தெட்டாகமமு முதனூல் அஃதெக்காரணத்தா லெனனில்?

அனைத்து முரைக்கைபினால — அரமபொருளிலபம் வீடாகிய நானகினையு முறைக்கிரத்தினாலே அவனே சாவஞ்ஞனை "வினையினீங்கி விளங்கிய வறிவின முனைவன் கண்டதுமுதனூலாகும்" என்றார் தொல்காப்பியனார்.

அளப்பரிதா மப்பொருளை — வேதமநந்த சாகையையுடைத்தாகையா லளவிட்டகனை யறிதற்கரிது ஆதலாலொருவராலு மறியப்படாதோ வெனில்?

அரனருளா லுணர்க்க டருவர்கள — சிவனது காருண்ணியத்தினாலே யநந்தமான வேதத்தை நாலாகப் பிரித்து வேதவியாச பகவான் விளங்க வருளிச்செயதார்.

பின் றனித்தனியே தாமறிந்த வளவிற் றர்க்க மொழித்தரங்க — அதனையுற்று நோக்கி யாராய்ந்து தமக்கேற்ற கடவாளுமா விடையாளுந் தமதுபொருளையே மேலாக்கிப் பிறமதத்தைக் கீழாக்கி யந்த வேதத்தைப் பின்சென்று சமயபே

னின்றுறு சமயநூ லங்கங்களையு மதற்கதற்கேற்ற பொருள்களையு
சாதிக்க ஞ் சாதிக்க,
மிருதிபுராண மனுமுதலிய பதினெட்டு மட்டாதசபுரா
கலைகளைமற்று ணமு மறுபத்துநாலுகலையு மற்றுமுண்டாக
மெல்லாமெய் பட்டதெல்லா மகதவேதத்தின வழியா
நூலின்வழி தலால் வழிநூலெனப் பெறும 'முன்னோர்
நூலின முடிபொருங்கொத்துப் பின்னோன
வேண்டும விகற்பங் கூறி யழியாமரபினது வழி நூலாகும்" என
வறிக

புடையாறங்க வேதங்களுக் கங்கமாகிய சிட்சைமுதலி
மவேதாகமம யவாறு முபாங்கமாகிய மீமாஞ்சை முதலி
ய நாலுமாகப் பத்தும் புடைநூலெனப் பெ
றும

உபாங்கத்தைத் தலைக்குறைத்திலாக்கி யங்கமெனறூர்
வேதமெனபதனை யிருபாலுங் கூட்டிப் பொருளுரைக்க.

அவையாவன:—
சிக்ஷை கற்பம் நிருத்தம சந்தோவிசிதி சோதிடம வியாக
ரணம.

இவற்றாற் பிரயோசன மியாதோவெனில்?

வேதோச்சாரணத்துக்கு வணத்திற முற்றறுஞ் சுரத்
தையு மாத்திரா பேதத்தினையும விளங்கச் சொல்லுகையாற சி
க்ஷையெனப பெயராயிற்று.

வேதமோது மதற்குக் கன்மத்தையுங் கன்மபிரயோஜன
த்தையுஞ் சொல்லுதலாற் கற்பமெனப் பெயராயிற்று.

வேதவசனங்களுக் கர்த்தத்தை விளங்க வறியத்தக்கதா
க வகுப்புகங்களோமம நிர்வசனத்தைச் சொல்லுகையா லத
ற்கு நிருத்தமெனப் பெயராயிற்று.

மந்த வாக்கியங்க ளெல்லாஞ் சாபேட்சை நிரபேட்சையாக விருக்குமாகலால் அதனைய விடப்பட்டாதென வறிக

ஆனாலிப்பட்டாயிதனில அறியும பகுதியாதெனின்?

ஓரிடத்திலே சுத்தசாமாத்தியத்தாலும வத்துசாமாத்தியத்தாலும சங்கிதாக்கிரங்களைக்கொண் டறிவதென வறிக

காரசிங்கமுதலிய வுபபேதங்க ளிருநூற்றேழும வழிநூலெனப்பெறும்

முதனூலாகிய வாகமத்தையும வழிநூலாகிய வுபாகமங் களாக விரண்டினையு முற்றுநோக்கி யுக்கிரசசோதி சத்தியசோதி பிரகற்பதி பரதா முதலாகிய வாசாரிமாரார் செய்யப் பட்ட போககாரிகை மோட்சகாரிகை பரமோட்ச நிராசகாரிகை முதலிய பிரகரணங்களைப் புடைநூலெனப் பெறும

இத்தன்மையை யுடைத் தாகையினாலே.

சுருதிசிவாகம இத்தச்சுருதியு மாகமங்களுமே பிரமாண
மொழிபச் சொ சாத்திரம், மற்றுள்ள வெல்லாவற்றிற்கும் பி
ன்னுவ தொன்மி ரமாணிக்க முண்டென்று சொல்லப்பெரு
ஸலே

சொல்லுவார் இதற்கு வேறாயிருக்கிற சாத்திரமே பிரா
சமக ளைரயோ மாணியமென்று கூறும்வாசளுக்கு நாமென
சொல்லொணா ன சொல்லப்போகிறோம எ-று
சே

ஏகார மீற்றசை

இதற்கு அசிதம் காமிகம் மிருகேந்திர பத்ததி சுவாயம் புவம பராசரோப புராணம் சாவசித்தாகத சங்கிரகங்களி லறிக. (௧௪)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் வேத சிவாகமங்களே சித்தாந்த சாஸ்திரமென்பது திடப்படுத்துகின்றது

அருமறையாகமமுதனூ லனைத்துமுரைக்கையினு லளப்பரிதாமப்பொருளை-முடிய வோதியுணர்தற் கரிதாகிய வேதசிவாகமங்க ளிரண்டினு மெல்லாத்தையுஞ் சொல்லுகையினு லதனுடைய பொருளைப் பூர்வோத்தர விரோதமற வேகவாக்கியத்தைப் பண்ணவுரிது,—

அரனருளா லணுக்கள் தா மறிந்தவளவிற் றர்க்கமொடு தே தரங்களினுற ரனித்தனியே பின் சமயஞ்சாதித்துத் தருவர்கள்—விஞ்ஞானத்தின் பொருட்டு ருஷிகள் ஞானப்பிரதமான மந்திரங்களைத் தபசுடனேகூட புனச்சரணைபண்ணி சர்வமந்திரபதியானவ ரந்தந்த மந்திரங்களுக்குந் தபசுக்குந் தக்க விஞ்ஞானத்தைப் பிரகாசிப்பிக்க அந்த ஞானத்தளவு வேதாகமங்களிலே யேகதேச மறிந்து தாமறிந்த மட்டுங்கொண்டு பூர்வபக்ஷமும் சித்தாந்தமுமாக வேறுவேறு சமயமாகச் சாதித்து அந்தப்படியே தாங்கள் சாஸ்திரங்களும் பண்ணுவார்கள்—

மிருதி புராணங் கலைகள் மற்றுமெல்லா மெய்ந்நூலின் வழிபுடையா மங்கம வேதாந்தஞ் சுருதி சிவாகம மொழியச் சொல்லுவதொன்றில்லைச் சொல்லுவார் தமக்கறையோ சொல்லொணுதே- ஸ்மிருதிகள் புராணங்கள் சிக்ஷா கற்பம் வியாகரணம் நிருத்தம் ஜோதிஷம் சந்தசு என்னுங் கலைகள் இவைகளுஞ் சாஸ்திரமென்று சொல்லப்பட்ட வைகளெல்லாம் யதார்த்த ஞானத்தமான வேதசிவாகமங்களாகிய முன்னூலினுடைய வழிநூலும் அதற்கு சமான தந்திரமும் வேதத்துக்கு அங்கமுமாம் பிரதானமாச் சொல்லப்பட்டது வேதமுஞ் சிவாகமமு மொழி

யவேறில்லை, இதற் கதியமாக சுவதந்திராகமங்களை விட்டநூ
லாதிகளுண்டென்று சொல்லுமவர் வேதபாஹிய ராகையால்
அசமபாவிதரான தொண்டர்களோ நித்தரஞ் சொல்லலா
காதென்றிதன்பொருள்

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

முன்னூல் வழிநூல் சார்புநூ லிதுவென்று சாற்றுகின்றார
அணுக்கள் - ஆன்மவர்க்கங்களாகிய மனு முதலிய மிருதிக
ர்த்தாக்கள் வியாசர் முதலிய புராணகர்த்தாக்கள்,—ப
ன்னின—மிருதி-முதலியன, வேதமாகிய முதனூலுக்கு,—வழி
நூல் ஆறங்கமுமுடை-சார்புநூல் முதனூலாகிய சிவாகமத்துக்
குபாகமங்கள் வழிநூல், பிரகரணமுதலியன சார்புநூல்,—சுரு
திசிவாகம மொழிபச சொல்லுவ தொன்றில்லை- வேதத்துஞ் சி
வாகமத்தும் புறச்சமய முட்சமய மடங்குதலா லஃதவற்றிற்கு
வியாபகமாய்க் கொண்டு புறம்பா பொருசாஸ்திரமில்லை,—அ
றை - உத்தரம்

மற்றவை வெளிப்பொருள்.

ஒன்றில்லையென்பதற்குப் புறச்சமய முட்சமய சாஸ்திர
ங்களும் பிரமாணங்களாய்க் கொண்டு இல்லையென்று பேசவே
ண்டாம், தமத்ததிப் பிரமாணங்கொண்டு பௌத்தராதிகளி
னும் ஸ்ரீராமகண்ட குருபண்ணின சர்வாகமப பிரமாணிய
த்துஞ் சாதித்திருத்தலால்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

நூலெனப்படுவன வெல்லா மொருங்கிரணவாதலினறி மு
தனூல் வழிநூல் சார்புநூல் பூருவபக்கநூலெனப் பலவேறுவ

கைபபட்டு மேனூலகளை நோககக் கீழ்க்கீழ நூலகண மெ
ய்மையுடையனவாம. அவறறுள ஏனைச்சமய நூலகளெலலாம
முதனூலாகிய வேதாகமப பொருளை முழுவது முளளவாறுணே
ரமாட்டாதாா அவற்றுட் சிலபொருளைச் சமுத்திரகலச நயம
பற்றி ஆணடாணடெடுததுக கொணடு தத்தமறிவளவுககேறபத
தொகுத்தும விரித்துஞ் செய்த நூலாகலான அவையெலலாம
புறவயச்ச நூலெனப்படும. சமயநூலல்லவாகிய மிருதிபுரா
ணங்கலைகள, மறறுமென் பதனுற் றழுவப்படும உபாகமமுதலா
யின வெல்லாம அவ்வேதாகமப்பொருளை உள்ளவாறுணாநதோ
ா அவறறைப பிறாககு இனிது விளககுதற் பொருட்டு நால்வ
கையாபபினுளொன்றன் வழிப்படுத்துச் செய்த நூலாகலான
அவை வழிநூலெனப்படும. ஏனைக்காருடக தக்கிணமூர்த்திய
வாகமாககங்களும, சிக்கை கற்பசூத்திரமுதலிய வேதாங்கங்
களும, முறையே யவ்விரண்டனையு முளளவாறுணர்தற்குச் சா
ாபாயப் புடைபட்டு நிகழ்தலின, அவை சார்புநூலெனப்படும.
இவ்வாறன்றி வேதாகமங்களி னடங்காதபொருளா யொன்ற
னை யெடுத்துககொண்டு சுதந்திரமாய்ச் செய்யுநூல ஒன்றுமில
லை, உண்டென்று சொல்லிப் பிணங்கும பேதைகள் எனக்கடவா
ரெனபதாம.

சமுத்திர கலசநயம்பற்றி யெடுத்துக்கொண்டு தருதற்கு
ம அவாசுவதந்திர ரல்லரெனபார் அரனருளாரெனறார்.

பிறநூற்கெழுபூாவமென முன் வருதலின அஃதுவேறுகூ
றுதொழிந்தார.

சாறித்தூத தருவர்களென வினையும்.
ஆமெனபதனை மேலுங் கூட்டுக.
ஆகமாந்தததை அந்தமெனறது தலைக்குறை.
ஒன்றுமெனனுமும்மை விகாரத்தாற் றொக்கது.

உரை : தந்ந

எல்லா மருமறையாகமத்தே காணப்பட்டவைகுகலை இனி து விளக்கியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன்சொன்ன வேதாகமங்களிலே எல்லா மடங்குமாகில் மற்றுமுள்ள நூல்க ளெதுக்கென்ற மாணாக்கனை நோக்கி அருளிச் செய்கிறார்.

அருமறையாகமமுதனூல் - அறிதற்கரிய வேதாகமங்க ளிரண்டும் எல்லாத்துக்கு முன்னூல்,—அனைத்து முணாக்கையினால் - சாரத்தையும் விரியச் சொல்லுகையினாலே,—அளப்பரிதாம - அந்த நூல்களிலுண்டாகிய வத்துக்களைச் சேர வாராயந் தறிகைக்கு அரிதாயிருக்கையினாலே,—அப்பொருளை யரனருளால் நுணுக்கடருவர்கள்- அந்த வேதாகமங்களை விரியச்சொன்ன வத்துக்களைத் தம்பிரானார் திருவருளைப்பெற்ற பெரியோர்கள் அந்த திருவருளினாலே சுருக்கி ஒருநூலாகச்செய்து அந்த வத்துத்தைப் பக்குவானமாக்களுக்குக் கட்டுரைப்பார்கள் இது வொழிந்து,—பின தனித்தனியே தாமறிந்த வளவிற் றறகமொடுத்தர ஙகளினாற் சமயஞ்சாதித்து - இந்த நூல்களையறிப் பின்னையும பரமேஸ்வரனை யறியாதவர்கள் ஒருவர் சொன்ன தொருவர்க்குப் பொருந்தாமல் தங்கள தங்கள் போதத்துக்குத்தக்க சங்கற்பங்களையும் அதனுடன் நிராகரணங்களையும் வைத்துக்கொண்டு அதுக்கதற்குத்தக்க சமயங்களைச் சாதித்துச் சொல்லுகிற நூல்களும அநேகம். இப்படி யான்மபோதத்தாலே சொல்லுகிற விந்த நூல்களுமின்றி,—மிருதிபுராணங் கலைகள் மற்றுமெல்லா மெய்க்நூலின் வழிபுடையாம - மிருதி என்கிற நூலும் பு

ராணங்களும் சாத்திரங்களும் இவையொழிந்து சொல்லப்பட்டவையெல்லாம் சத்தியமாயிருந்துள்ள வேதாகமங்களின்வழிப் பேர்ந்த விரிந்தநூல்களாம் —அங்கம் வேதாங்கம் - சந்தைச் கற்பம் வியாகரணம் நிருத்தம் சிக்ஷை சோதிடம் என்னும் அங்கம் ஆறும் வேதத்துக்குச் சொரூபமாயிருக்கும் —சுருக்கிச்சிவாக்கியமொழிப்ச சொல்லுவதொன்றில்லை- வேதமும் ஆகமமுமொழிப வேறொன்று இப்படி சர்வத்தையுஞ் சொல்ல மாட்டாது —சொல்லுவார்தமக் கறையோ சொல்லொணாதே - அந்த நூல்களைப்போல மற்றுள்ள நூல்களையும் நூலென்றுசொல்லுவாரகளெல்லாம் சொல்லவோ! சொல்லவென்று விசாரிக்கில் சொல்லிமுடியப் போகாது

பின் றனித்தனிப் பிரித்த வள்ளிற் றர்க்கமோ தெந்திரங்களினால் சமயஞ் சாதித்துச் சொன்ன நூலென்றது பரசமயிகளைப் பற்றியதெனக் கொள்.

உலகாயதன் சமயஞ் சாதித்துச் சொன்ன நூலென்றதற்குப் பிரமாணம் அவன்மறுப்பு பரபக்ஷம் அவனமதம்- க-செ "இந்திரபுரோகித னியம்புமொரு நூலின, றந்திரமெனுந்தறிவினோடருளிலாமற, சந்தனையுயத்துமனை மாலைகடயங்க, வுந்தியுலகத்தனுள் காயதனுரையபான்" என்றும்,

புத்தன் சமயஞ் சாதித்துச் சொன்ன நூலென்றதற்குப் பிரமாணம் அவனமதம்-க-செ. "நீதியார்வேத நூலின் நெறியலாவறங்களுரு, மோதிபோனார்த்திசீல முடையராயுடலமுடிப, போதின்மேமரத்தின்மேவு புத்தர்கால்வரினும் வைத்துச், சாதிதாவிலாதகொள்கைச் சவுத்திராந்திகன் மூன்சாற்றுட" என்றும்,

அமணன் சமயம் சாதித்துச் சொன்ன நூலென்றதற்குப் பிரமாணம் அவனமதம் - ரு - செ. "அந்தவாய்மொழியி

ஞாலவனசரண மாதியோகமுதலானறு, விகதமானிட மாங் கிடாதவனை யிங்கியம்பியபி லிதனையொருள, வநதகாலமுயிர தனமதனமிபற மாறுவினைமருவு புறகலம, பகதமகிஷ்டேறு டருதியாயினைவ படைப்பதினமியுள பதததேம" என்றும,

மீமாங்கிசன சமயஞ்சாத்தூச சொன்ன நூலென்றகரத்துப் பிரமாணம் பட்டாசாரியன மதம்-க-செ "வேதமேபோதிராத விலயென்றுவினணிலேறச், சேதமாஙகனமஞ்செய்யச் செபமுனிசெப்புநூலி, நீதியேகொணடுபட்டா சாரியனிகந்துரிவை, யோதகீரஞாலத்துளளே யுள்ளவாறுரைககலுற்றும்' என்றும,

மாயாவாதி சமயஞ்சாத்திரத்துச் சொன்ன நூலென்றதற்குப் பிரமாணம், அதனமதம் - க - செ. "நானேபிரமமென றுரைத்து ஞாலமபெயததேசெனையெண்ணி, யூனேபுகுந்துதின றுயிர்கட் குபதேசஞ்செய்ததவரு மானுடிகேடனமாய மாயாவாதிபோகித, தானேயுரைக்குமினனூலி னுண்மைததனனைசசாற்றுவாம்" என்றும்,

பாஞ்சராத்திரி சமயஞ்சாத்திரத்துச் சொன்ன நூலென்றதற்குப்பிரமாணம் அவனமதம்-க-செ. "ஆதியாயருவமாகி யகண டபூரணமாய்ஞானச், சோதியாய்நின்றமாயன சுவேசசையா, லுருவுகொண்டு, நீதியார்கருணையாலே நீள்கடற்றுயின்றநாலு, மோதிருமனறுபஞ்ச ராத்திரியுரைப்பனறே" என்றும.

ஆகசமயங்கள் ஆறுங் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது, வேதமும் ஆகமமும் சர்வத்ஞையுஞ் சொல்லுகையினுல் அந்த வித்தையெல்லாத்தையும் அறிதற் கரிதானதுகொண்டு அவையிற்றுக்குள் வேண்டத் தக்கவை யிறைவன் தம்பிரானுர் திருவருளைப் பெற்றவாகளை சுருக்கிச சொன்ன சாத்திரங்களும் வேண்டுமென்றும் அந்த இரண்டு நூலு

சரும அந்தந் தெரியாமல் தங்கள் சங்கற்ப கருத்துச்சுதந்தரச்
சமயஞ் சாதித்துச் சொன்ன நூல்களும் அநேக முன்சொன்
னம் இப்படிச் சொல்லப்பட்ட நூல்களு மிருதிமுதலான மற
நுமுள்ள நூல்களும் இந்த விரண்டு நூலினுமுள்ள தொழிந்து
வேறல்லவென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(நூலெனப் படுவனவெல்லாம் ஒருசிகரணவாதலின் முதனூ
ல் வழிநூல் சார்புநூல் பூருவபக்ஷ நூலெனப் பலவேறு வகைப்
பட்டு மேன்மேனூல்களை நோக்கிக் கீழ்க்கீழ் நூல்கள் மென்மை
யுடையனவாம்),— சமயம்-அவற்றுளொன்றாச் சமயநூல்களெல
லாம்,—அந்தமுறைக்கையிற் றெளப்படரிகாம்-அந்த தநு கூ
றுகையிற் றாலவிடற்கரிய.—முதனூலருமறையாகம மப்பொரு
ளை - முதனூலாகிய வேதாகமப்பொருளை,— அனுக்கிரகனரு
ளாற் பின்றனித்தலின்ய - முழுவதுமுணரமாட்டா
த உயிர்கண் முதல்வனருளாலவற்றுட் சிலபொருள்களைச் சமு
த்திரகலசநியமபற்றி யாண்டாண்டெடுத்துக் கொண்டு,—தா
மறிந்தவளவில் - தக்கமறிவளவிற் கேற்பத்,—தர்க்கமொடுத்த
ரங்களிற்றாற் சாதித்து தருவர்கள் - பூர்வபக்ஷசித்தாந்தங்களி
ற்றாற் சாதித்துத்தொகுத்தும் விரித்தும் செய்தநூலாதலா ன
வையெல்லாம பூருவபக்க நூலெனப்படும்—மிருதி புராணவ க
லைகள் மற்றுமெல்லாம்-சமயநூலல்லவாகிய மிருதி புராண க
லைகள். மற்றும் என்றதனாற் றழுவப்படும் முதலாயின
வெல்லாம்,—மெய்ந்நூலின் வழிபடும்-அவ்வேதாகமப்பொருளை
யுள்ளவாறுணராதோர் அவற்றைப்பிறழ்ந்து இனிது விளக்குத
ற்பொருட்டுக் நால்வகை யாப்பினுள்ளொன்று வழிப்படுத்துச

செய்தநூலாகலா னவை வழிநூலெனப்படும் — அங்கம் வேதா ங்கம புடையாம - ஏனைக்காருடத்தக்கணமுதலிய வாகமங்களு ஞ் சிக்ஷைக கற்பசூத்திர முதலிய வேதாங்கங்களு முறையே ய வ்விரண்டனையு முள்ளவாறுணர்தற்குச் சார்பாயப் புடைபட் டு நிகழ்தலின் அவைசார்புநூலெனப் படும்,—சுருதி சிவாகம மொழிபச சொல்லுவதொன்றில்லை-இவ்வாறன்றி வேதாகமங்க ளினடங்காத பொருளா யொன்றனை யெடுத்துக்கொண்டு சுத ந்தரமாய்ச செய்யுநூ லொன்றுமில்லை —சொல்லுவார் தமக்க றையோ சொல்லொணுதே - உண்டென்று சொல்லிப் பின்னகு ம பேதைகட் குத்தரஞ்சொல்லுதல முடியா தெனபதாம

---

## மறைஞானதேசிகர் உரை.

ஆதிகாலத்திலே ஞான மொன்றாயிருக்க வேதாகமங்களென
விரண்டாக்கிக் கூறியதென்னெனில்? அதிகார பேதத்தா
லென்பதூஉ மதனுட் சித்தாந்தமே சிறப்புடைத்
தெனபதூஉ முணர்த்துகின்றா

வேதநூல் சைவநூ லென்றிரண்டேநூல்கள் வே
றுரைக்கு நூலிவற்றின் விரிந்தநூல்க, ளாதிநூலநாதி
யமலன்றருநூலிரண்டும் பூரணநூல் பொதுச்சைவ ம
ருஞ்சிறப்புநூலா, நீதியினுலகர்க்குஞ் சத்திநிபாத
ராக்கு நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே
தாந்தத், தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம்
பிறநூல் திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்
(கரு)

(இ-ள்) வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள் ஆப்த வாக்கியமாகிய வேதமு மாகம முமாகிய விரண்டுமே யுலகத்திற் சிறப்புடைய நூல்கள். அஃதெக்காரணத்தா லெனின்?

வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்களாதி நூ லநாதியமல னற்று நூ லிரண்டுமே அநாதியே மலமில்லாத நிட்களமான சிவனிடத்தினின்று வாக்குருப பிரபஞ்சமாக புறப்பட்டதை யொருவராலு மதனைத் தரிக்கப்படாதபடியாலே, மகாசதாசிவதேவநாயனா ரதனைத் தரித்துக் காரணமாக களுக்குபயோகப் படுகையின் பொருட்டுத் தமது மேலான பஞ்ச வதனத்தினின்று சிருட்டி காலத்திலே வேதாகமங்களை யுண்டாக்கினது.

அந்த வேதத்தில் விரித்துக் கூறியவற்றை யுற்றுநோக்கி

அக்ஷபாதர் நியாயத்தையும்

கணாதர் வைசேஷிகத்தையும்

கபிலர் சாங்கியத்தையும்

சைமினிபகவான் மீமாஞ்சையையும்

வாசுதேவன் வைட்டணவத்தையும்

பிரபாகரன் பிரபாகரத்தையும்

வேதாந்தத்தையும்

வேதத்தினைவழியே யுண்டாக்கின சாத்திரங்களும் வழி நூலெனப் பெறும்.

இவ்வியாகமங்களை யுற்றுநோக்கிச் சிவசமவாதம் ஐக்கியவாதம் ஈசுரைக்கியம் சிவசம்வாதம் பேதவாதம் பாஷாண வாதம் சங்கிராந்தவாதம் சமவேதவாதம் நிமித்தகாரண பரிணாமவாதம் எனக்கூறிய சமயபேதங்களைப் பிரித்துரைத்த யதனை

பறுத்துச் சாத்திரங்களாக்கிக் கூறினவைகளே மாதிநூலென படும்.

"நூலெனப்படுவது நுவலுங்காலை, முதலுமுடிவு மாறு கோளின்றி, யுண்ணின்றகன்ற வுரையொடு பொருந்தி, நுண் ணிதின் விளக்கலதுவதன் பண்பே" என்னு மிலக்கணத்தை யுடைத்தாதலா னூலென்றுரைத்தார்.

அந்த முன்னூலாகிய விரண்டு நூலுந் தம்மி லொக்குமோ வெனனில்?

ஆரண நூல் பொது — வேதநூல் சாமான்யமெனப் பெறும. அஃதெக்காரணத்தாலெனனில்? அகோரமுகமான தற்புருடாதியான நாலுதிருமுகத்தி லுண்டாகையால்

அந்த நாலுவேதமுந் தம்மி லொக்குமோ வெனனில? அஃ தொவ்வா.

சத்தியோசாதத்திற் றோற்றிய இருக்கு, அதைப்பற்ற வாமத்திற் றோற்றிய யசுர்வேதஞ் சிறப்புடைத்து, அதனைப்பற்ற அகோரத்திற் றோற்றிய சாமஞ்சிறப்பு, அதனைப்பற்றத் தற்புருடத்திற் றோற்றிய அதர்வணம விசிட்டமெனவறிக

எனவே முகபேதத்தா லிதுவு முத்தரோத்தர தம்மி ல்விசிட்டமாயிற்று.

சைவ மருஞ்சிறப்பு நூலாம — காமிகமுதலிய இவ்வாகமங்க ளிருபத் தெட்டுஞ்சிறப்புநூலெனப்பெறும். அஃதெக்காரணத்தாலெனனில்?

ஈசானமுகத்திற் றோன்றினமையாலு மதற்குமேற றோற மின்மையாலும் இதற்குமேலான நூல்கள் வேறின்மையாலுஞ் சிறப்பாயிற்று.

சிவனுடைய திருவாக்கொன்றாயிருக்கப் பொதுவென்றுஞ் சிறப்பென்று மிருவிதப்படுத்திக் கூறிய தென்னையோவெனில்? அதிகாரிகள் பேதத்தாற் பரம்பரமென விரண்டாயிற்று.

அஃதென்போலெனில்? கண்ணொன்றாந் தன்மை யெல்லார்க்கு மொன்றாயிருக்கவு மிராத்திரியில் § விலாளத்துக்கு மானுடர்க்கும் விலக்கணமாகச் சீவிக்கக் கண்டோமே! ஆதலாலதுபோலென வறிக.

* § விலாளம் - பூனை.

நீதியினூல காசகுஞ சத்தி ளியாதற்கு நிகழ் த்தியது

அந்த வேதாகமங்களைச் சிவ னிரண்டு பகுத்துக் கூறினது "உலகமென்பது யாவரோர் மாட்டே" என்பதனால், வேதத்தில் பாரப்பாரமுதலிய வன்னத்தார்க்கும் சதுராசிரமிகளுக்கும் மனுமுதலிய நீதிசாத்திரத்தின வழிநின ரனுடிக்கு மதிகாரியாக்குங் கூறியது. சைவாகமத்திற் கூறியது, நால்வகைச் சத்திநிபாதானுகுணமாகச் சிவதீக்கையினையுடைய அதிகாரியாகிய பக்குவான்மாக்களுக்கே கூறியது அஃதெச்சிறப்பினையுடையதெனின்?

நின் மறையி னொழி பொருள் வேதாகதத் திதி லபொருள் தொ ணடுரைக்கு நூல் சைவம்

அநேகசாகையினையுடைய வேதநூல் ஓவாணமாலையு மாயையாகிய வசித்தலைபயு மற்றுமொழிவுபட்ட பொருள்களையுங் கூறும். அந்தவேதாந்தத்திலே சூக்குமமாக பதியினது சொரூபத்தைத் தெளிவுபெறப் பிரித்துக் கூறமாட்டா, இதுவே யந்த மூபபொருளையும் விரித்துக் [illegible].

புறனூ நிகழ் பூர்வம்

வேதத்திற் சொல்லுமது பூர்வபக்க மெனப்பெறும்.

சிவாகமங்கள் இவ்வாகமங்கள் சித்தாந்த மெனப்பெ சித்தாந்த மாகு றும். எ-று ம.

சிறிதாகமங்க ளிருபத்தெட்டையும் பஞ்சவத்திரத்திற் றோன்றிற்றென்றும், சிறிதுவசன மீசானத்திற் சிவபேதம் பத்து முப்பாகமங்க ளுடனே கூடியும், அங்கங்க ளுடனேகூட நாலுவேதமு முண்டாயிற்றென்றுஞ் சொல்லியிருக்க, ஈண்டீசானத்திற்றானே தோற்றுமென றுரைத்த தென்னெனில்? சிருட்டி பேதத்தாலாகமபேதங் கூறியதென் றாசாரியர் தாமே விரோதமின்றிப் பொருளுரைப்பது தன்மமென்று மதங்காகமத்திற் கூறுகையா லவ்வழியே கொள்க வெனவறிக

இதற்குக் காமிகதந்திராவதாரத்து மாசாரியாபிடேகத்தும் பஞ்சப்பிரம பாடியத்தும் சுவாயம்புவத்தும் மோக்ஷ ரோத்தரத்தும் மூலதந்திராவதாரத்தும் இரத்தினத்திரயத்து மறிக

“வேதமோடாகம மெய்யா மிறைவனூ, லோதும்பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன, நாதனுரையிவை நாடி லிரண்டந்தம், பேதமதென்னிற் பெரியோர்க் கபேதமே,, எனவறிக. (௧௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலு மதபக்ஷ புறக்கடை.

வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் - வேதம் சிவாகமமென விரண்டே சாஸ்திரம். பிரமவிஷ்ணுவாதி தேவர்கள் ருஷிகள் பண்ணின சாஸ்திரங்களல்லவோவெனனில்?—

வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்களாதி நூல் - வேதசிவாகமங்க ளல்லாமல் தேவர்களாலும் ருஷிகளாலும் சொ

ல்லப்பட்ட சாஸ்திரங்களெல்லா மிந்த வேத சிவாகமங்களிலே யேகதேசத்தை யெடுத்துக்கொண்டு தங்களுடைய பசு ஞானத்தினாலே சொல்லப்பட்ட வாதிசாஸ்திரம் —

அநாதியமலன் றருநூலிரண்டும் - அநாதி நின்மலனாகிய சிவனாலே சொல்லப்பட்டதாகையால் வேத சிவாகம மிரண்டு மநாதி நூலென்று சொல்லப்படும். ஆகில் வேதமென்றுஞ் சிவாகமமென்று மிரண்டாகச் சொல்லவேண்டுவா னேனென்னில்? —

ஆரணநூல் பொதுச் சைவ மருஞ்சிறப்புநூலாம் - வேதமானது சூரியன்முதலாக ஈஸ்வரனை முடிவாயுள்ள தேவர்களையெல்லா மாராதிக்கச் சொல்லுவதாகையாற் பொது, சிவாகமஞ் சிவனொருவனையே யாராதிக்கச் சொல்லுகையால் சிறப்பு நூலாகும். இவ்விரண்டுக்கு மதிகாரிகளாரெனில்? —

நீதியினாலுலகர்க்குஞ் சத்திநிபாதர்க்கு நிகழ்த்தியது - கிரமத்திலே யனாதி யனுஷ்டானங்களைப் பண்ணிப் புண்ணிய வுலகங்களையடைய விச்சிப்பவருலகர், அவர்களுக்குச் சொன்னது வேதம். சிவசத்தி பதிந்தவர்களாய்ச் சிவ சாயுச்சியத்தை யடைய விச்சிப்பவர் சத்திநிபாதர், அவர்க்குச் சொன்னது காமிகாதி சைவாகமம். ஆகில் வேதமுஞ் சைவமும் வேறேயோ வென்னில்? —

நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத் தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் - வேதத்திலே தேவதாராதனையைச்சொல்லி, யதற்கு ஸகர்ஷணாதி பிரதிஷ்டாந்த முச்சவாதி தீர்த்தாந்தமான தந்திரங்க ளொன்றுஞ் சொல்லாதபடியாலே யவைகளையும், சார்வாகாதி பூர்வபக்ஷமும் நிராகரணமுஞ் சொல்லாதபடியாலே யவைகளையும், வேதாந்தத்தின் குற்றமற்ற சுக குமாரார்த்தத்தையும், திருவுள்ளத் தடைத்துக்கொண்டு விளங்கக் கூறியது சைவாகமமாகையால், வேதத்துக்குஞ் சைவாகமத்துக்கும் பேதமில்லை.

பிற நூலதிகழ் பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்-வேத சிவாகமங்களுக்கு அந்நியமாய்ப் பிரகாசிக்கப்பட்ட பசுசாஸ்திரங்களெல்லாம் பூர்வபக்ஷம், காமிகாதி வாதுளாந்தமான சைவாகம மிருபத்தெட்டுஞ் சித்தாந்தமென றிசைபொருள்

× காஷணம் - இழுப்பு

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

அப்படிச் சமய சாத்திரங்களெல்லாம் வேதாகமங்களிற் சுருக்கிச் சூசிப்பித்திருக்கும், அவைகளையுருத்திர தேவருஷிகள் தனித்தனி விரித் தட்சமய புறச்சமய சாத்திரங்களாகப் பண்ணினார்களென்றும், அப்படியாகில் வேதமென்று மாகமமென்றுஞ் சாத்திரமிரண்டு வருவானேனென்னின், பிரகரணவிரோதங்களிருந்தாலும் வியாகரணநீதியிற் சாமானிய விசேஷசூத்திரங்கள்போற் பொதுச் சிறப்புச் சாத்திரங்களாயிருக்குமென்றும், அப்படி வைதிகசம்மதமாய் விருத்தாசல புராணத்தினு மாகமத்தினு மிருப்பதறிந்து குறித் தருளினார்.

வேத மூலகர்க் கென்றது-லௌகிகம், வைதிகம், அத்தியான்மிக மென்கின்ற முச்சாத்திரப் பிரசித்த வுலோகதனம வருணச் சிரமவழி வழுவாமையுந் தவிர்க்காதி வைதிகப் பிரமவிசாராதிகளிற் பரபுத்தி பண்ணி யொழுகு மலபரிபாக மில்லா மாந்தர்க்கென்று பொருள்.

சிவாகமஞ் சத்தியார்க்கென்றது அதிமார்க்க மாத்திரமென்கிற இருசாத்திரப் பிரசித்தமா யுலோகதனமாதி விடாதும விட்டிருக்குஞ் சிவதீக்ஷாவான்களாய்ச் சிவதனம திரி

பதார்த்த ஞானத்திபான சமாதியுபாயமு சமயாதிகளு மிச
சாவானசனுக்கென்றும் பொருள்

நீணமறையி னொழிப்பொருள்-வேதத்திற் கெட்டாப் பொருள்

வேதாந்தத் தீதில்பொருள் - சித்தாந்தத்துக் கொத்து விரோதிடாத வேதாந்தப்பொருள்.

கொண்டு - அங்கீகரித்து.

. பிறநூல திசழ பூர்வம் - வேதவேதாந்த முதலிய சாஸ்திரங்கள் பூர்வபட்சம்.

மற்றைய் வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

வேதமுஞ்சிவாகமமிரண்டும், ஏனையோர் செய்யப்படும் வழிநூல் சார்புநூல் பூருவபக்கநூல்களி னொன்றாகலைத் தெனனு தாகு ஒருவாற்றானு மியைபின்றி அவையனைத்திற்கும் முதனூலாகி அநாதிமுத்தனாகிய விறைவனாற் றரப்படுநூலாக, ஏனைய வெல்லாம் இவையிரண்டினுள்ளும் விரித்த நூல்களாகலின் இவ்விருவகைநூலுமே நூலென் றுயர்த்துக் கூறப்படுவனவாம். அற்றேல், முதல்வனாற் றரப்படு முதனூலை யொன்றாகவுந் தொகுத்தல் இங்ஙன மிருவகைப்படுத் தோதியது என்னையெனின்? அஃதொக்கும். முதல்வன் பெருங்கருணையாளனாகலின் உலகத்தாருய்தற் பொருட்டுஞ் சத்திநிபாத முடையா ருய்தற் பொருட்டுந் திருவுளத்திற் கருதி பொருள் பெறப்படத் தோனா றுஞ் சூத்திரமும், அதனை யவ்வாறு வெளிப்படத் தெளித்துரைக்கும். பாடியமும்போல, முறையே வேதமுஞ் சிவாகமமுஞ்

செய்யப்பட்டனவாகலான் அவையிரண்டுமே முறையானே பொதுநூல் சிறப்புநூலெனப்பட்டுச் சூத்திரமும் பாடியமும்போல வேறுவைத்தெண்ணப்பட்டன. இங்ஙனம் வேதத்திற் கூறுங் கருமகாண்டப்பொருள்கட்கு இன்றியமையாது வேண்டப்பட்டு நின்றனவாய பொருள்களையும் வேதமுடிபாய உபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக்கொண்டு விளக்குவது சிவாகமமாகலான், இதனின் வேறாய வேதத்தின் பூர்வபக்கப்பொருளைச் சொல்லு மேனூல்களெல்லாம் பூர்வபக்கநூலெனவும் அதன் சித்தாந்தப்பொருளைச் சொல்லுவதாய சிவாகமஞ் சித்தாந்த நூலெனவு மாமென்பதாம்.

சிவாகமத்தின் சிறப்புக் கூறியவாறு.

இவ்வாறன்றி யுரைப்பனவெல்லாம் போலியென்பது சொற்கிடக்கை முறையானும் மகுடாம முதலியவற்றானு மறிக.

இவை மூன்றுசெய்யுளானும் அவ்வந் நூல்களி னியல்புகூறு முகத்தான் மேலது வலியுறுத்தப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

வேதமென்றும் ஆகமமென்றும் புராணமென்கிறது முதலாக இப்படி நூல்கள் வெகுவிதமா யிருக்குமோவென்ற மாணாக்கனை நோக்கி மேலு மருளிச்செய்கிறார்.

வேத நூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் - வேத நூல் என்றும் ஆகமநூலென்றுஞ் சொல்லப்பட்ட விரண்டுமே நூலென்பது, மற்றுள்ள நூல்களெல்லாம் நூலல்லவோ வென்னில்?— வேறுரைக்கும் நூலிவற்றின் விரித்தநூல்கள் - இதுவொழிந்து வேறுசொல்லப்பட்ட நூல்களெல்லாம் இவையிரண்டிலே

றின்றும் தங்களுக்கு வேண்டத்தக்க வாக்கியங்களை யெடுத்துக் கொண்டு விரித்துச் சொல்லப்பட்ட நூல்களாம்—ஆதிநூல் - அவையிரண்டையு முதனூலென்று சொல்லப்படும்—அநாதிய மலன்றாரு நூலிரண்டும்-அநாதியே மலரகிதனுயிருந்துள்ள பரமேசுவரன் அருளிச்செய்யப்பட்டதாயிருக்கும் வேதாகமங்களிரண்டும் ஒருவ னருளிச் செய்ததாகுமாயின் ஒருநூலே யுண்மையாமோ இரண்டு நூலேனென்னில்?—இரண்டிற்பொது - இவையிரண்டில் வேதநூல் சாமானியமா யிருக்கும்,—சைவம் அருளுசிறப்பு நூலாம் - ஆகமந்தான் விசேஷத்துவமுடைய நூலாயிருக்கும் இந்நூல்க ளாருக்குச் சொன்ன தென்னில்?—நீதியினுலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது - உலகியல்பு வேத நூல் ஒழுக்கமாயிருக்கையால் உலகத்தி லுள்ளவர்களுக்கும், ஆகமநூல் சத்திநிபாதம் பதிந்த பக்குவரா யுள்ளவர்களுக்கும்சொன்னதாயிருக்கும். இந்த நூலிரண்டையும் பொதுவென்றுஞ் சிறப்பென்றுஞ் சொன்னது எப்படியென்னில்?—நீண்மறையினொழிபொருள் வேதாந்தத் தெளிபொருள்கொண்டுரைக்குநூல்சைவம்-அநாதியாயுள்ள வேதத்திலுஞ் சொல்லாத உபதேசப் பொருள்களையும் வேதாகமத்திலே சொல்லப்பட்ட குறமில்லாத வாக்கியங்களையுங் கூட்டிக்கொண்டு தெளியச் சொல்லப்பட்ட நூல் சிவாகமம்;—பிறநூல் திகழ்பூர்வம்-பெரிய வேதமானது விளங்குகின்ற பூர்வபாகமா யிருக்கும்,—சிவாகமங்கள் சித்தாந்தமாகும்- இவ்வியாகமங்கள் உண்மையாகிய உத்தரவாகமமாயிருக்கும்.

இதனாற் சொல்லியது வேதாகமங்க ளிரண்டும் அநாதியே பரமேசுவரனாலே யருளிச் செய்யப்பட்டதென்றும் மற்றுண்டான நூல்களெல்லாம் அந்த விரண்டு நூலிலும் விரித்த நூல்களென்றும், வேதம் பொதுவாக வுலகர்க்குச் சொன்னதென

னும், ஆகமம் உண்மையாகச் சத்திநிபாதம் பதிந்தவர்களுக்குச் சொன்னது என்னு முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

வேதநூல் சைவநூலென்னிரண்டே நூல்கள்-வேதசிவாகமமிரண்டுமே, ஏனையோர் செய்யப்படும் வழிநூல் சார்புநூல் பூர்வபக்கநூல்களி னொன்றாகவைத் தெண்ணுதற் கொருவாற்றானு மியையின்றி யவையனைத்திற்கு முதனூலாகி,—அநாதி யமலனருநூல்-அநாதி முத்தனாகிய விறைவனாற் றரப்பட்ட நூலாக,—வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்களாகி-ஏனைய வெல்லா மிவையிரண்டி னின்றும் விரித்த நூல்களாகலின்,—இரண்டுநூல்-இவ்விருவகை நூலுமே நூலென்ன வியாத்துக் கூறப்பட்டனவாம். அற்றேல், முதல்வனாற் றரப்படு முதனூலை யொன்றாகவைத் தெண்ணு மின்னன மிருவகைப்படுத்து எண்ணிய தென்னையெனின்? அஃதொக்கும்,—நீதியினா லுலகர்க்கும் சத்தினிபாதர்க்கும் நிகழ்த்தியது,—முதல்வன் பெருங்கருணையாளனாகலின் முறையி னுலகத்தோ ருய்தற்பொருட்டுஞ் சத்தினிபாதமுடையா ருய்தற் பொருட்டும் இருவேறாகத் திறக்கருதி பொருள் பலபடத்தோன்றுஞ் சூத்திரமும் அதனை யவ்வாறாக வொட்டாது தெளித்துரைக்கும் பாஷியமும் போல முறையே வேதமும் சிவாகமும் செய்யப்பட்டன வாகலான்,—ஆரணநூல் பொதுச் சைவமருஞ்சிறப்பு நூலாம்-அவையிரண்டு முறையானே பொதுநூல் சிறப்பு நூலெனப்பட்டுச் சூத்திரமும் பாஷியமும்போல வேறுவைத் தெண்ணப்பட்டன —நின்மறையினொழிபொருள் வேதாந்தத் தீறில் பொருள்கொண்டுரைக்குநூல் சைவம் - இங்ஙனம் வேதத்துட் கூறும் கருமகாண்டப் பொரு

ளகட்டின்றியமையாது வேண்டப்பட்டெருசி நின்றனவாம பொருள்களையும வேதமுடிபாய உபநிடதத்தின சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக்கொண்டு விதந்து விளக்குவது சிவாகமமாதலான,— பிரா நிசமபூர்வம-இதனின வேறாகிய வேதத்தின பூருவபக்கப் பொருளைச சொல்லுமேனை நூல்களெல்லாம பூர்வபக்க நூலெனவும்,— சிவாகமங்கள சித்தாந்தமாகும-அதன சித்தாந்தப் பொருளைச் சொல்லுவதாய சிவாகமம் சித்தாந்த நூலெனவுமாம்.

சிவாகமத்தின சிறப்புக் கூறியவாறு

இவை மூன்றுசெய்யுளானும அவ்வந் நூல்களினியல்பு கூறுமுகத்தான மேலது வலியுறுத்தப் பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



*இங்ஙனங் கூறியவாகமத்திலே சிவன ஞானாசாரியனை யதிட்டித்து மலங்களைநீக்கி முத்தியடைவிப்ப னென்று சொல்லியிருக்க வந்தவுண்மை யறிஞர்க்களில்லையென றுணர்த்துகின்றார்*

சித்தாந்தத் தேசிவனறன் றிருக்கடைக்கண்சேர்
திச் செகமொன்றிலேசிவன் முத்தராக,வைத்தாண
டு மலங்கழுவி ஞானவாரி மடுத்தானந் தம்பொழிந்து வ
ரும்பிறப்பையறுத்து, முத்தாந்தப் பதமலர்க்கீழ்
வைப்பனென்று மொழிந்திடவு முலகரெல்லா மூகக
ராகிப, சித்தாந்தப் பெரும்பி[illegible]பா
வப் பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்னபிராந
தே. (கக)

(இ-ள) சிததாநததததே சிவனறனதிருக கடைககணசோததி — ஆகமததின விசுவாசததை யுடையவான் மாககளை முதகி யடைவிககையின பொருட்டு சிவன றனதகாருணணியததிருலே ஞாருசாரியனை யதிட்டிததுத திருநோககாகிய தீககைகையச செய்து,

செநநமொனறிலே சிவனமுததராகவைத தானெமலங்கழுவி — மநதிர சாமாத்தியத்தாலே வாகீசுர வாகீசுரி யிடததிலே சனிபபித தநேக சனமததுககுக் காரணமாகிய கனமமுதலியபாசங்களைச் சோதித்துப் போககி விடுதத தொரு சனனத்திலே தானே வருததமறச

சீவனமுததி தனமையை யடைவிபபது.

ஆனமாககளுககு மலமபோனது காணுதபடியாலே மலக்ஷயம பிறநததினறு வெனில்? மநதிரசூாத்திடைக காஞ்சிருககவும் விடமபோகக கண்டோமே! அதுபோலக கனமாதியுந தமது பலநகெட டானமாக்களை வாதைபணணு தென வறிக

இதன்றி யொருவன றீக்கை பெறுமுன்னும் தலையினிறுகக பபினபுநிறுத்தா லதனினுங் குறையுமென ருகம மோதுகை யாலுமறிக.

ஞானவாரிமடுதது — இதத சீவன்முத்தனைச் சுவானந் தானுபூதியாகிற சமுத்திரத்திலே யநவரதமுமமுழுகும்படி யழுத்தி,

ஆனந்தம் பொழிநது — ஆநநதமாக்கட லாமேசிற் றம்பலம்"எனறார். இவனுககுச் சிவத்துவாபி வியததியை நனருகப் பிரகாசிப்பித்து, அஃதாவது ஆனையினிடததிலே வியாபிததிருக்க மதமானது பருவம் வநதவாறே புறம்பே புறபபடும் பிரகாசித்தலை பொழித லெனறார். இத்தனமை யுடையனுதலால்,

## சிவாகரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சித்தாந்த முத்தியே முத்தியென்பது கூறுகின்றது சிவன்றான் திருக்கடைக்கணைச் சாத்தி மலங்கழுவி ஞானவாரி படித்து தாகந்தமொழிச் சாணவேறு பிறப்பையொழித்து சனனமொன்றிலே சீவன் முத்தராகவைத்து முத்தாந்த பதமலாக்கிறவைப்பனென்று சித்தாந்தத்தே மொழிந்திடவு முலகரோரொ மூர்க்கராகிப் பித்தாந்தப் பெருமைதெரிப்பதறிய பாவப் பெருங்குழியில் விழுந்திடுவரிதுவென்னைப்பிராந்தரே - என மாறிய பொருளுணர்க்க - சிவஞானசாரியனாக வந்து நின்று பக்குவான்மாக்களைக் கருணைகடாக்ஷ * வீக்ஷணம் பண்ணிக் கருணா ஜலத்தினாலே மந்தானமாகிய வழுக்கைக் கழுவிச் சிவஞான சமுத்திரத்தை யான்மாவினிடத்திலே பிரகாசிப்பித்துச் சிவானந்தமழையை யொழியாப் பெய்து தனது வசமாக்கி பிராரப்டறக்கலந்த இனிமேல் வருக ஆகாமத்துக்கு ஹேதுவான சஞ்சிதாகாமியங்களைக் கெடுத்து தேகத்திலே பிராரத்தம் புசிப்பதாக ஜீவன்முத்தராக வைத்து ஏகாந்தத்திலே சாவதரிசன முத்திக்கு முடிவாயிருக்கிற தம்முடைய பாதமலர்க்கீழ் வைப்பனென்று சிவாகமத்திலே † சங்கோத்தரங்களுடனே விளங்கக் கூறியிருக்கவும், உலகவாழ்வே பரமப் பிரயோசனமாக மதிப்பவரெல்லாந் தங்கள் மயக்கறிவுக் கேற்ற ‡ சுஷ்க தர்க்கங்களைப் பெரிதாகக் கூப்பிட்டுப் பாவமிகுதியினாற் பெரிதாகிய நரகக்குழியிலே விழுவார்கள், இந்தப் பிராந்தருக்கென்ன சொல்லப்போகிறோமென றிரங்கினொருள்

* வீக்ஷணம் - பார்வை, † சங்கோத்தரம் - வினாவிடை, ‡ சுஷ்கம் - வீண், அதாவது அடிசையே மலராகச் சொல்லுவது போல.

மறைய வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இத்தன்மைய பெருமைத்தாகிய சித்தாந்தநெறி, வீடுபேற்றிற்கு நேர்வழியென உபமன்னியன் அகத்தியன் முதலிய ஆசாரியரெல்லாம் வாயுசங்கிதை சிவகீதை முதலியவற்றுள் விரித்தெடுத்தோதவும், அதனைத் தெளியமாட்டாது தத்தமக்கு வேண்டியவாறெல்லாந் தாபிமானங்கொண்டு பிதற்றுமவ்வுலகத்தார் என்கடவரென்பதாம்.

ஓர்த்தகிராதியென்றாற்போல முக்கியாங்கம் முத்தாந்தமென மரீஇயிற்று

சித்தாந்தம் சித்தமுடிபு, பெரும்பித்தென்பதாம்

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

சத்திநிபாதம் பதிந்த பக்குவான்மாக்களை சிவன் இரக்ஷிப்பனென்றதென் னைப்பு, ஆன்மாக்களிலே விசேஷவான்களா குருவாய் இரக்ஷிக்குந்தொழிற்குச் சிவனவராய் மனுதீத கோசரனாயிருக்கையால் அவன் குருமூர்த்தமாகான் என்ற பாடாணவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

சித்தாந்தத்தே சிவன்றன்றிருக்கடைக்கண் சோதிச் செனனமொன்றிலே சீவன்முத்தராகவைத்தாண்டு மலகஞ்சமூலி ஞானவாரியடுத்த கானகத்தம்பொழிந்து வரும்பிறப்பையறுத்து முத்தாந்தப் பாதமலர்க்கீழ் வைப்பனென்று மொழிந்திடவு முலகமெல்லாம்-அன்வயம் - சிவன்றன் திருக்கடைக்கண் சோ

டறநெறி வழியாகலான்,—என்று சித்தாந்தத்தே யுபகரிலா மொழிந்திடவும் - இத்தன்மைப் பெருமைத்தாகிய சித்தாந்தநெறி விட்டுப்பிறிதற்கு நோவழியென உபமன்னியனை அகற்றியென முதலிய உயர்ந்தோரெல்லாம் வாயுசங்கிதை சிவகீதை முதலியவற்றுள் விரித்தெடுத்தோதவும்,—மூர்க்கராகிய பித்தர்தம் பெரும் பிதற்றுப் பிதற்றி - அதனைத் தெளிடமாட்டாது தத்தமக்கு வேண்டியவா றெல்லாந் தாபிமானங் கொண்டு பித்த முடிவாகிய பெரும்பித்தாற் பிதற்றி,—பாவப் பெருங்குழியில் விழுந்திடுவ ரிதுவென்ன பிராந்தே - அப்பாவத்தா னரகத்தில் விழவர் இதுவென்ன மயக்கம்.

---

## மறைஞானதேசிகர் உரை

இப்படி யெல்லா வான்மாக்களுஞ் சிவனுக்குச் சமமான தன்மையை யடைந்திருப்பார்களே யெனில்? அநேகேசுரத்வம் வர வதனைக் குறித்து எல்லாத்தையு மறியுந் தன்மையு மெல்லா முண்டாக்குந் தன்மையுஞ் சர்வான்மாக்களுக்கும் அனுக்கிரகஞ் செய்யு முறைமையுஞ் சிவனுக்கே யியல்பாக வுள்ளதென றுணர்த்துகின்றார்.

இறைவனாவான் ஞானமெல்லாமெல்லா முதன்
மையனுக் கிரகமெல்லா மியல்புடையானியம்பு, ம
றையாக மங்களின் லழிவெல்லாந்தோற்று மரபின்வ
ழி வருவோர்க்கும் வாராதோர்க்கும், முறைமையின்
வினைபத்துன் பங்கொடுத்தலாலே முதன்மையெலா
மறிந்துமுயங் கிரண்டுபோகத், திறமதனால் வினைய
றுக்குஞ் செய்தியாலே சேருமனுக் கிரகமெல்லாங்
காணுந்தானுஞ் சிவன்பால். (கஎ)

(௩௰) இறைவனாவான் எல்லா ஞானமு மெல்லா முதன்மையு மனுக்கிரக மெல்லா மியல்புடையான்

பரமகர்த்தா வானவன் யாவனெனில்? சர்வஞ்ஞத்துவத்தையுஞ் சர்வகர்த்திருத்துவத்தையுஞ் சர்வானுக்கிரகத்தையுமாக விம்மூன்றினையு மொருவாற்றா லுருத்தலின்றித் தனக்கியல்பாக வுடையவன் யாவனொருவன் அவனே பரமகர்த்தா மேற்சொற்றமுறையானே வகுத்துணர்த்துகின்றது.

இப்படி மறையாகமங்களின் றறிவெல்லாந் தோற்றும்

சிவன் சர்வஞ்ஞனென் றறியப்படும் அஃதெக்காரணத்தா லெனனில்? வேதாகமங்களை யுள்ளபடியறிந்து சொல்லுகையினாலே.

“கற்றது மந்திரத்துய் காணக் கசடின்மை-யெனுங்கிவை போன்மற் றெல்லாம்”

எனவறிக. சர்வகர்த்தா வென்பதற்குப் பிரமாணம் யாதெனில்? அனுமானத்தாலே யவன் கருத்தாவென் றறிக. பெண் முதலா காரியத்தைப் பெற்று என்பதனாலறிக.

இதற்குப் பாக்கியை மிருகேந்திரம் வாயவ்ய சங்கிதையி னறிக.

மரபின்வழி வருவோர்க்கும் வாராதோர்க்கு மமுறைமையினா லின்பத்துன்பங் கொடுத்தலாலே முதன்மை யெல்லா மறிந்தும்

சிவன் சர்வகர்த்தனென் றறியப்படும் அஃதெக்காரணத்தா லெனனில்? ஆன்மாக்கடோறுந் தானன்னியமாய் நிறைந்துநின்று அவனருளிச்செய்த சிவாகமங்களிற் சொன்ன வழியே புண்ணியஞ் செய்யுமவர்களுக்கு மதன்வழி வாராமற் பாவஞ் செய்வோர்க்கு மக்கத்த வினைவழிப் பிறழாம லிருவினைப் பலன்களையுங் கொடுக்கையாலே யிவனுக்குச் சர்வகர்த்தத்துவ முண்டென் றறியப்பட்டது சர்வகர்த்த னென்பதற்குப் பிரமாணம்.

"அன்றுவய வெதிரேகத் தாலவனறிவை - யுன்றுக வேது கருத்தா வுற்று" எனவறிக

இதற்குப் பராக்கிலை மிருகேந்திரத்து மறிக

முயம்கிரணத் போகத் திரமத் துல வினையறுக் குரு செயதியா லே சேநமனுக்கி ரகம்

ஆன்மாக்கட்கு அபரபோகம் பரபோக மாகிய விரண்டினையு மவர்களசெய்த வினை க்கீடாக வந்தந்த தேசத்திலே யிருந்து துய்ப்பித்து அக்கொலைந்தவாறே பராமு த்தியை யளிக்கையாலு மிவன்சர்வானுக்கி ரகனென்னு மதுவு மறிந்தோ மாதலாற்,

எல்லாங்காணு துநாஞ் சிவனபா ல

இவ்வண்ணங் கூறிய சர்வஞ்ஞத்துவஞ் சர் வ காதத்திருத்துவமுஞ் சர்வானுக்கிரகமு மா க விம மூன்றுஞ் சிவனிடத்திலே யுண்டா கையா லவனே பரமகர்த்தா எ-று

இதற்கு மிருகேந்திரஞ் சிந்தியவிசுவத்து மறிக

அநந்தாதிகளுங் கர்த்தாவல்லரோ வெனின்? "ஆக்கையு டைய வதிகாரியாக கெல்லா - மாக்கையிலானேபதியாவான்" "முன்படைப்ப ஞக்கைபிலா மூலனுயிர்கட்கவனுற் - பின்ப டைப்ப ராக்கையுடைபெற் றோர்" எனபதனுற பரமசிவ னிவர்க ளுக்குப் படைப்பு முதலிய தொழிலைச் செயவென்று கற்பித்து பின்பவனேவலாற பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்வாரகளெ ன வறிக

இதற்குப் பௌட்கரத்தும் வாயவவிய சங்கிதையினு மறிக
(சஎ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சர்வஞ்ஞத்துவ சர்வ கர்த்திருத்துவ சர்வானுக்கிர ஹத்துவ முடையவனே பரம கர்த்தாவாகையா லிந்த லக்ஷண

ங்களெல்லாஞ் சிவனுக்கே யுள்ளதாகக் காணப்படுகையாற் சிவனே பரமகர்த்தாவென்று கூறுகின்றது.

இன்றவனுவா னெல்லாஞான மெல்லாமுதன்மை யநுக்கிரகமெல்லா மியல்புடையான்-சகத்து ஸ்வாமியாகிறவ னெல்லாவறிவையு மெல்லாத்துக்குங் கர்த்தாவாகையு மெல்லாத்தொழிலு மநுக்கிரகமே யாகையையும் ஸ்வபாவமாயுடையவன்.

அதனாஞ் சிவற்கே - நாங்காண்பதுஞ் சிவற்கே இந்தலக்ஷணங்கள் நாஞ் சிவனிடத்திலேயே காணக்கூடுமாகலாற் சிவனே பரமகர்த்தா, இந்த லக்ஷணஞ் சிவனிடத்திலே கண்டதெவ்வாறெனின்?

இயம்புமறை யாகமங்களிஞ் லறிவெல்லாந் தோற்றும் வழியின் வழி வருவோர்க்கும் வாராதோர்க்கு முறைமையாலின்பத் துன்பங் கொடுத்தலாலே முதன்மையெல்லா மறிந்து முயங் கிரண்டுபோகத் திறமதனால் வினையறுக்குஞ் செய்தியாலே சேருமநுக்கிரகமெல்லாங் காணுதும் - சிவன் சொல்லப்பட்ட வேதாகமங்களினாலே சர்வஞ்ஞனென்ப தறியப்பட்டது அந்த வேதாகமங்களின்படியே நடக்கப்போகும் நடவாதபேர்களுங் கிரமத்திலே சுகத்தையுந் துக்கத்தையும் புசிப்பிக்கையினால் சர்வ கர்த்தாவென்ப தறியப்பட்டது புசிக்கப்பட்ட சுகதுக்க போகங்களினால் புண்ணிய பாபங்களையொழிந்து, புண்ணிய பாபங்களொழியவே சத்திநிபாத முண்டாம், சத்திநிபாதத்திலே யநுக்கிரகம்பண்ணுவர். ஆதலால் சிவனே பரமகர்த்தாவென்பது சித்தமென் றிதன்பொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

சிவன் சர்வஞ்ஞன் சர்வகர்த்தா சர்வாநுக்கிரகன் என்று சாற்றுகின்றார்.

கையாலே அவனது சர்வ கிருத்தியமெல்லா மறிந்தோம்,—முப்ப
கிரணமே போகத்திறத்தாலவினை யாக்குஞ் செய்தியாலே-அவ
ரவர்க்குப் பொருந்தப்பட்ட சொர்க்க நரகங்களினுண்டாகிய வி
னைப் பயன்களைப் புசிப்பித்துத் தொலைப்பிக்கிற முறைமையாலே,—
சேதனானுக்கிரகமெல்லாங் காணுதும் - பொருந்தப்பட்ட சர்வா
னுக்கிரகமெல்லா மறிந்தோம்,— நானுசியற்கே - இதுகாறுஞ்
சொல்லிவந்த முறைமைகளெல்லாம் நாம் சிவனுக்கேயுளவென
வறிந்தோம், ஆகையால் சிவனே கர்த்தா

இதனாற் சொல்லியது, சர்வஞ்ஞத்துவமும் சர்வ முதன்
மையும் சர்வானுக்கிரகமும் இவை மூன்றும் அநாதியே யியல்
பாக வுடையவனே கர்த்தாவென்றும், முன்னூலின்றியே வேதாக
மங்களைத் தானே யருளிச்செய்கையாலும், அந்த நூலின்வழி
வாரோர்க்கு இன்பத்தையு மந்த நூலின்வழி வாராதவர்களுக்
குத் துன்பத்தையுங் கொடுக்கையினாலும், இப்படி இன்பத்துன்
பங்களைப் புசிப்பித்துக் கன்மத்தைத் தொலைப்பித்து இரக்ஷிக்கை
யினாலும், முன்சொன்ன முறைமைகளெல்லாம் சிவனுக்கே யுண்
டாயிருக்கையினால் சிவனே கர்த்தாவென்னு முறைமையும் அறி
வித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

எல்லாஞான மெல்லாமுதன்மையெல்லாமநுக்கிரகஞ் சி
வற்கே நாங்காணுதும் - முற்றுணர் வுடைமையும் முடிவிலாற்ற
லுடைமையும் பேரருளுடைமையும் ஆகிய மூன்றுஞ் சிவபிரானு
க்கே உளவென்பது,—இயம்புமறைக ளாகமங்களினு லறிவெல்
லாந் தோற்றும்- சொல்லுகின்ற வேதாகமங்களை யருளிச்செய்
த வேதுவா லெல்லாஞான முடைமை தெரியப்படும்,—மரபின்

வழிவருவோர்களும் வாராதோர்களு முறைமையினு லினடத்து னபங் கொடுத்தலாலே முதன்மையெல்லாமறிதும - வேதாகம ஙளினெறிச் செல்லுவோர்களும் செல்லாதோர்களும் முன யாற சுகதுக்க மளித்தலாகிய யேதுவா னெல்லா முதன மைதெளிபபடும்,—முடிவ கிரணமே போசத் திறமதனுல விளை யறுக்குஞ் செய்தியாலே யநுக்கிரக மெல்லாஞ் சேரும - அநு பவியாதினற சுத்துக்கமாகிய கூறுபாட்டா லகறகேதுவாகிய விருவினைகளை நீக்குமேதுவா னெல்லா மநுக்கிரக முண்டமை தெரியப்படும் —இயலபுடையா னிறைவனுவான - அங்ஙன மமூன்றுகுண மியல்பாக வுடைய வமமுதல்வன சனனமொனறி லே திருக்கடைக்கண்சாத்தினுனவாரிமடுத்து ஆனந்தமபொ ழிகறகும் ஜனன மொனறிலேதானே மலங்கழுவி சீவனமுதத ராக்கவைத்து ஆணவெருமபிறப்பை யறுத்தறகும பாசமோ கழி வைத்தறகும வல்லவனுவன.

இவையிரண்டு செய்யுளானுஞ் சைவததிறத்தடைதற சூப புக கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



இப்படி யான்மாக்களுக் குபகரிக்கிற சிவனது சரியை முதலிய தொழிலைத் தொகுத் துணர்த்துகினறுா

சன்மார்க்கமுஞ் சகமார்க்கஞ் சற்புத்ரமார்க்கந் தாத மார்க்கமென்றுஞ் சங்கரனையடைய,* நன்மார்க்க நாலி வைதான் ஞானயோக நற்கிரியா சரியையென்று நவிற றுவதுஞ்செய்வர், சன்மார்க்க முத்திகளசா லோகசிய சாமீபபிய சாருப்பியசாயுச்சியமென்று சதுர்விதமா,

முனமாரகக ஞானததா லெயதுமுததி முடிவெனபா
மூனறினுககு முத்திபதமெனபா. (௧௮)

(இ-ள) சனமாரககஞ் சகமாரககஞ் சறபுததிரமாரககந் தாசமாரககமெனறுஞ் சஙகரனையடையு நனமாரககநாலு

சனமாரககமுதலிய நலவழிகள சிவனை யடையு மதறகு நானகு முததரோதாரங் தாழுககபலததையுடையன அவையாவை யெனில்?

இவைதான ஞானயோக நற்கிரியா சரிதையென நவிறறுவருஞ் செயவார்

அவைகளுக கடைவே ஞானபாதம யோகபாதம கிரியாபாதஞ சரியாபாதமெனறு பரியாயப பெயராகிப பிரிததுககூறுவாகள. தான - அசை.

இஙஙனம கூறிய நாலுககுப் பெறுமபல மியாதெனில்?

சனமாரகக முததிகள சாலோககிய சாமீபபிய சாரூபபிய சாயுசசியமென றுசதுாவிதமாம

சைவரடையு நல்வழி சனமாரகக முதலிய நானகினுககு எதிா நிறைநிரையாக வவனுடன புசிககப்பட்ட சாயுசசியமு மவனைப்போல மானமழுவுங காளகணடமுமாயிருககுஞ் சாரூபமும அவன சமீபததி லிருககுஞ சாமீபபியமு மவனுலகததி லிருககுஞ சாலோகமுமாக நானகுவகைப்பட்டிருககும்

முனமாரகக ஞானததாலெய் துமுததி முடிவெனபா

முதற்கண கூறிய சன்மார்க்கமாகிய ஞானபாதத்தின் வழியினை நாட்டிககு மதனா லடையுஞ சாயுசசியமே பரமமான முததி.

டகாரோபிருத்தமாயு மத்தனிச் சாலம்ப சிவசாக்ஷாத்காரமெ
ன்றுஞ் சாலம்ப சிவாபரோக்ஷ ஞானமென்றுஞ் சொல்லப்படு
ஞ் சாலம்பயோகஞ் சிவயோகத்திற் கங்கச் சிவயோகமாயுமிருக்கு
ம் பிராகிருத மனச்சங்கற்பக் கிரியையுணர்க்கு மபரோக்ஷம
போ லயிங்பக் குறிப் பிராகிருத பவுத்த சிவஞானச் சிறப்புப் பி
ரவாகலக்ஷண சாலம்பசிவசமாதி மூலசாலம்பசிவத்தியானமே
யோகமென்னுஞ் சகமார்க்கம்,—

சற்புத்திர மார்க்கம் - சிவபூசாதி,—

தாதமார்க்கம் - சிவசேவாதி,—

சன்மார்க்க முத்திகள் - நல்லமார்க்க முத்திகள்-

சதுர்விதம் - நான்குவகை,—

முன்மார்க்க ஞானத்தால்-சன்மார்க்க சமாதியால,—

முடிவெண்பா - பரமுத்தியென்பா

மற்றைய வெளிப்பொருள

சன்மார்க்க முதலிய நான்கினும் பொதுச் சிறப்பாகச் சன்மார்க்கத்திற் சன்மார்க்கம் சன்மார்க்கத்திற் சகமார்க்கஞ் சன்மார்க்கத்திற் புத்திரமார்க்கஞ் சன்மார்க்கத்திற்றாதமார்க்கம், சகமார்க்கத்திற் சன்மார்க்கஞ் சகமார்க்கத்திற் சகமார்க்கஞ் சகமார்க்கத்திற் புத்திரமார்க்கஞ் சகமார்க்கத்திற் றாதமார்க்கம், புத்திரமார்க்கத்திற் சன்மார்க்கம் புத்திரமார்க்கத்திற் சகமார்க்கம் புத்திரமார்க்கத்திற் புத்திரமார்க்கம் புத்திரமார்க்கத்திற் றாதமார்க்கம், தாதமார்க்கத்திற் சன்மார்க்கம் தாதமார்க்கத்திற் சகமார்க்கம் தாதமார்க்கத்திற் புத்திரமார்க்கம் தாதமார்க்கத்திற் றாதமார்க்கம் எனறிப்படி சன்மார்க்கமுதலியநான்கு தனித்தனி ஸ்ரீகண்டநாத அனந்தேசுர சதாசிவ சாலோகியாதி அவரவர் சமபல சாயுச்சியாந்தமுத்திகளாயுஞ் சதாசிவ தத்து

லசுத்தத்துமேற் சத்தி தத்துவத்தான சிவதத்துவத்தான தத்துவ நிர்மமாகிய பரசிவத்தான முத்தான்மாக்களிலே பரசிவ சாலோக்கியாதி சாவத்திர பரசிவ சமீப பரசிவ சாயுச்சியாந்த முத்திகளாயிருக்கும் நயிஷ்டிகதீக்ஷாமுத்திகளாயுங் காலாக்கினியாதி யனந்தாந்த புவனபதி சாலோக்கியாதி புவனபதி சமீப புவனபதி சாயுச்சியாந்த முத்திகளாயிருக்கும் பவுதிகதீக்ஷாமுத்திகளாயும் அனந்தவிதமா யிருக்குமெனவறிக

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அங்ஙனஞ் சைவத்திறத்தடைந்தார் சிவனடியைச் சேர்தற்குரிய நெறி தாதமார்க்கமுதலிய நான்குவகைப் படுதலின், அவையே சரியைமுதலிய பெயரான் வழங்கப்படும் அவற்றிற்குப் பயன் முறையே சாலோகமுதலிய அபரமுத்தியுஞ் சாயுச்சியமாகிய பரமுத்தியுமா மென்பதாம்

சாலோக்கிய முதலியவற்றிற்குப் பொருள் வருகின்ற செய்யுட்க ணுணர்த்தும் ஆசிரியர் தாமே மொழிபெயர்த்துரைக்கின்றவாற்றானறிக

இதனானே, சைவத்திறத் தடைந்தாராற் செலுத்தப்படுஞ் சரியை முதலிய நான்கும் முத்தி நெறியாதற்கட்படும் பேதமும் அவற்றின் பயனுங் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படி முன்சொல்லப்பட்ட சிவனை யான்மாக்கள் சென்று பொருந்துகிற முறைமை ஒரு பிரகாரமாயிருக்குமோ பல

பிரகாரமாயிருக்குமோ வென்றால் மாணாக்கனை நோக்கி நாலுபிர
காரமாயிருக்குமென்று மேலருளிச்செய்கிறார்

சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதமார்
க்கமென்று சங்கரனையடையு நன்மார்க்க நாலவகைதான்-சன்
மார்க்கமென்றுஞ் சகமார்க்கமென்றும் நல்ல புத்திரமார்க்க
மென்றும் தாதமார்க்கமென்றும் பரமேசுவரனைப் பொருந்துகிற ந
ல்லவழி நாலுவகையாயிருக்கும்,—அவைதான் ஞானயோகக் கி
ரியாசரிதையென்று நவிற்றுவதுஞ் செய்வர் - ஞானமென்றும்
யோகமென்றும் கிரியையென்றும் சரியையென்றுஞ் சொல்லுவ
துஞ் செய்வார்கள். இதுவன்றியும் சன்மார்க்கமுத்திகள் சலோக
கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியங்களென்று சதுர்விதமாம்-
சன்மார்க்க முதலான நாலு மார்க்கத்துக்கு முத்திகள் சொல்
லப்பட்டது சாலோக்கியமென்றும் சாமீப்பியமென்றும் சாரூப்பி
யமென்றும் சாயுச்சியமென்று நாலு பிரகாரமாயிருக்கும்,—மு
ன்மார்க்கஞானத்தா லெய்துமுத்தி முடிவென்பர்-முன் சொல்
லப்பட்ட சன்மார்க்க ஞானத்தாலே பெறுகிற மோக்ஷத்தை
யே முடிந்த முத்தியென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்,—
மூன்றினுக்கு முத்திபதமென்பர் - நின்ற சாலோக்கிய மாதியா
யுள்ள மூன்றினையும் பதமுத்தியென்று பெரியோர்கள் சொல்லா
நிற்பார்கள்

இதனால் சொல்லியது, பரமேசுவரனை ஆன்மாக்கள் பெ
றுகிற முறைமை தாதமார்க்க முதலாக நாலுமார்க்கமாயிருக்கு
மென்றும் ஞானபாதமுதலாக நாலுபாதமாயிருக்குமென்றும்
சாயுச்சிய முதலாகப் பேறு நாலாயிருக்குமென்னு முறைமையு
மறிவித்தது

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

மேல் * தாசோகம் † பாவிதனான சமயியனானுஞ் சரிதை யிலக்கணந் தொகுத்துக் கூறுகின்றது.

இதற்குப் பொருள் வெளி.

* தாசோகம் - நானடிமை; † பாவிதன் - பாவிக்கப் பட்டவன்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

தாதமார்க்க முதல் ஞானங்களது ஸ்வரூபம் நான்கு திருவிருத்தத்தாற் சொல்லுகின்றார்.

இது வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

புறத்தொழில் மாத்திரையானே உருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு சரியையெனப்படுமென்பதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

முன் சொல்லிவந்த நாலுமார்க்கத்தில் தாதமார்க்கத்தின் முறைமை மேலருளிச்செய்கிறார்.

தாதமார்க்கஞ் சாற்றில் - பரமேஸ்வரனுக்கு அடிமைப் பட்டு அடிமைத்திறஞ் செய்கிறவர்களுடைய வழிபாட்டை-

சொல்லில்,—சங்கரன் றன்கோயிற் றலமலகிட் டலத்திருமெழு க்குச்சாத்தி - சிவலிங்கப்பெருமா னானவ ரெழுந்தருளியிருக் கிற திருக்கோயிலுக்குத் திருவலகிட்டு விளக்கித் திருமெழுக் குச்சாத்தி,—போதுகளுங்கொய்து பூந்தாமமாலைகளைப் புனைந் து பலசமைத்து- திருப்பள்ளித் தாமங்களுமெடுத்து பொ லிவினை யுடையதாகிய தொடையல் மாலைகோவை கண்ணி தம பிரானுக்குச் சாத்துகிறபடிக் கிடாகப் பலவாகப் பத்திப ணி,—புகழ்ந்துபாடி-அவனுடைய கீர்த்திகளையுஞ்சொல்லி வா ழ்த்தி,—தீபமிட்டு - திருவிளக்கிட்டு - குற்றமற்ற திருவிளக்குகளு மிட்டு,—திருநந்தவனமுஞ்செய்து - நன்றாகத் திருநந்தவனங்க ளும் வைத்து,—திருவேடங்கண்டா லடியேன்செய்வ தியாது பணியென்று பணிந்து ஏவத்தப்பணியு மியற்றுவது - சிவனுடை ய வடியாராகிய திருவேடத்தாரைக் கண்டால் அடியேன் செ ய்யத்தக்க பணிவிடை யாதென்று தண்டம்பண்ணி யருளிச் செய்ய வேணுமென்றுகேட்டு அவர்களருளிச்செய்த பணிவிடை யுஞ்செய்து முடிப்பது.—இச்சரிதை செய்வோ ரீசனுலகிருப்பார்- இந்தச் சரிதைத்தொழிலைச் சாத்திரஞ்சொன்ன முறைமையி லே செய்து முடித்தவர்கள் சிவலோகத்திலே யிருப்பார்கள்

இதனாற் சொல்லியது தாதமார்க்கத்துக்குச் சொல்லப் பட்ட திருவலகிடுகிறது முதற் சிவனடியாரை வழிபடுகிறது யீறா கச் சொல்லப்பட்ட திருத்தொழில்களை இந்த முறைமையிலே செய்தவர்கள் சாலோகத்தியத்தைப் பெறுவார்களென்னு முறை மையை யறிவித்தது

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—0—

தாசமார்க்கஞ் சாற்றில் - தாதநெறியைச் சொல்லுமிடத் து;—சங்கரன் றன்கோயிற்றல மலகிட்டு-சிவபிரா னெழுந்தரு

ளியிருக்கின்ற திருக்கோயிலுட் டிருவலகிடுமம்,—இலகு திருமெ
ழுக்குஞ் சாத்தி - விளங்குகின்ற திருமெழுக்கிடுமம்,—போதுக
ளுங்கொய்து - திருப்பள்ளித்தாமங்கள்கொடுத்தும்,—பூத்தாமமா
லைகளை யணிடப்புரிதற்குப் பலசமைத்து - பொலிவினையுடைத் தாகி
யமாலையினடை முதலிய கண்ணிகளுஞ் சிவபிரான் றிருமேனி
யிற்பொலிவுறும் வண்ணம் பலவாகவமைத்தும்,—புகழ்ந்துபா
டி - முதல்வனுடைய புகழ்ந்தகரிய மேலாகிய சீர்த்தியினை வா
யாற வாழ்த்தியும்,—தீத்திருவிளக்கிட்டு - குற்றமற்ற பிரகாசம்
பொருந்திய விளக்குகளிட்டும்,—திருநந்தவனமுஞ் செய்து - அழ
கிய நந்தவனங்கள் வைத்தும்,—திருவேடங்கண்டா லடியேனை
செய்வ திபாதுபணியீரென்று பணிந்து - சிவனடியாராகிய திரு
வேடத்தாரைக் கண்டா லடியேனுற் செய்யத்தக்கபணி யா
தென றருளிச்செய்யுமென்று வணங்கி,—அவர்தம் பணியு மிய
ற்றுவது - அவரருளிச் செய்யும் பணிவிடையுஞ் செய்வதாம் —இ
ச்சரியை செய்வோ ரீசனுலகிருப்போர் - இச்சரியைத் தொழி
லினை யாற்றடித்தோர் சாலோகமாகிய பதமுத்தியைப் பெறுவா
ரெனபதாம

## மறைஞானதேசிகர் உரை.



மேற்புத்திரமார்க்க முணர்த்துகின்றார்

புத்திரமார்க்க கமபுகலிற புதியவிரைப்போது பு
கையொளிமஞ்சனமமுது முதல்கொண்டைந்து, சுத்தி
செய்தா சனமூர்த்தி மூர்த்திமானுஞ் சோதியையும்
பாவித்தா வாகித்துச்சுத்த, பத்தியினா லர்ச்சித்துப்
பரவிப்போற்றிப பரிவினொடு மெரியில்வரு காரியமு

மூர்த்தி - விகற்ப மற்றியத் தெழுந்து நின்ற சொரூபியாயத் திரு
மப வித்தியா தேகரூப வியாபகமாயிருக்கும் நாதம்,—மூர்த்
திமானுஞ் சோதி - வித்தியா தேகத்துக்குச் சீவனும் பர சிவ
தேஜஸ்—

பரமாய வெளிப் பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

புறத்தொழிலகத்தொழிலென்னு மிரண்டானும் அருவுரு
வத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு கிரியையெனப்ப
டுமென்பதாம்

## நிரம்பவழகியருரை வருமாறு.

மேல் புத்திரமார்க்க மருளிச் செய்கிறார்.

புத்திர மார்க்கம் புகலில் - பரமேசுரனுக்கு உபதேசத்தி
னாலே புத்திரரா யுள்ளவர்கள் செய்யுங் கிரமத்தைச் சொல்லி
ல்,—புதிய விரைப்போது - நவமாயிருக்கப்பட்டநின்ற திரு
நெய்ப்பூச்சு முதலான பல்வகைத் திரவியங்களும் திருப்பள்
ளித் தாமமும்,—புகைமொளி மஞ்சன மமுதுமுதல் கொண்டு-
தூபதீபம் திருமஞ்சனம் அமுது முதலானவை யெல்லாம் கை
க்கொண்டு தேடி வைத்துக் கொண்டு,—ஐந்தசுத்தி செய்து-பூத
சுத்தி ஆன்மசுத்தி [illegible] மந்திரசுத்தி [illegible]யென்
றுசொல்லப்பட்ட அஞ்சு சுத்திகளையும் பண்ணி,—ஆன்மமூர்த்தி
மூர்த்திமானுஞ் சோதியையும் பாவித்து [illegible]—ஆதன மூ
ர்த்தியும் மூலமாக சாதித்த அக்கமூர்த்தி மானுன சோதியை

தியானிக்கும்படி பிரமாமுதல் சதாசிவ மீறாகத் தூவாகசாந்தத்திலே கூடிய கோடி சகஸ்ரப் பிரகாசம் போலே பாவித்தது இந்தப்பொருளைச் சிவலிங்கப் பெருமானிடத்திலே ஆவாகனம் பண்ணி,—சுத்தபக்தியின் லர்ச்சித்து-அழுக்கற்றுநின்மலமாயிருக்கிற அன்புடனே கூடியிருந்து அர்ச்சித்து,—பரவியபோற்றி-புகழ்ந்த தோத்திரங்களுஞ் செய்து,—பரிவினொடு பொரியில வருசாரியமும் பண்ணி - விருப்பத்துடனே அக்கினிகாரியமுஞ் செய்து,—இத்தனுமிக கிரியையினை யியற்றுவோர்கள் - நாள் தோறுஞ் சாத்திரஞ் சொன்ன முறைமையிலே இப்படி சிவனை யர்ச்சிக்கிறவர்கள்,—நின்மலனாறனருகிருப்பார் நிலையுமங்காலே-மலரகிதனா யிருக்கிற சிவனுடைய சமீபத்திலே யிருப்பார்கள் விசாரித்துப் பார்க்குமிடத்து.

இதனாற் சொல்லியது புத்திர மார்க்கத்துக்குச் சொல்லப்பட்ட புதியவிரை போதுமுதல் அக்கினிகாரிய மீறாக நாடோறு மிந்தமுறைமையிலே செய்து முடிக்கவர்கள் சாமீபியத்தைப் பெற்றிருப்பார்க ளென்னு முறைமை யறிவித்தது

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

புத்திரமார்க்கம் புகலின் - புத்திரநெறியைச் சொல்லுமிடத்து,—புதியவிரைப்போது புகையொளி மஞ்சனமமுது முதலகொண்டு-புதிதாகிய வாசனை பொருந்திய போதுகளுந் தூபதீப திருமஞ்சன மமுது முதலியனவெல்லாந் தேடிவைத்துக்கொண்டு,—ஐந்துசுத்திசெய்து ஆசனமூர்த்திமூர்த்திமானும - ஐவகைச் சுத்திகளையும் பண்ணி யாசனமூர்த்தி மூலங்களாலே மூர்த்திமானாகிய சிவத்தை,—சோதியையும் பாவித்தூவாகித்து-சோதியுருவாகப் பாவித்து ஆவாகனம்பண்ணி,—சுத்தபத்தியி

பரவரனிடமாகநிற்கிற முறைமையையும் அவ்விடங்களிலே பர
ரேரூவரநிற்கிற நிலைமையையு மந்த ஞானத்தாலே யறிந்து
அப்படியறிந்த தற்போதமுங் கெட்டுநிற்கு மந்த நிலையாமென்
றும் அதொழிந்தும் ஆசாரியனாலே தனக்குப் பிராணனாய்நிற்
கிற சிவனை யறிந்து அவனாலே பசுகரணங்க ளானே சிவகரணமு
மாயச் சாக்கிராதீதமும் புரியுமென்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

இந்நிலைதா னில்லையேல் - இங்ஙனங் கூறியமுறையானே
யகப்புற மென்னுமல் லெங்கணு மேக நிலையாயக்கண் டிறைநிறை
விலழுந்தவதாய நிட்டை மேவுதலரிதாயப் பண்டைப் பயிற்சி
வயத்தாற் சுட்டுணர்வுபற்றிப் பிரவஞ்சங்சாக்ஷிப்பட வருமாயி
ன,—எல்லா மீசனிடத்தினின் றீசனெல்லா விடத்தினினு நின்
றவந்நிலையையறிந்து - அதனைக்காணும் பொழுதே யிறைவனந்
தருளாயும் புறமாயு நிற்குநிலையுமுடன் கண்டு,—அந்தக் கரண
ங்களடக்கி- அவ்வாறண்டத்தினிற்கு நிலையறிதலரிதாயின மரு
திகளடக்கி,— குருவி னருளால் நின்றறிவதொரு குறியுமறிந்து-
குருவருளாற் பிண்டத்தினிற்கு நிலையு மொன்றினைய தறிந்
து,—மனனுசிவனை றனை யடைந்து-அதுவாயிலாகப் புகுந்தாத்ல
வழியலைபத் தலைப்பட்டறிந்து,—நின்றஅவனாறனுலே மருவுப
சுகரணங்களை சிவகரணமாக - ஆண்டுக்காணும் கரணங்களெல
லாம பேரின்பமாகப்பேணி,—துனணிய சாக்கிரமதனில்-இவ்வா
று கருவிகளோடுங் தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்தி
றறுனே,—துரியாதீதத் தோன்ற முயல சிவானுபவம் - கருவி
யொன்றனோடுங் கூடாது தொழிலிறந்து நிற்கு நின்மல துரியா

நீங்கிலை கைக்கூடுமட்டி முப்பல்வார் சிவாநுபவத்தை,—சுவாநுபூ திகமாம் - தமதாகக்கொண் டநுபவிக்கப் பெறுவர்.

இதனானே யங்கிடை மேவப் பெருந்தாக கதுபெறு முபாயங் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை



மே விதத்தனமை யுடையோர் சிறப்பு மஃதில்லார்
சிறப்பினமையு முணர்த்துகின்றார்.

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற் சர்வசங்க நிவிர்த்திவந்த தபோதனர்களிவர்கள், பாக்கியத்தைப் பகர்வதுவென் னிம்மையிலேயுயிரின் பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவரனன்றே, வாக்குமுடி கவித்தரசாண் டவர்க ளிவ்வையரோ டனுபவித்திங் கிருந்திடினு மகப்பற்றற்றிருப்பர், நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற்றாலு நுழைவர்பிறப் பினிலவினைக ளுறுங்கிடாவே. (௧௫)

(இ-ள்) சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற் சர்வசங்கநிவிர்த்திவந்த தபோதனர்க ளிவர்கள் பாக்கியத்தைப் பகர்வதுவென்

இந்தப் பூமியிலே சஞ்சரித்திருக்கவும் சகலாவத்தையிற்றானே சாக்கிராதீதத்தை முன்கூறிப்படி பொருந்தினவர்கள் சிறப்பை விசாரிக்கிலவர்களே 'சர்வசங்க பரித்தியாகம் பண்ணினவர்களாதலா லந்த ஞானிகள் பண்ணின பாக்கியத்தை நாமென்ன சொல்லப் போகிறோம். அஃதெக்காரணத்தாலெனில்?

இம்மையிலே யுயிரின் பற்றறுத்துப் பரத்தை யடைபராவுசிவ ரன்றே

சமுத்திரத்திலே யுண்டாகும் மச்சமானது கூடியிருந்தாலும் அந்த உப்பினது தன்மையை யடையாதவாறுபோல இந்த ஜீவன் முத்தரான ஞாதாக்களு மிந்தச் சரீரத்துடனேகூடி யிருந்தார்களே யாயினு மிந்தச் சரீரத்துடன் பற்றும் மற்றும் புறப்பற்றாகிய வான்மாக்களிடத் துண்டாகிய பற்றையும் விட்டுப் பரமமான சிவனுடனே கூடியிருக்கையா லிந்தப்பூமியிலே யிரண்டாஞ் சிவனெனக் கருதுமவர்களே யாதலால்,

ஆக்குமுடி கவித்தரசாண் டவர்களரிவைய ரோடனுபவித் திலிருந்திடினு மகப்பற்றற்றிருப்பர்

விதிவழியுண்டாக்கு முடியை யிராஜாவாகச் கசுத்திரகபிஷேகம்பண்ணி யதனைச் சூட்டிப் பட்டத்துக் குரிய மடவாருடன் கூடியிருந்தார்களே யாயினு மதனால் வசியரல்லர். அஃதெனபோலெனின்? சுந்தரப்பெருமானாயனாரு மடவார்கலவியுடன் கலந்திருந்து மெய்ப்படிப் பற்றுதலின்றி யிருந்தா ரதுபோல இவர்களு மப்படியே யிருவகைப் பற்றையு மற்றிருப்பார்கள்

நோக்கியிதுபுரியாதோர் புறப்பற்றற்றாலு நுழைவார் பிறப்பினில்வினைகளுநுங்கிடாவே

நிட்டையைப் பெருமையென விசாரித்துத் தக்கவழி நில்லார்களேயாயி னவர்களொருவ ராலும் விடுத்தற்கரிய விருவிதப் பற்றையும் விட்டார்களே யாயினு மப்பலத்தை யுறார், ஜனன மரணப்பட்டுத் திரிவார்கள், அஃதுண்டாகையா லதற்குக் காரணமாகிய வினைகளுங் கெடாது. எ-று.

ஐகாரம் - எதிர்மறை.
நுங்குதல் - கெடுதல்.

'பற்றுகபற்றற்றான் பற்றினை யப்பற்றைப்-பற்றுக பற்று விடற்கு' எனவறிக

அகப்பற்றே சிறப்புடைத்தென வறிக

இதற்குச் சர்வஞானோத்தரம், சிவதருமோத்தரமுமென வறிக (௩ரு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் ஜீவன்முத்தர்களுடைய வடபியந்தர வேறுபாடும் புறத்துறவின்றேல் முத்தியில்லையென்பதூஉங் கூறுகின்றது

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்கள் - சகலமான சாக்கிரத்திற் கருவிகளெல்லாம் பிறியாம லிருக்கையிலே நின்மல துரியாதீதத்தைப் பொருந்தினவர்கள்,—

உலகிற் சர்வசங்கநிவிர்த்திவந்த தபோதனர்களாயவர்கள் பார்க்கியத்தைப் பகர்வதுவெ னிம்மையிலேயுயிரின் பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவரன்றோ - பூமியின்க ணெல்லாப்பற்றையு மொழிந்து தவமே பொருளாக வுள்ளவர்களவர்களுடைய செல்வத்தை யிவ்வளவென்று நம்மாற் சொல்லவரிது இம்மையிலே தானே யான்மாவினுடைய பந்தமாகிய வாணவ மாயை காமியங்களை யறுத்துப் பரமசிவனை வேறறக் கலந்து பூமியின்க ணுள்ள வான்மாக்களை யீடேற்றுவது பொருட்டாகச் சஞ்சரிக்கிற ஜீவர்களல்லவோ, ஆமே!—

ஓகாரம் - எதிர்மறை

அவர்களாக்குமுடி சயித்தராசாண் டரிவையரோ டனுபவித்திருக்கிடினு மகப்பற்றற்றிருப்பா - அந்த ஜீவன்முத்தரானவர்கள் நவரத்தினங்களினாலே பண்ணப்பட்ட முடிதைத் தரித்து இராச்சியத்தையாண் டநேக மடந்தையர்களோடு புணர்ந்திருந்தப் பூமியின்கண்ணே பஞ்சபூதான்மகமான தேகத்திலே

க்கார், கருவிகளினீங்கி நிட்டை மேவினோரோ டொப்பச் சென்கதாரே யாவார். அவ்வுண்மை யறிந்தார் உணர்ந்துப் பூசிமுடித்துச் செய்யுந் தொழிலொப்புடைப் பேறுற்றி யவரை உலகத்தாரோம்புவைத் தென்னறக வென்பதாம்.

பராவுதல் சஞ்சரித்தல்.

இதனானே யங்ஙனம் முயன்றோரது பெருமை கூறப்பட்டது.

ஞானவதிகாரப் பட்டமைபற்றி யீண்டுக் கேட்டலுடன் வைத்து ஒருவாறாகுற ளுருத்தோதிய இனைஞானவை யெல்லாம் வருகின்ற சூத்திரங்களான் விரித்துக் கூறப்படும்.

புறச்சமய நெறியென்பதுமுதல் விதத்தையும் இரண்டாங் கூற்றைத் தெரிந்துணர்த்தியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படிச் சாக்கிராதீதம் புரிந்துநிற்கும் ஞானவான்களது பெருமையை மேலருளிச்செய்கிறார்.

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிகுவர்கள் - அருளோடே கூடி இரண்டற நிலைபெற்று நேயத்துடனே அழுந்துகிற சாக்கிராதீதங் கைவந்தவர்கள்,—உலகிற் சருவசங்க நிவிர்த்திவந்த சுபோதனர்கள் - பூமியிலே சருவசங்கப் பரித்தியாகம் பண்ணின சுபோதனர்கள்,—அவர்கள் பாக்கியத்தைப் பகர்வதென்னை - அவர்கள் முன் ஜனனங்களிலே செய்த சிவ புண்ணியங்களை வாக்காலே கோசரிப்ப தெப்படி?—இம்மையிலே யுயிரை பற்றறுத்து - இந்த ஜனனத்திலே ஆன்மாவுக் குண்டான பாசப் பற்றுக்க ளெல்லாவற்றையுந் தங்களுக்குப் பிராணனாய

நிற்கிற ஞானத்திலே யழுத்து,—பரத்தையடை பராவுசிவ ரணர்க்கு - எல்லாத்துக்கு மேலாயிருக்கிற சிவத்தைப் பொருந்தி சிவமாயிருந்துள்ள இவர்கள் சஞ்சரிப்பாரின்ற சீவரல்லவோ!—ஆகுமுடி கவித்தரசாண்டவர்க ளரிவையரோ டனுபவித்தங்கிருந்திடினு மகப்பற்றற்றிருப்பர் - அவர்கள் பண்ணப்பட்ட அபிஷேகமுஞ்சூடி இராஜ்ஜியம் பண்ணினவர்களுடனே கூடி யனுபவித்து அங்கே யிருந்தார்களாயினும் உட்பற்றற் றிருப்பார்கள்,—போசகியிது புரியாரோ புறப்பற்றாற்றுறும் நுழைவாபிறப்பினில - இப்படிப் பார்த்து இந்தவுண்மையிலே கூடாதவர்கள் புறப்பற்றுக்க ளற்றிருந்தாரோ யாயினும் ஜனனத்தை யடையா நிற்பார்கள். ஆகையாலே,—வினைகளுங்கிடாவே-பிராரத்த கன்மமு மதுபுசிக்கையி லுண்டான வாகாமிய கன்மங்களுங் கெடாது.

இதனாற் சொல்லியது, கருவிகளெல்லாங்கூடி இலாடத்தானத்திலே நிற்கச்செய்தே அவையிற்றிற் றோயாமல் சிவத்துடனேகூடிச் சிவமாய்ச் சாக்கிராதீதம் புரிந்துநிற்கிற ஞானவான்களுக்கு ஜன்ன மறுமென்றும் இந்த வுண்மை கூடாதவர்களுக்கு ஜனன மறாதென்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—0—

சாக்கிராதீதத்தைப் புரிந்தவர்கள் - இங்ஙனம் பசுகரணம் சிவகரணமாகத் துணிய சாக்கிரத்தி னின்றுகொண்டு தானே கரணங்கடந்த வதீதத்தைப் புரிந்தார்,—உலகிற சாயசயக நிவிர்த்திவந்த தபோதனர்கள்-இவ்வுலகினிசணனே சருவிகளினீங்கி நிட்டைமேவினரோ டொப்பச் சிறந்தவரேயாயர்,—இவர்கள் பாக்கியத்தைச் சொல்வதென்ன - இவர்கள் முற்பி

னிலிற்செய்த சிவபுண்ணியத்தைச் சொல்லவொண்ணாமையா
ல்,—இம்மையிலே யுயிரினைப்பற்றுத்து-இம்மைக்கண் ணுயிரைப்ப
ற்று நீங்கி,—பரத்தைப் டைப் பராவுசிவரனரே- மேலாகிய சிவத்
தைப் பொருந்தி யிரண்டற் றிரைக்யாற் சஞ்சரிக்கின்ற சிவமே
யாவர்,—அவர்க ளாக்குமுடிக்கவித்த அரசரா டரிவையரோ
டுபவித்தகு கிருந்திடினும்-அவர்களாக்கப்பட்ட முடியினை ய
ணிந்து அரசாக்ஷிசெய்து அரிவையரோ டினபுற் றிருந்திடினு
ம்,—அகப்பற்றாற்றிருப்பர்-அகப்பற்றுநீங்கினவரேயாவர்—நோ
க்கியிது புரியாதோர் புறப்பற்றறுலும் - ஆராய்ந் திவ்வகப்பற்
று நீங்காதோர் புறப்பற்று நீங்கினும்,—வினைகணுங்கிடா பிறப்
பினினுழைவர்-வினைகளொறுதலின் பிறப்பினை யடைவர். இவ்வு
ண்மை யறிந்தார் ருணர்ந்துப் பூசிமுடித்துச் செய்யுந் தொழி
லொப்புமையேபற்றி யவரை யுலகத்தாரோடுவைத் தெண்ண
றக

புறச்சமய நெறியென்பது முதல் விருத்தத்தையு மிரண்டாவ
கூற்றைத் தெரித்துணர்த்தியவாறு

☞ அ-சூ, உ-அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படிக் கருவிகரணங்களை நீங்கினோர் காணப்படுமென்
னறு சங்கிரகத்தாற் சொல்ல வுணர்த்துகின்றார்

கருவிகழிந்தாற்காணு மொன்றுமெனிற் காணுர் கா
ணுதார் கன்னிகைதான் காமரசங்காணுண், மருவியிரு
வரும்புணர வந்தவின்பம் வாயினுற் பேசிது மனைத்
தவர்தாமுணர்வ, ருருவினுயிர் வடிவதுவு முணர்ந்தி

நதிலாதாண் — விறகவு மகனுடை ஈநத்தை யுளபடி
யறியமாட்டாதாகள் காண

சிவனையுணரா தாா — ஆநநத ஸ்வரூபனாயிருக்கிற சிவனை ஞானா
சாரியனுடைய வுபதேசத்தாலுணராதவர்
நான ஆநநத தரிசனப்பட்டேனென்று சொ
லலுகிறதல்ல

உணாவினலு ணாவது கறப ணேகாண — சிவனுடைய ரூபம பலவிதமாகத் தியானி
க்கையால அதுவு மநதமென்று வனனரூப
ஆனமபோததகாற கூடியறிகையால அது
வுஞ சகற்பஞானமாய்விடுகாண ஆதலா
ல் சொரூபம வனனரூபமு மாநதமெனப பெறு ஆறு லுமமுடை
ய வாநநதநதான யாதெனின?

அருளபெறில அவிருவரையுமதிவிறநதய கதிவா — சிவனருளபெற்ற ஞானாசாரியர்கள் சருவிக
ரணாதிகளுடன கூடாமற் கேவலமானமாக
சிவனைக் கலநதிருததலே பரமமான ஆநநத
மென்று சொல்லுவாகள

அறியாரேபிரபபுகவிடா தாணவமுமறுதே — ஞானாசாரியனாலே முனனற் சொல்லிய
கறபனைகளு மனறென்று கருதியகதக கறப
னை யில்லாததுமாய்ச சாசுவதமுமாயத் தரி
யங்கடநததுமாயிருபப தியாதொன்று அது
வே பரமமான வானநதமென றிதனை யறியா திருபபாகளா
கில அவாகளுக கொருக்காலுஞ ஜனனமரண வாதைகயு மொழி
யாது, அஃதனறாகவே யாணவ மலமும் விட்டு நீஙகப பெ
றுது. எ-று

மனநகவர் எழுவாய்

உணர்வா பயனிலை

"மைப்படுந்த கண்ணாளுந் தானும்" "அவனருளே கண்ணாகக் காணினல்லால்" "இப்படியன் இவ்வுருவன் இவ்வண்ணத்தன் இவனிறைவனென்றெழுதிக் காட்டொணாதே" எனவருந் இத்தாருகுச சந்திய விசுவத்திலு மறிக (௫௬)

---

## சிவாகாரயோகியருணா வருமாறு.

—o—

நின்மல துரியாதீதத்திலே சோத்திராதி சித்தமிறுதியாகச் சிக்கி லொன்று மறிவதில்லை யென்பவனைக் குறித்துக் கூறுகின்றது

கருவிகழிந்தாற் காணு ரொன்றுமெனிற் காணா காணுதார - கரணங்களெல்லாம் நீங்கினு லொன்றையுங் காணப்படுவதில்லை யெனனில்? அவ்வாறு கரணங்க ணீங்கினு லொன்றுமறியாமற் - பாஷாணம் போலே ஆன்மா விருக்குமென்று முத்தியினிலை பந்தைக் காணுதபோ காணுத ருஷி சம்பிரதாயிகளான காணுதாரொன்றும் சமயிகளே சிவனுடனே கலக்கவென்பதுவேண்டா! சிவானுக்கிரகத்திலே சுவஸ்வரூபாபிவ்யக்தியா யிருப்பதே போதுமெனனில்,—

கன்னிகைதான காமரத்தைக் காணுள் - ஷோடச கலையும் நிறைந்த சந்திரனைப்போலப் பதினாறு வயதும் நிறைந்து அதிசுந்தரவதியாய மதன கலைகளைக் கற்றுடையவளாயினுங் கன்னிகை காமரசத்தை யறியாள் மேல்,—

மருவியிருவருமபுணர வந்தவின்பம் வாயினாற்பேசரிது மணாளர்களாகா முணரவா - வாழ்க்கைப்பட்டு பர்த்தாவும் ஸ்திரீயுமாக வொருதலைக் காமமன்றி யிருவருமொத்த குணமாய்ப் புணர்ந்த கலவியிலுண்டான சுக மிவ்வாறென்றுமை கண்ட கனாப்போலப் புறத்தியாருக்குச் சொல்லப்போகாது அனுபவித்தபேரே யறிவார்கள்.

ஆதலா லான்மாவுஞ் சீவனுங் கலந்துவிட்டதில்லது ஆனந்தானுபவ முண்டாகாது கலந்துண்டான அனுபவ மந்தஞாதாசனுக்கே அனுபவமொழிய புறத்தியார்க்குச் சொல்லப் போகாது —

சிவனை யுணராதா ருருவி லுயிர்வடிவதுவு முணாந்திலா காண — சிவஞானத்தினாலே சிவ தரிசனப்படாதபோ தேகேந்திரியாதிக கந்நியமான ஆன்ம ஸ்வரூபத்தையுந் தரிசித்தவ ரல்லாகாண. காணென்றது மாணாக்கன் முன்னிலை சிவஞானத்தினாலே சிவனையு மான்மாவையுந் தரிசிக்க வென்பானேன், ஆன்மஞானத்தினாலே தரிசிக்கலாகாதோ வெனனில் ?—

உணாந்தார உணர்வினாலுணர்வது கற்பனைகாண — ஆன்மஞானத்தினாலே யறிவேனென்கிறது சங்கற்பம் சங்கற்பமுண்டானபொழுதே விகற்பமுமுண்டு. விகற்பம அத்துவைதமாகாது மேலெவ்வாறு சிவ சீவ தரிசனமெனனில்?

அருள்பெறி லவ்விருவரையு மறிவிரண்டற் கறிவ ரறியாரேற பிறட்டுமவிடா ஆணவமுமமருதே — சிவனுடைய பராசக்தி ஆன்மாவிலே பிரகாசிக்கப்பெற்று லந்தச் சிவ சீவனிரண்டுபேரையு மான்மாவினுடைய விருத்திஞானம் லயிக்க ஸ்வரூபஞானத்தினாலே வேறின்மையை யறிவர்கள இவ்வாறு ஆன்மாவையுஞ் சிவனையும அறியாகளாமாகி லவாகளுக்கு ஜனனமு மொழியா ஆணவமலமு நீங்காதென் றிதன்பொருள்

---

## ஞானப்பிரகாசருணா வருமாறு.

—o—

பசுகரணங் கழன்றவிடத்துஞ் சிவசத்தி விளக்கு விளக்கிய சிற்சத்திகுறிச் சிவ கரணத்தினாற் சிவனையுந் தன்னையுமசி

வகரணத்தி னுதிக்குஞ் சிவ சாக்ஷாத்கார பூர்த்திசத்திய ம றிந்தனுபவிப்பவன், புத்திபோதத்தா லன்றென்று போதிக்கின் றார்.

காணுந்தார்-சிவ கரணத்தால் நோக்காதார்,— காணா-பசுகரணத்தால் சிவரூப சிவசமாதி சிவ சாக்ஷாத்கார சித்தப பூர்த்தி முற்றுப் பூர்த்திச சுக முதலியவற்றை யுணர்ந்தனுபவியார்,—உணர்வின் றறிவது - சுதந்திவித்தை பொருந்திய சுதந்திரத்தவ புத்திபோதத்தா லறிவது,— கற்பனைகாண - கிருபத் சரீர சதாசிவாதி மூர்த்தி தானன்றே,— அறிவிறந்த சறிவர - சாலம்ப சிவயோக மார்க்கத்துப்போய்ப் புத்திபோதங் கடந்து சிவனைச் சாக்ஷாத் சிவசத்தி வியத்தி சிற்சத்தி யுணர்வினாலுணர்வார், சிவாகமானு மானுரூட சிவசத்தி வியத்தி பூமிபூத சிவகரண புத்தி போதானுவித்த சிற்சத்தி யுணர்வின்றபரோக்ஷமாய்ப் பரம்பரையாய்ப் பார்ப்பார்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருணர் வருமாறு.

—0—

இருவரும் புணர வந்த வின்பம் பேசரிதாயினும் மணந்தவர் தாமுணர்வர் அக்குமாரச் கன்னிகை காணாள் அதுபோல அருள்பெற்ற சிவ னிருவரையு மறிவிறந்தங்கறிவர். காணமாட்டாத வப்பக்குவ ரதனைக் காணார், தாமேயாகலான் அவருக்கு உணர்ந்தனுமவாயிலில்லை இதனிற்க, பனிகளாங்களான மயங்கித் தன்னெளியிழந்த படிகம்போல உருவான மயங்கியே யானம சொருப முணரப் பெற்றிலர். அதனை யுணராதார் அப்பெறதிதாகிய வுருவுணர்வால் அவ்வானமாவுக் குள்ளாகிய சிவனையு மறியாமென்றல் பாவகமாத்திரையேயாகலாற் கருவியறிவி

கருவிகழிந் தாற்காணு ரொன்றுமெனிற - கருவிகளென்று சொல்லப்பட்ட பாசஞான நீங்கினால் ஒன்று மறியாரகளென்று நீசொல்லில்?—காணார் காருதார - உன்னைப்போ லுணமை யறிபாதவாக ளல்லவோ அசேதனமாயிருக்கிற கரணங்கணீங்கினால் ஒன்றையு மறியாம லிருக்கிறவாகள கரணங்களைக்கொண்டறியாமல ஒன்றையறியும் தெடபடியெனில? உனக்கது சொன்னாலுந் தெரியாது அதெனபோலவெனில?—கன்னிகைதான காமரதத காணுள-பக்குவப்பட்டுப் புமானைக் கூடாத ஸதிரீ காமரத மறியாத முறைமைபோல காமரதமானது சொல்லப்படாதோ வெனில்?—மருவி யிருவருமபுணர வந்தவினபம வாயினுற் பேசரிது-அந்த ஸதிரீ புமானக ளிருவருந் தங்களிற கூடி யுண்டானசுகம வாக்காற சொல்லுதறகரிது ஆனுலந்தச சுகந்தா னில்லையோவெனனில்?—மணந்தவாதா மூலரவா - கூடிப புணாநதவாக ளறிவ ரிதனை ஆகையால்,—உருவிஞாயி வடிவதவு முணாநதிலேகாண சிவனை யுணராதா ருஞரவிரு லுணர்வது கறபனைகாண - சிவனுடைய ஞானத்தினுலே சிவனை யறியாதவாகள தேஹத்திலே நிற்கிற வானமசொரூபத்தையு மறிக்கார்க ளில்லை காண முனசொன்ன முறைமையொழிந்து ஆனமபோதத்தாலே கருவிகளைக்கொண் டறியப்பட்டதெல்லாம சங்கறபித்துக் கொண்டவைகாண ஆனுல சிவனையு மானமாவையு மிவனறியும்படி யெங்ஙனே னெனில?—அருளபெறிலங் கிருவரையு மறிவிறந்தங் கறிவா - முறசனனங்களிற செய்த தபோபலங்களினுலே ஆசாரிய னநுக்கிரகத்தைப பெறில அந்தச சிவனையு மானமாவையுந தறபோதஞ் சீவியாமல் அந்த ஞானத்தோடேகூடி ஞானமாய் நினறே யறிபாநிறபாகள.—அறியாரேற் பிறப்பும் விடா தாணவமு மருதே - இபபடி யந்த ஞானத்தினுலே சிவனையு மானமாவையுந தரிசியாாகளாகில் ஜனனமு மருது அஞ்ஞானமுமம விட்டு நீங்காது

கருவிகழிந்தார் காணார் என்ற சங்கிராந்தவாதியை மறுக்தற்குப் பிரமாணஞ் சங்கற்ப நிராகரணம் - நின்றந்த நியாய நின்றனை யென்று - மறந்தைய புலனாய வரா யென்றுந் - கரணமெல்லாங் கடந்தனையென்று - மரணமடைந்தி னப்புறத் தென்று - முன்னருட லவரப் பனலின் றெனவு-மினையவை யொழிய வறிகுவதெவ்வா - றென்ற திறகலிக் கொன்றிய வினப்பங்-கூறுக் ருகுமருட டேரினையனறே.'' என்னுமதுங் கண்டுகொள்க

இதன்ற சொல்லியது, கருவிகணீங்கின் லொன்றுந் தெரியாது கருவிகளைக் கொண்டே சிவனை யறியவேணுமென்று சங்கிராந்தவாதி சொல்லுக கருவிகள் பாசஞான மாகையால பதிஞானத்தாலே பதியை யறியவேணுமென்னு முறைமை யறிவித்தது

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

மருவி யிருவரும் புணர வந்தவின்பம் வாயின்றப் பேசரிது-பொருந்தி யிருவரும் புணர வந்த வின்பம் வாக்கால் பேசுவதரிதாயினும்,—மணாதவர்தா முணரவா காமரசம் கன்னிகைதான காணாள் - மணந்தவர்தா முணராவாமறியக் காமரசத்தினைக கன்னிகையறியாள் அதுபோல,—அருள்பெறினவ் விருவரையு மறிவிறந்தங் கறிவாகாண- திருவருளைப் பெற்ற றனையுக தலைவனையு மறிவிறந்தங் கறிவர்,—அறியாரேறகாணா-அறியமாட்டாத அபக்குவ ரதனைக் காணார்தாமே யாகலா னவாகளுணாததம வாயிலிலலை இதுநிறக,—உருவினுயிர் வடிவதுவு முணாநதிலா - பளிங்கிறகண்ணன மயங்கி தனை ஞானியிழுந்த படிகம போல வுருவான மயங்கி யானம சொரூப முணரப பெறறிலா,—உணராதாருணாவின்றற சிவனையுணர்வது கறபனைகாணா -

அதனையுணராதா ரடைபெற்றதாகிய வுருவுணர்வா லவ்வான்மாவுக் குளனாகிய சிவனையு மறியாமென்றல் பாவகமாதலினை யோயக்கலாம்,—கருவிகழிந்தாற் காணுமொன்றுமெனிற் காணு காணுதார்-கருவியறிவிறந்து நின்று அருளானறியப் பெறுதாக ஏகதேசமாகிய கருவியுள்ளளவு மேகதேசக்காட்சி நீங்காமை யால்,—பிறப்புமவிடா ஆணவமு மற்றே,—பிறவியொழிடாது பிறவிக்கு மூலமாகிய ஆணவமலமும் பற்றறக் கழியாது

இங்ஙனே பசுகரணங்கள் சிவ கரணமாகத் தூலிய சாக்கிரத்தைப் பெற்று ரதனமேலுங் கரணங்க—ந்த அதீதத்தைப் புரிதற்கு அறிவுசெலலுமாறு யாங்ஙன மெனனும் சிவசங்கிராந் தவாதிகளை மறுக்குமுகத்தால் 'தனைவியன்வைப்புல வேடா சுழ விற்பட்டுத் துனைவனைய மறியாது துயருறுந் தொல்லுயிர்' என்ற மூன்றுஞ்சூறு வலியுறுத்தப்பட்டது

☞ ௮-ஞ, ௬-ம், அதிகரண முடிந்தது

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படி நிட்டையைப் பொருந்தி நீங்கிவிடத்துக்
கருவி கரணதிகளுடன் கூடிலுமேயாயினு மத
னைவழித் தனரென றுணர்த்துகின்றார்

பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போலுள்ளம் பலபுலன்க ணிறங்காட்டும் பரிசுபார்த்திட், டின்னிறங்க ளொன்னிறமன் றென்றுதனை றெளிந்திறங்கண் டருளிறை யின்னிறத்தினவேறுப்ப, பொய்யந்நிறனவம புலனிறங்கள் பொய்யென மெய்கண்டான் பொருந்திடுமே மேசிவத்தினொடும் போதானேயெனனே, முன்னிறைந்த சி

## சிவாகாயோகியருளை வருமாறு.



மேல் வருத்திஞான மொழிபப தெவ்வாறெனற மாணுகக ளுக காமுறைமை கூறுகினறது.

பனனிரங்களவைகாட்டும படிகம்போலுளளம பலபுலனக ணிறங்காடடிய பரிசுபாரத்திடடு - பலநிறப் பொருளகள ஸப டிகத்தை யடுத்துளளவில் ஸ்படிகத்தினுடைய வொளியான து அடுத்த பொருளின் நிறமாகத் தனனைப் பிறருககக காட்டினது போலச சத்தாதி புலனகளைக கவருஞ சுரோத்திராதியை யா னமாவினுடைய வருத்தி ஞானமானது மனதினுடனே கூடப பொருந்தினவிடத் தந்தச் சுரோத்திராதிக ளானதாகவே கா ணபிககு மியல்பைக கண்டு,—

இனனிறங்க ளெனனிறமன் றென்றுதன்ற னெழினிறஙக ண டருளிலனனிறத்தின வேறாய் - இந்த விஷயஞானஙக ளெனனுடைய ஸவரூப மனறெனறு தனனுடைய ஸ்வரூப ஞா னத்தை சிவஞானத்தினாலே கணடு அந்த வருத்தி ஞானஙகளு ககு வேறாய,—

பொய்நிறமைவம் புலநிறங்கள் பொய்யென மெய்கண்டான பொருளதுவென சிவத்திறனும் போதானபின்னை - விஷயஞா னஙகளானது மூனறு லக்ஷணத்திலே கெடுவதாகையால் அசத தியமெனறு தனது சத்தியஞான ஸ்வரூபத்தை சிவ ஞானத்தி னாலே தரிசித்தவன சிவ ரூபத்திலே கலபபன். அவ்வாறு கலந் தவன திருமப ஜனனத்தில் வாரான். அதெதபோல வென னில் ?—

முனனிறைநீர்சிறைமுறிய முடிசியோடி முன்னீர்சோந் தன னீராயப் பினனீங்காமுறைபோல் - முதலே கட்டுபபட டிருந

ந் வேசிந்ர கரையுடைய மிகவும் விரைந்துசென்று சமுத்திரத் தைப் பொருந்தியாத உபபுகீரோயாய்த் திரும்ப நவனீ ராகா த்து போலவென றிதனபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சிவஞானத்துணைச் சிவகணமு யோகிகளல்லாச் சில சிவநிய திகனமத்துணை சிவஞான யோகிகள் பண்ணும பசுத்தவ சிவ த்துவ விவேகத்தை யிருந்து மனமடக்கிப் பலபபடபபண்ணும வனும பாசமுத்தி சிவத்துவாபியத்தி மாறுய்ச சிவஞேடொ த்தத் திருபபத திருமபாவென்று செயபுகிறுர்.

பனிறாங் களைவை காட்டும் படிகம் போல - செமபரத்த ம் பூ முதலிய தடஸ்த லக்ஷண சிவப்பு முதலிய தனமங்கைத் தனது ஸ்வரூபலக்ஷண சுக்கில முதலிய தனமங்களபோற ற னிடத்திற் காணபிககும படிககத்போல்,—

உளளம - ஆனமாததான,—

பலபுலனக னிறங்காட்டும் பசிகம் பார்த்திட்டு - பலபுல னகளெனபது மல முதலியவற்றைக் காண்பிக்கும குறிப்பு மொ ழியாகவான, மல முதலிய தடஸ்தலக்ஷண பசுத்துவ சிவத்துவ முதலிய தனமங்களைத் தனது ஸ்வரூப லக்ஷண சிவத்துவ முத லிய தனமங்கள் போலத் தன்னிடத்திற் காண்பிக்கு முறை யுங் கவனி,—

இசு நிறங்க ளென்னிற மன்றென்று - இப்பசுத்துவ சிவத்து வ முதலிய தடஸ்த லக்ஷணங்க ளென் து ஸ்வரூப லக்ஷணங்கள ன றென்று,—

அருளினுல-சிவ சத்தி வியத்த சிற்சத்தியால் விவேகித்து,—

தன்ற னெழினிறங்கண்டு - தனது ஸ்வரூப லக்ஷண சிவத்துவ தரிசனம் பண்ணி,—

இதந்நிறத்தின வேறாய - இச் சிவத்துவ லக்ஷண விலக்ஷண மாய,—

பொய்ந்நிற வைம்புலனிறங்கள் - என்பதற் கசத்திய வைம்புல குணங்களென்று பொருளுரைக்கில மாயாவாத மதமாமா தலால், ஆன்மாவுக்குத் தடஸ்த லக்ஷண மாதலால் சிவத்துவ மபோற ஸ்வரூப லக்ஷண மாயுள்ளன வன்றி மல முதலிய பாசங் கட்குச் சுவரூப லக்ஷண மாயுள்ள பசுத்துவ சீவத்துவ முதலிய தன்மைகள்,—

பொய் யென மெய்கண்டான் - தனக்குச் செயற்கைக் குணங்களா யுள்ளன வென்றொன்று மல முதலிய வற்றிற் கியற்கைக் குணங்களா யுள்ளமை யுணர்ந்தான சிவத்துவ விவேகி யென்றுமாம்,—

முன்னிலைநீர் சிறை முறிய - கடவிட,—

முடுகி யோடி - விரைந்து சென்று,—

முகநீர்சேர் தண்ணீராய் - சமுத்திரத் தடைந்த துப்புநீ ராய்,—

பின்னீங்கா முறைபோல் - திரும்பத் திரும்பாத செய்தி போல,—

பொருந்திடுவன் சிவத்தினோடு - அமூர்த்தத் திரவிய பதார்த் தங்கட்குப் பொருந்தல் பிரிதல் கலத்தல் போதிப்ப தின்றியன் முதலால் சிவத்தினோடு தாதான்மிய சம்பந்தத்தால் தனது சிவத்துவத்தோடு சாதிருச்ய சம்பந்தத்தால் சிவனோடு சம்பந்திப்பன,—

போதான் பின்னை - பசுத்துவ சிவத்துவமுத லுபாதிய டான.

நிருப்புச் சோபாதி, சிவத்துவம் நிருபாதி, நீர்போ லுப புப பொருந்துஞ் சித்திருந்தபடி யிருந்து சிவத்துவ மிசையு மாதலால் முற்றுவமையன்று, இருமைப்பத்திருமையா னென்று திட்டாந்தம்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

தன்னையடுத்த பளிங்கினியல்பே தன்மாட்டுக்காட்டி நிற்கும் பொதுவியல்புடைய படிகம்போல, ஆன்மாவுந் தன்னொடு சார்ப்பட்ட கருவிகளினியல்பே தன்மாட்டுக் காட்டி நிற்கும் தனது பொதுவியல்பை முன்னர்ச் சிந்தித்தறிந்து கொண்டு, பின்னர் அப்படிகவொளி யவற்றின் வேறாய் நிற்றல் போல, தனது சிறப்பியல்பு இவற்றின் வேறாயுண்டென்ப துணர்ந்து, பின்னர் அப்பொதுவியல்பையே தனதியல் பாகச் செய்து நிற்குங் கருவிஞானம் பொதுவியல்பேயா யொழியும்படி தனதியல்பு விளங்குதற்கு ஏதுவாகிய வுண்மை யுணர்ந்தானத் தனதியல்பின் விளங்கித் தோன்றுஞ் சிவத்தைப் புணர்வன்; மீளவக்கருவிக் கூட்டத்திற் செல்வானல்லன். சிறைப்பட்டநீர் முறிகவழிக் கடலிற் சென்றடங்கி மீளாதவாறு போலுமென்பது.

கருவிகளை அப்பெற்றிய வாயன்றி அவற்றை நீங்கி யருள் பெறுமாறு யாங்ஙனமென்று சோதனுறுவார்க்கு உபாயங் கூறி யவாறு.

சோதற்கு இடையீடின்மை விளக்குவார், முடிகியோடி யென்றார்

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படிக் கர்த்தாவி னருளினாலே ஞானமாகக் கறிவாக
னென்ற தென்னெனபு, அவன் நீரும் நிழலும்போல விகாரமற நிற
க இவனைச் சென்று கூடியென்னற அவிகாரவாதியை நோக்கி
மே லருளிச்செய்கிறார்

பன்னிறங்களைக்காட்டும் படிகம்போல — பஞ்சவர்ணங்களி
னுண்மையைக் காட்டுகிற படிகத்தைப்போல,—உள்ளம் பலபுல
னக னிறங்காட்டும் பரிசுபார்த்திட்டு — ஆன்மாவானது பஞ்சவி
ந்திரியங்களுடைய சுபாவமே தானுங்காட்டுகிறமுறைமையை ய
றிந்து,—இன்னிறங்க ளென்னிறமன் றென்று — இந்தஸ்வரூப மெ
ன்னுடைய சுபாவ மல்லவென்று,—தன்றனெழில் நிறங்கண்டு—
தன்னுடைய வழகிய சுபாவத்தை யறிந்து,—அருளினால் வின்னி
றத்தினவேறாய — அந்தப் பஞ்சவர்ணங்களைப்போலத் தன்வச
மாக்கிக்கொண்டு நிற்கிற வசத்தியமான விந்திரியங்களைக்
குருவினாலே தனக்கு வேறாகவறிந்து,—பொய்ந்நிறவைம் புலநி
றங்கள் பொய்யெனமெய்கண்டான பொருந்திடுவன சிவத்தி
னோடும் போதாளபின்னை — அசத்தியமான சுபாவத்தையுடைய
பஞ்ச விந்திரியங்களின் வண்ணங்க ளெல்லாம் அசத்தியமென
றறிந்து சத்தியத்தைத் தரிசித்தவன் அந்தச் சத்தியமாயுள்ள
சிவனுக் கடிமையென்றறிந்து அந்தச் சிவனோடுங் கூடிப் பின்பு
சிவத்தைவிட்டு நீங்கான், அதென்போல வெனில்?—முன்னி
றைநீர் சிறைமுறிய முடுகியோடி முந்நீர்சேர்ந் தன்னீராய்ப்
பின்னீங்கா முறைபோல — முன்னே சிறைசெய்ய நிறைந்து
நின்ற நீரானது அந்தக் கரை முறிந்தபோது விரைந்துசென்று
சமுத்திரத்தைக் கூடி யப்புநீராய்ப் பின்பு பழைய நீராகாத மு
றைமைபோல வான்மாவுந் தன்னைச் சிறைசெய்துநின்ற விந்தி

ரியங்களைக் குருமுகமாகத் தனக்குச் சிறையென்றறிந்து இந்திரியங்களை நீங்கிச் சிவனுடைய சீபாதத்திலே பொருந்தி யழுந்தின வானமா, மீண்டும் அசற்காரியமான விந்திரியங்களில் வந்து கூடப்படாது.

'பன்னிறங்களவைகாட்டும் படிகம்போ லுள்ளம் பலபுலன்க ணிறங்காட்டும்பரிசுபாதத்திட் டின்னிறங்களெனவிறமன்றெ னுந்தன்ற னெழில்நிறங்க ளற்றுளிருள் வினைவிறந்திவேறுய பொய்ந்நிறமைம்புல நிறங்கள்பொய்யென மெய்கண்டான பொருந்திடுவன் சிவத்தினொடும் போதானபின்னே" என்றது அவிகாரவாதி இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "ஆதலின் வாயிலாள விலதிகலி - லேதமிலறிவுயிர்க் கெய்துதலிலதே" என்றும், "நீங்கிழலனைய சீபெறுகடவுளைச்- சேர்ந்தவாக்கிணைப்ப வாய்ந்திடுமென்றனை - பாதவமெனுஞ் சேதனமனைமயி - னிழைத்தோரவம்பி னெனபதந்துணையதக- விளைதபோதமயின் வெறுப்பு மொன்றிலதே" என்றும், சிவஞானபோதம், அ-சூ, ௬-வெ, "பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந், தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப், பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான, மெய்ப்பொருட்குத் தைய்வமாம் வேறு" என்னுமதுங் கண்டுகொள்க.

'முன்னிறைநீர் சிறைமுறிய மூடியோடி முன்னீர்சேர்ந்தன்னீராய்ப் பின்னீங்கா முறைபோல்" என்றற்குப் பிரமாணம், சிவஞானபோதம், அ-சூ, ௪-வெ, "சிறைசெய்யநின்ற செழும்புனலினுள்ளஞ், சிறைசெய் புலனுணர்வு நீந்து—சிறைவிட, டலைகடலிற் சென்றடங்கு மாறுபோல் மீளா, தலைவிசாரன பாதத்தையுற்று" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆன்மா விந்திரியங்களோடு கூடித் தன்னை யறியாது மயங்கி நிற்குமென்றும் முத்தியிற் சிவனுக

கடுமையா யிருப்பனென்றும் குருமுகமாக விந்திரியங்களைத் தன
க்கு வேறென் றறிந்து நீக்கச் சிவனுடைய திருவடியே இவனு
க்குத் தாரகமாமென்று முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

பன்னிறங் களைக்காட்டும் படிகம்போல - தன்னை யடு
த்த பன்னிறங்களி னியல்பே தன்மாட்டுக் காட்டி நிற்கும் பொ
துவியல்பையுடைய படிகம்போல,—உள்ளம் பல்புலன்க ணிறம்
காட்டும் பரிசுபார்த்திட்டு-ஆன்மாவுந் தன்னுற் சார்ப்பட்ட க
ருவிகளி னியல்பே தன்மாட்டுக் காட்டி நிற்கும் தனது பொது
வியல்பே முன்னற் சிந்தித்தறிந்துகொண்டு,—இன்னிறங்க ளெ
ன்னிறமன்றென்று தன்றனெழினிற மருளினுற் கண்டு - பின்ன
றப்படிகவொளி யவற்றின் வேறுளதாயினும் போலத் தனது
சிறப்பியல்பு இவற்றின்வேறு யுண்டென்பது மருளா னுணர்ந்
து,—இன்னிறத்தின் வேறாய்ப் பொய்நிற வைம்புலநிறங்கள்
பொய்யென மெய்கண்டான்-பின்யங்ஙனம் பொதுவியல்பை த
ன்னியல்பாகச் செய்து நிற்கு மக்கருவி ஞானம் பொதுவியல்
பேயாயொழியும்படி தன்னியல்பு விளங்குதற் கேதுவாகியஉண்
மையுணர்ந்தான்,—சிவத்திறனும் பொருந்தவே-தன்னியல்
பின் விளங்கித்தோன்றுஞ் சிவத்தைப் புறுவன்,—பின்னைப்போ
தான-மீள வக்கருவிக் கூட்டத்திற் செல்வானல்லன்,—முன்னி
ரைநீர் சிறைமுறிய முடிக்கோடி - சிறைப்பட்ட நீர் முறிந்தவ
ழி விரைந்தோடி,—முந்நீர் சேர்ந் தந்நீராய்ப் பின்மீளா மு
றைபோல - கடலினைச்சென் றந்நீரா யடங்கிப் பின் மீளாத
வாறுபோலும்.

---

## மறைஞானதேசிகர் உரை

பரிணாமவாதி சிவனை யுபாதானமாகக்கொண் டோடிக்
கூடினென்றதென்னை? யவன் சர்வவியாபி
யோ யேகதேசியோ வென்ன அவனைக்
குறித்துணர்த்துகின்றார்.

எங்குந்தா னென்னி னொன்று மெய்தவேண்டா மெங்கு
மிலனெனினீ வேறிறையுமல்லன், அங்கணுடே ருயி
ர்போலவ னெங்குமங்கத் தவயங்கள் கண்போலக்
காணுதான்மா, இங்குநா மியம்புந்தத் துவங்களினவை
தநயில திறைஞானந் தந்துதா னீதல்கடரிழந்த, துங்
கவிழிச் சோதியுமுட் சோதியுமபெற்றுறபோற சோ
திகருட சோதியாயத தோனயிடுவன்காணே. (ரு அ)

(இ-ள்.) எங்குந் தானெனின் ஒன்றுமெய் தவேண்டாம் — அவன் சர்வவியாபியெனப்பேராகில் லப்பொழுதவனை நாம்சென்று கூடவேண்டுவ தில்லை.

எங்குமிலனெனில் வேறிறையுமல்லன் — சர்வவியாபி யல்ல வெனப்பேராகில் அப்பொழுதவன் கர்த்தாவு மல்லவாய் வேறே யொரு கர்த்தாவை யபேட்சிக்க வேண்டும்.

அங்கணுடே ருயிர்போலவன் — அக் கன்றிச் சரீரத்திலே யிருக்கிற வானமாவைப்போ லேகதேசமாய் விடுவன.

எங்குமங்கத் தவயங்கள் கண் — சரீரத் தண்டாகிய அவயவங்களைக் கண்ணைக் காணுமதனை யவயவங்கள் காணுத

போலக் காணு வாறுபோலச் சிவனெங்குமு வியாபித்து
தானமா நின்றுனேயாகிலு மவனை யானமாக்கள் கா
ணமாட்டார்கள், ஆன்மாவையுற்றுள்ள பி
ரபஞ்சங்களையுஞ் சிவன் கண்டுநிற்பன் அஃதெனபோல வென
னில்?

இயங்குநா மிய மபுந் தத்துவங் களின் வைத்தறி வது — இவ்விடத்து நாஞ் சொல்லப்பட்ட கால முதலிய தத்துவங்களை வியாபித்துக்கொ ணடுநின்று விஸ்வத்தைந் நடத்து முறைமை போல,

இறைஞானந் தந்துதாளீதல் — சிவ ஞானமாக்கட்குச் சர்வஞ்ஞத்துவா திகளை விளக்கி முத்தியை யடைவிப்பது. அஃ தெனபோ லெனனில்?

சுடரிழந்தது கவிழ்ச் சோதியு மு'- சோதியும பெற்றுறபோல — படலத்தாலே யொளியை யிழந்த கண ஞனது பணவிகன வியாபாரத்தாலே பட லத்தினைவாரே நல்ல விழியையு மதற்குக காட்டாய்நிற்கிற கருவிழியுங் கரிவிழியிலிரு க்கும் பார்வையையும் பெற்றுற்போல.

சோதிககுட் சோதியாயத் தோன் றிடுவன் காணே — அப்பொழு தாயிசகுயிராத் தோனறப்ப ட்ட சிவனை யவ்விடத்துக கலந்தனைக் கூறி யது. எ-று.

என்னவே சிவனு மிவனுக்குஞ் சர்வஞ்ஞத்துவ முண்டாக ல் சற்குண சமானத்தாற் சமரசீபாவங் கூறியதாயிற்று. இச சமரசீபாவம் பாலும் பாலுங்கூடினது பிரிக்கப்படாதவாறு

இக்க வைக்கியம் பினனமே யகருள், கண்ணின் பிரகாசத் தையும் ஆதித்தப் பிரகாசத்தையும் உவமித்துக் கலந்ததென்று ரைவறிக.

"திருவேயெனசெல்வமே தேனேவானோர் கணேணகண ஞுடைகருமணியே மணியாடு பாவயகாவா, யருவாயவல்வினை நோ யடையாவண்ண மாவடுதண் டுறையுளாயு மமரரேறே" என் னுமவாக்கியத்தறிக.

இத்தற்கு சிசுவாசம சித்தாந்தரகசிய சாரத்து மறிக(௩௮)

# சிவாக்ரயோகியருரை வருமாறு.

---0---

மேல் சிவன சர்வவியாபியாய் நின்றும் பாச பசு ஞானத் திஞல் அறியப்படாமல் சிவாஞானத்தைக் கொடுத்தருல தோனறி நிற்பனென்று கூறுகின்றது.

எங்குநதானெனனிஞ மெய்தவேண்டா - சிவன சாவ வி யாபியெனனில்? நாம் புதிதாகப் பொருந்தவேணு மெனப தி லலை,—

எங்குமிலனெனனில் வேறிறையுமல்லன - சாவவியாபிய ல்லவெனனில்? ஆனமாக்களுக்கு அனனியமாக ஆனமாக்களி டத்திலே பிரிவறநினறு அந்தர் நியமநத்தைப் பண்ணுகையால் அந்தரியாமியென்று பெருமாய்ச் சுவாமியென்று சொலலப்படு மவா அவவாறில்லையாகில் கர்த்தாவே யல்லவாம அந்தரியாமி யாகில அவனைத் தெரியாதே யிருப்பானே னெனனில்,—

அங்களுசே ருயிர்போல்வ னெங்குமங்கத் தவயவஙகள கண் போலககாணுகாணமா - தேகத்திலே யானமாவினினறு சேஷ் டிக்குமாப்போல ஜடசித்தாயுள்ள பிரபஞ்சமெல்லா மீசுவரன நிறைந்துநின்று பிரேரிப்பன. ஈசுவரன் ஜடசித்துக்க ளெல்லா த்தையும பிரேரிப்பானுமாகில் ஜடங்களுக்கு மறிவுண்டாக வே ணுமெனனில்? தேகத்தி லவயவங்களெல்லாம் கண்ணைப்போ லேகாணுந் தனமையிலலை, அவவா றுதல் சித்தாகிய ஆனமாக்க

னுக்கே யறியுந் தன்மை, ஜடங்களுக்கில்லை ஆன்மா சித்தாகை யால் தானே யறியுமெனனில்?—

இங்ஙனமியம்புந் தத்துவங்களில்லைத்தறிவ திறைஞான நந்தி - இவ்விடத்து நான்சொல்லுந் தத்துவங்களிலே ஆன் மாவினுடைய வருத்திஞானத்தைப் பொருந்தி விஷயங்களை ய றிவதுங் கர்த்தாவினுடைய ஞானசத்தி — பிரசாதத்தினாலே யே! இந்த ஞானமேயோ முத்திக்கு மெனனில்? அல்ல. இந்தஞா னங் குருடனுக்குக் கோல் கொடுத்து வழி காட்டும்போலக் கலாதி தத்துவங்களைக்கொண் டான்மாவுக்கு விஷயதரிசன த்தைப் பண்ணுவிப்பது,—

தாளிதல் சுடரிழந்த துங்கவிழிச்சோதியு முட் சோதியும் பெ றும்போற சோதிக்குட் சோதியாய்த்தோன்றிவனகாணே- மோக்ஷத்தைக் கொடுக்குஞ் சிவஞானமானது காச காமலாதி தோஷத்தினாலே பிரகாசந் தடைப்பட் டவயவத்திற் குறை வற்றிருந்த கண்ணுக்கு சலா†காஞ்சனந்தி வைத்தியக் கிரியையி னாலே யாகுதல் தேவதா பிரசாதத்தினாலே யாகுதல் கண்மீதி லொளியும் சூரியாம்சமான உனவொளியும் பிரகாசித்தாற்போ ல், ஆசாரியனானவனும் தீக்ஷாக் கிரியையினாலே யாகுதல் பரா சத்திப் பிரசாதத்தினாலே யாகுதல் ஆணவசத்தி நீங்கி யான் மா ஜோதியு மதனுள் பரமான்ம ஜோதியு மபிவியத்தியாவது கரண மோக்ஷஞானமென் றிதன்பொருள்.

— பிரசாதம - அனுக்கிரஹம், † அஞ்சனம்-மை.

---

## ஞானப்பிரகாசருவை வருமாறு.

ஆசாரியரு முன்வாக்கில் வாசனையாற் புறப்பயம் பொருத் திவனை சிவத்திரோ டெனபது பெறுது, சுவாயம புவத்திற

சொல்லியபடி பசுத்தன்மை மறைந்த தன்பதித் தன்மை விளக்கத்தோடு பதிவெளியா யறிவில் விளங்குவதே பொருந்துவதென்று போதிக்கின்றார்.

எங்குந்தா னென்னில் - சிவன் சித்தசித்துப் பிரபஞ்ச மெல்லாம் வியாபியா யிருப்ப னென்னில்,—

நாமெய்த வேண்டாம் - ஆற்றுநீர் சமுத்திரத்திற் சென்று கூடுவதுபோ லவனை நாஞ்சென்று கூடவேண்டுவ தில்லை,—

வேறெங்கு மிலனென்னில்,—சர்வத்தையு மறிதல் பண்ணுதல் கூடாதாகையால்,—

இறையு மல்லன் - சர்வ ஜகத் கர்த்தாவு மல்லனாகி விடுவன் உமையயால் சர்வகர்த்திருத்துவ மில்லாமையாற் சர்வஞ்ஞனுமல்லாதே போவன்

பின்னவனை யடைவ தில்லையெனில் அறிவதுந் தியானிப்பது சமாதிப்பது சாக்ஷாத்கரிப்ப தெப்படி யென்னில், அத்தச சிவனெங்கும் தனக்குச் சரீரம்போ லுபசரிக்கப் படுஞ் சித்தசித்துப் பிரபஞ்ச மெல்லா வற்றினும்,—

அங்கங்கே யுயிர்போல்வன் - இத்தன்மையாற் சர்வவியாபியாயிருந்தாலு மலவிருளுபாதிச் செயற்கையினுற்றனது சரீர விளக்குப் பொருந்திய வவ்வளவில் ஞானமுண்டாகையால் அவ்வளவு வியாபக னென் றுபசரிக்கப்பட்ட ஆன்மா வொப்பன்,—

அங்கத் தவயவங்கள் - அந்த ஆன்மாப் பொருந்திய சரீரத் துறப்புக்கள்,—

கண்போல - நேத்திர மாகிய துறப்புப்போல,—

காணுமாறுங் கண்ணே காணும் - அப்படியே சிவன் பொருந்திய சித்தசித்துப் பிரபஞ்ச மாகிய சரீரத் துறப்புகளுள் ஆன்மாவிற் சத்திகளுறப் பொறித்த சிற்கண துறப்புப்போ லறி

யா வாகும,ஆனமசிற சததிககுறி பொறிதத சிறகணணுறுபபே காணும ஆகையா லானமாக குறிபபுமொழியர்தலா லானம சிறசததிககுறி பொறித்த சிற கணணுனது,—

இஙகுநாமியமபு தததுவங்களின வைததறிதல் - இநத சாததிரததில நாம்முன்சொல்லிய போககியப பொருளை யறியுமபோதும பசுகரணமா யிருந்தாலுஞ் சகள சிவனை யறியுமபோது சிவகரணமா யிருககின்ற புதது முதலிய தத்துவஙகள் சாட்டாகப பணணும பதி ஞானக்குறி பொறித்த வோருணாதலா றொரு சோதி,—

தாள-தததுவா தீதமாகிய சிவசத்தி,—

இறைஞானததநது - கருவிப் பதிஞானககுறி பொறிதத சிறசததியைவிளக்கி,—

ரதல்- தொழிறபடிஞானககுறி பொறித்துக கொடுக்க அறிதல ரொரு சோதி. இநத இருசோதியும் பெற்றது,—

சுடரிழநத துஙகவிழி - ஒளிமறைநத பொறியாககண,—

சோதியு முட்சோதியும் பெற்றாற்போல - புறவொளியு முள்ளொளிய முறறதொப்ப,—

சோதிககுட் சோதியாய்த தோன்றிடுவன்கானே - சோதிககுள உட்சோதித் தெனனு மாறுக. சொல்லிய ஆனமசிறசததியி னநதரங்க நிருபாதிக சோதிக்குட் சோதியாய் நிஷ்களனாக,—

தோனறிடுவன கானே - திருச்சியமன்றித் திருக்கு ரூபியாய திருசியனாகுனேயாவன்.

சோதிககுள் - சிவசத்திக்குள் தோன்றிடுவன் - விளங்குவன என்று சிலபெயருரைப்பர். பராக்குருபியாகிய சிவசத தியில் சிவன தோனறுவனாகில் சிவசத்திக் கன்னியனாய் விடுவ னென்பது முதற் றூஷணம் பிரமாணப் பிரசங்கததிற பேசியநதிக.

அதுவன்றி யெடுத்தல் முடித்தல இசையாது பகைச்சுர, பாரபபவன பலப்பிரமிதியன்றிப பிறர் பிரமாணப பிரமிதி பல முமாம

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

உயிர் கரணங்க ளெல்லாஞ் சிவமயமே யெனின வேறறுமை யினமையாற கருவிவழிச் செல்லுஞ சகல நிலையைக கைவிட்டுத திருவடியைத் தலைககூட வேண்டாமையானும், அதுவற்றி யெல்லாஞ் சிவமாக விலலையெனின அவற்றினும வியாபகமா யுடனின்று செலுத்துவ தாகிய வவனை இறைமைககு இழுககாய் முடியு மாகலானும, இருவகையு மின்றிக கலப்பினா லுடம்பினக ணுயிர்போல ஒப்பநிற்ப னெனபது பெறப்படு மாகலான, உடம்பினக ணுயிராகிய வைந்திந்திரியங் களினும உயிர் ஒபப நிறபினும் ஏனை யிந்திரியஙக ளொடுகும ஒளியா லவவானம போநத தோடும் விரவிச் செய்மைககண்ணதாகிய விடயத்தையும வியாபித்தறியுங் கண்ணிந்திரியம்போல வியாபித்தறிய மாட்டாவாய்த் தம்மாட்டுவந்த விடயங்களை நின்றாங்கு நின்று இயைந்தறிவனவே யாமென்று, அது போல் ஆனமாவினும் தத்துவங்களினும் வைத்துப் பார்த்து வேற்றுமை யறிந்து கொளளப படுமாகலான, அப்பெற்றித்தாகிய வுயிர் அப்பெற்றித் தாகிய கருவிஞானத்தைக் கைவிட்டு இறைஞானத்தை திருவடிகளை யெய்தப்பெறுதல், ஒளியிழந்த கண் மாசு நீங்கியவழித் தனதொளியையும் தனககு உள்ளொளியாய் நின்று செலுத்து மான்ம போதத்தையும் ஒருங்கே பெற்றுத்போலு மாகலான, அவவழி யிறைவன ஆனமாவி னறிவுக் கறிவாய்த் தோன்றுவா னன்றி

ஏகதேசமாகிய வேனைக கருவிட்டறிவிககு ளறிவாய்த தோனறு வானலல னெனபது.

இறைவ னொருபப நிறபினும ஏகதேசப் பொருள ஏகதேசப் பொருளோ வியாபகப் பொருள வியாபகப் பொருளே யெனபார், உவமை யெடுத்துக காட்டி யானமாவினும நாமியபுந தத்துவங்களினும இங்குவைத் தறிக தெனறார.

நாமெனனு முளபபாட்டுத தன்மை "நாமறையாமத தெனறே வநதுவைகி நபகத்துவே" எனறாற்போல ஈண்டுத தறகுறிபபுத தோனற முனனிலைககண வநதது.

அறிக தெனறது வியங்கோள், "கொள்ளப்படாது மறபபது" எனபது போல.

இஙகெனபது உவமவுருபு தோனற நினறது.

ஏதல ஆகுபெயர.

இழுகக வெனனும அனபெறுக வகரவீற்றுப் பலவறி சொல் விழிகளை யுணர்த்திப் பெற்றறபோ னெனும பயனிலை கொணடது

மாசுநதகக தோன்றுக துகைவிழிச் சோதியென்றார

யாணடுமொபப கிறகுஞ் சிவத்திலேயும் பொருத்தினவன மீனினும அதுபற்றி யிழுக்கென்னையெனனுஞ் சிவாத்துவித சைவரை நோககி ஒப்பசிற்கும வழியும் வேற்றுமை யுண்டென்பது உவமைமுகத்தா னினிது விளக்கிப் போதான பின்னையெனறதனை வலியுறுத்தியவாறு.

## நிரம்பவழகியருரை வருமாறு.

எல்லா வுருவங்களுஞ் சிவமென்று சொல்லுகைக்கேது யிவ்வசென றவைனேக கூடும்வென்னற தென்னம்பு என்ற பரிணாம வாதியை நோககி யருளிச்செய்கிறார்.

எங்குந்தாமென்னின் றெய்தவேண்டாம் - எல்லாவுருவங்களிலுநின்றறிகிறது சிவனே யென்னில்? அவனுடைய திருவடியை நான்சென்று பெறவேண்டுவது இல்லையாம் ஆனால் சிவன் இந்தப் பிரபஞ்சரூபங்களாக கண்ணிப்பனோ வென்னில்,—எங்குமிலனென்னில் வேறிறையுமல்லன் - எவ்விடத்திலு மில்லை யென்று நீ சொல்லில் அவன் பிரபஞ்சத்துக்கு வேறுமாய் ஏகதேசியுமாய்க் கத்தாவுமாகான் எல்லா வுருவங்களுஞ் சிவனேயாகில் ஆன்மாவென்ப தொன் றெங்கே காணப்பட்ட தென்னில்?—அங்கஞ்சே ருயிர்போலவ னெங்குமங்கத் தவயவங்கள் கண்போலக் காணுவான்மா விங்கு காரியம்புந் தத்துவங்களில் வைத்தறிவது - சிவனே எல்லாவுருவங்களுங் காரியப்பட்டதாமாகிலும் பிரபஞ்சத்தைப் பார்க்க வான்மாவுக்கு விசேடத்துவ முண்டு அதெங்ஙனே யென்னில்? சரீரத்திலே எல்லா வவயவங்களுக்கும் ஆன்மா பிராணனாய் நிற்கிற நிலையாகத்திருக்கச் செய்தேயு மெல்லா வவயவங்களுக்குங் காணுந்தன்மையில்லையாய்க் கண்ணுக்குக் காணுந்தன்மை யுண்டானாற்போல இவ்விடத்து நான்சொன்ன வவயவங்களைப் பார்க்கக் கண்ணுக்கு ஒரு விசேஷ முண்டானாற்போல, பிரபஞ்சத்தைப் பார்க்க ஆன்மாவுக்கும் ஒருவிசேஷ முண்டென்று வைத்துப்பார்த் தறிவாயாக ஆனால் லந்தவான்மாக்கள் சிவனைக்காணு திருப்பானேனென்னில்?—இறைஞானந்தந்து காளீதல் கூடிமுந்த துங்கவிழிச்சோதியுடன்சோதியும் பெற்றாற்போல-முன்னே காணுமென்ற கண் படலத்தாலே மறைப்புண்டு காண்டலின்றி நின்ற வவசரத்து அந்தப் படலம் நீங்கினபொழுது காணுந் தன்மையுங் காட்டு மொளியின் தன்மையும் பெற்றாற்போல பரமேஸ்வரன் தன்னுடைய ஞானத்தையுந் தந்து அந்த ஞானத்தாலே ஆன்மாவுக்குண்டான பாசநீங்கத் தன்னுடைய ஸ்ரீபாதத்தையுந் தர அக

த சீரபாதத்தைப்பெற் றதுவாய் நிற்கவே,—சோதிக்குட் சோ
தியாய்த் தோன்றிடுவன்கானே - ஆன்மாக்களே இவனுக்குப்பி
ராணனுய் நின்று பிரகாசிப்பனென்று அறிவாயாக

இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், “புவனமிப்பா வையும் புனிதன் தருவெளி-லவன் முதற்காரண மன்றுமென்னி- நிமித்தகாரண நிகழ்த்துகெனிற் - யவனேகாரண மனைத்துமெ ன்றறைந்தனை - மண்டலித்துலாங் கண்டசக்கிராதி - காரண மூன்று மோராபுனைந்திடலித - தாரணியதனிற் கண்டதுசாற றுக” என்றும் “சிவஞானபோதம், அ-சூ, அ-வெ, “எவவுருவு ந்தானென்னி லெயதுவாரில்லதா, ளிவவுருவின வேறே யி றையல்ல—னெவவுருவும், கண்போல வையகங்கள் காணுங்க கண்ணிலா, கண்பேறே காணுங்கழல்” என்னுமதனு கண்டு கொள்க.

இதனுற் சொல்லியது, எல்லா வவயவங்களு மான்மா வாலே காரியப்படுதேகங் கண்ணுக் கொரு விசேஷமுண் டானுறபோல பிரபஞ்சமெல்லாம சிவனுலே காரியப்படுகைச செய்தே ஆன்மாவுக்கு ஒரு விசேஷமுண்டென்றும்,பக்குவான மாக்களுக் கல்லாது சிவதரிசன முண்டாகாதென்னு முறைமை யு மறிவித்தது.

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—o—

எவருந்தானென்னலினுமெய்தவேண்டா - உயிர் கரணங்க ளொலாஞ் சிவமயமே யெனிம் வேற்றுமை யின்மையாற கரு விவழிச்செல்லுஞ் சகலநிலையைக் கைவிட்டுத் திருவடியைத் த லைக் கூட வேண்டாமையானும்,—எவருமில்லென்னின வேறி

றையுமல்லன் - அதுபற்றி யெல்லாஞ் சிவமாதலில்லையெனின் அவற்றினும் வியாபகமா யுடனின்று செலுத்துவதாகிய வவனது இறைமைக் கிழுக்காய முடியுமாகலானும்,—அங்ஙனஞ் சேருயிர் போலவ னென்னின் - இருவகையு மின்றிக் கலப்பின் உடம்பின் க ணுயிர்போல ஒப்பநிற்ப னென்பது பெறப்படுமாகலான்,—அங்கத் தவயவங்கள் கண்போலக்காணு - உடம்பின்கணுளவாகிய ஐந்திந்திரியங்களினு முயி ரொப்பநிற்பினு மேனையிந்திரியங்களுனக்கு மொளியா லவ்வானம் போதத்தோடும் விரவி சேய்மைக்கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியும் கண்ணிந்திரியம்போல வியாபித்தறிய மாட்டாவாய்த் தம்மாட்டுவந்த விடயங்களை நின்றாங்கு நின் றியைந்தறிவனவே யாமன்று அதுபோல—, ஆன்மா இங்ஙனமியம்புந் தத்துவங்களின் வைத்தறிவது - ஆன்மாவினுந் தத்துவங்களினும் வைத்துப் பார்த்து வேற்றுமையறிந்து கொள்ளப்படுமாகலான்,— இறைஞானந்தந்து தாளீதல் - அப்பெற்றித்தாகியவுயி ரப்பெற்றித்தாகிய கருவி ஞானத்தைக் கைவிட்டிறைஞானத்தந்து திருவடிகளை யீயப் பெறுதல்,—சுடரிழந்த அங்கவிழிச்சோதியு முட்சோதியும் பெற்றாற்போல - ஒளியிழந்த கண் மாசுநீங்கியவழி தன்னொளியையுந் தனக்குள்ளொளியாய் நின்று செலுத்து மான்மபோதத்தையும் ஒருங்கே பெற்றாற்போலு மாகலான்,—சோதிக்குட் சோதியாயத் தோன்றிடுவன் காணே - அவ்வழி இறைவ னான்மாவி னறிவுக்கறிவாய்த் தோன்றுவானன்றி யேகதேசமாகிய யேனைக் கருவியறிவுக்குளறிவாய்த் தோன்றுவானல்லன் என்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



இத்தப்படி நிற்கமாட்டாதார்க்கு வேறோருபாய முணர்த்துகின்றார்

பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட்டெறியப் படு மப்பொழுது நீங்கியது விடும்பொழுதிற்பரக்கு, மாசு படு மலமாயை யருங்கன்மமனைத்து மரனடியை யுணருமபோ தகலும்பின்னணையு, நேசமொடுந் திருவடிக் கீழ் நீங்காதேநூங்கு நினைவுடையோர் நினையிடுவா நிலையிதுவேயாகு, மாசையொடு மங்குமிங்கு மாகியலம் வருவோ ரருமபாச மறுக்குமவகை யருளினைவழியுரை பபாம். (கசு)

(இ-ள்) பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட்டெறியப்படு மப்பொழுது நீங்கியது விடும்பொழுதிற்பரக்கும — இத்தன்மைபோல

ஆசுபடுமலமாயை யருங்கன்மமனைத்து மரனடியை யுணருமபோ தகலும்பின்னணையும — குற்றத்தைப் பொருந்திய வாணவாதி மலங்களு மிந்த ஜீவன்முத்தர் திருவடியைப் பொருந்தி யிருக்கும்பொழுது நீங்கிய அதனைக் கூடாவிடத் தப்பொழு தவைகளவனைப் பொருந்தாநிற்கும். ஆதலால

நேசமொடு திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையிதுவே யாகும்
ஆசையொடு மங்குமிங்கு மாகியலமவருவோ ரருமபாச மறுக்கும் வகை யருளின்வழி யுரைப்பாம்

சிநேகையுடன் கூடித் திருவடியில் வைத்த வுண்மையைப் பொருந்தி யனவரதமும் பிரியாமலிருக்கவேயெனக் கருதி நிற்க வெண்ணுரு ஜீவன்முத்தர்களிதுவே நிலையாக நிற்பார்கள்.

இந்த முறையினிற்கமாட்டாதார் ராசையினாலே விபரவத்தினைக் கூடியும் பிறந்து மிருக்குமவர்களும் பாசத்தை யறுத்து முத்தி யடைகையின்பொருட் டியாமருளின் வழிநிற்கு முபாய நிட்டை மேற் சொல்வாம் எ-று.

நினைவுடையோர் நின்றிடுவர் எ-ம். யாம் உரைப்பாம் எ-ம். பொருள் கொள்க.

யாம் எ-து. தன்மைப்பெயர்த் தொக்கது எனவறிக.

அருளின்வழி யென்பதனை யிருபாலுங் கூட்டுக. (௩௧)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் பாசவாசனை நீங்குமுறைமை கூறுகின்றது

பாசிபடுகுட்டத்திற் கல்லினைவிட்டெறியப் பட்டபொழுது நீங்கியது விட்டபொழுதிற் பரக்கும் - பாசிநிறைந்த குளத்திலே மென்மேலுங் கல்லுக்கொண் டெறிய வந்தக் கல்லுபட்டேரம் பாசி நீங்கி ஜலந் தூயதாயிருக்கும், கல்லெறியாமல் விட்ட பொழுதிற் பரக்கும் பாசியானது மூடி ஜலமலினமாம் இது போல—

அரனடியை யுணரும்போ தாசுபடு மலமாயை யருங்கன்ம மொத்து மகலும் பின்னையும் - சிவபாவனையைப் பண்ணுங்காலத்துக் குற்றத்தை விளைக்கு மாணவமு மாயையுங் கன்மமு நீங்கும், சிவபாவனை யொழிந்த ஜீவபாவனை வந்தபின் மும்மலங்களும் பொருந்தும் ஆதலால்,—

நேசமொடு திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவேயாக - உண்மையினால் ஞானத்துடனும் பத்தியுடனும் சிவனிடத்து நீங்காது நின்மல துரியாதீதாவஸ்தையைத் தானே யடையு மிச்சையுடையோர் சுத்தாவஸ்தையே நிலைபெறுக நிற்பார்கள்,—

ஆசையொடு மங்குமிங்குமாகி யலமருவோ ரரும்பாச மறுக்குமவகை யருளின்வழியுரைப்பாம் - விஷயங்களிலே யொருக்கால் விருப்பு மொருக்கால் வெறுப்புமாய், வெறுப்புவந்த காலத்துச் சிவபாவனையும் விருப்புவந்த காலத்து விஷயானுபவமுமாகச் சுழலுமவர்கள் வலிதாகிய பாசத்தை யறுக்கு ஞானநெறி கூறுவாமென்றதன் பொருள்.

சிவாக்கிரயோகியார் பண்ணின
சிவஞானசித்தியார் எட்டாஞ் சூத்திரம்
வியாக்யானம் சமாப்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஞானத் தியான சமாதி சஞ்சல சீவன் முத்தி சாட்சாத்கார சமயமாத்திரத்தில் மலமுதலிய பாசம் பறியும். அவை குலையிற் பரக்குமென்று பாஷிக்கின்றார்.

அருளின்வழி யென்பது- அருள்தரு மாகமமாகக்கதநால்.
மறறைய வெளிபபொருா

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

சிவததைப் பொருநதியவன ஒரோவழிக கருவிகளின மீ
ள வருமாயின அது நீர்பபாசிபோல அறறம பாாதது வநது த
லைப்படும வாதனைபறறி நிகழுவ தாகலின, அவவாதனை முனன
ாக கூறபபடு முபாயததைக கடைப் பிடிததுச செயது நீககிக
கோடற பாற றெனபதாம்

இவை மூனறு செயயு ளானும 'அவரிலிசகி மலமகறறித தா
ளுககி மலரடிககீழ வைபபன' எனற நாலாங கூறறுப பொரு
ள வலியுறுத்தப படடது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இநத வான்மா சிவனை யறிந்து கூடினதே யுணடாகில மீள
வநத இநதிரியங்களோடு கூடவற்ரே யெனற பாடாணவாதி
யை நோககி யருளிச்செய்கிறார்.

பாசிபடுகுட்டத்திற் கல்லினைவிட்டெறிய - பாசிபொரு
நதின குளததிலே கல்லைவிட் டெறிந்த விடதது,—படுமபொழு
தநீஙகி யதவிடுமபொழுதிற்பரக்கும-அநதககல்லுப படடபொ
ழுது பாசிவிடடு நீஙகியும எறிகிறது தவிாநதபொழுதே மீணடு

மந்தப பரிசிவந்து தன்னை மூடிக்கொள்ளாநிற்கும். அந்த னமைபோல,—அசுபடுமலமாயை யருவகன்மமன்னத்து மரணடி யையுணருமபோதகலுமபின்னனையும் - குற்றத்தைப பொருந்தி ன மலமாயை காணுதற்கரிய கன்மமிவையெல்லாம பரமேசு வரனுடைய திருவடியை வேறறக்கண்டு கூடும்பொழுது அந்த மலமாயா கன்மங்க ணீங்கும். இவன சகலஞானபடியாலே அந் தத்திருவடியை யுணராதபொழுது மீண்டு மவை வந்துகூடும். இந்தப் பாசங்கள மேலிடாமல் நீங்குமபடி யெங்ஙனே யென ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்—நேசமொடுந் திரு வடிக்கீழ் நீங்காதே தாங்கும நினைவுடையோர நின்றுவா நிலை யதுவேயாக - சினேகத்துடனே தனக்குப் பிராணனாயநிற்கிற பரமேசுவரனது சீபாதத்தின கீழே யனவரதமும விட்டுநீங் காமல அதுவே பற்றுக்கோடாக நிற்கத்தக்க வறிவினையுடைய வாகள அதுவே நிலையாக நிறபாகள. மீளவு மந்நிலைகூடா தவா களுக்கு பாசமநீங்கும தெப்படியென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறா—ஆசையொடு மங்குமிங்குமாகி யலம வரு வோ ரருமபாசமறுக்கும்வகை யருளினவழி யுரைப்பாம - பிர பஞ்ச வியாபாரத்தை விட்டுச் சிவனைப் பெறவேணு மெனகிற வாசையுடனே யந்தத திருவடியிலே கூடிநின்று மலத்தின மே லீட்டாலே யந்தத திருவடியை விட்டு நீங்கிப் பிரபஞ்ச வியா பாரத்திலே கூடிச சுழன்று அதுவாய வருகிறவாகளுடைய நீ ங்குதற்கரிய பாசத்தை நீங்கின முறைமையினைத் தம்பிரானரு டைய காருண்ணியத்தினாலே மேற் சொல்லா நின்றேன

இதற்குப் பிரமாணம சிவஞானபோதம். அ-சூ, கூ-வெ

"ஐம்பொறியி னல்லையென மந்தரசிவனே, யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி, னீங்காநீட்பாசிபோல் நீங்கி மலகன்மமவரி, னீங்கானை நீங்குநினைந்து" என்னுமதுங் கண்டு கொள்க

இக்குறற சொல்லியது, இந்த வானமாச சிவனைப்பெறறும் பிராரத்தம புசிக்கவேண்டிய மல மாயாதி கனமங்களோடு கூடுமெனறும இந்த மலங்களைத் தனக்குப பிராணனாய நிறகிற சிவனாலே நீக்கிக்கொளளு முறைமையுமறிவித்தது

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே துயங்கு நினைவுடை யோர் - இடையறாத அன்போடுஞ் சிவத்தைப் பொருந்தி உதித்த தலைசயடையு மிசசையுடையோர்,—நிலையதுவேயாகி நின்றிடுவர்-சுத்தாவத்தையே நிலைபெறுக நிற்பர். ஒரோவழிக் கருவிகளின மீளவருமாயின அது,—பாசிபடு குட்டத்திற கல்லினைவிட்டெறியப்படும்பொழு திற்நீங்கி யதுவிடும்பொழுதிற பரக்கும்-பாசிபொருந்திய தடாகத்திற கல்லெறியும்போது நீங்கியு மஃது இல்லாதபோது நீர்ப்பாசிபோல,—ஆசுபடுமலமாயை யருங்கன்ம மன்னத்து மரனடியை யுணரும்போ தகலும பின்னணுகும்-குற்றம பொருந்திய மலமாயை கனமங்களெல்லா முதல்வன திருவடியை யுணருமபோது நீங்குந் துமதனை யுணராத வற்றமபாரத்துத தலைப்படுதலும் வாதனைபற்றி நிகழ்வதாகலின,—ஆசையொடு மங்குமிங்கு மாகி யலம் வருவோர் அருமபாசமறுக்கும வகை யருளினவழி யுரைப்பாம - அவ்வாசனை பற்றி விருப்புத்தோடு சனனமரணங்களிற் சுழலுந்ற கேதுவாகிய அரிய

பாசங்களை நீக்குமுவகை யருளவழி முன்னாகக் கூறப்பட்டு முப்பாய
த்தைக் கடைப்பிடித்துச் செய்து நீக்கிக் கோடற்பாற்று

இவை மூன்றுஞ்செய்யுளாலும் 'அவரின்கண் மலமகற்றித் தா
ளுகண் மலரடிக்கீழ்வைப்பன்' என்ற நாலாங்கூற்றுப் பொருள்
வலியுறுத்தப் பட்டது

☞ அ-சூ, ச-ம், அதிகரண முடிந்தது.

☞ எட்டாஞ்சூத்திரம் முற்றிற்று

"நாற்பதின் மேலொன்றிழிந்து"
என்ற வெழாஞ்சூத்திரம்
முப்பத்தொன்பது முடிந்தது.

பாயிரமுட்பட திருவிருத்தம்-உகக.

உ

சிவமயம்

# சிவஞானசித்தியார் சுபக்கம்.

## ௯—சூ. ஆன்மசுத்தி இலக்கணம்.

### மறைஞானதேசிகர் உரை.

மேலிச்சூத்திர மென்னுதலிற்றோ வெனின்? முற்கூறிப்போந்த ஞானமார்க்கங்களுக் கீது நிலைநிற்கக் கூடாதபடி யிறுமே யுபாய மிடமுடையா லான்மசுத்தி யுணர்த்துத னுதலிற்று. இத்தலைச் செய்யு ளென்னுதலிற்றோ வெனின்? 'நேசமொடு திருவடிக்கீழ் நீங்காதே தூங்க' என்பதனை விரித் துணர்த்துத னுதலிற்று.

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே, நேசமொடு முள்ளத் தே நாடிப்பாதநீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போகி, ஓசைதரு மூலகமெலா மலகைத்தேராமென் றறிந்தகல வந்நிலையே யாகும்பின்னு, மோசைதரு மனுவெழுத்தை விதிப்படி யுச்சரிக்க வுள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலாமோட. (௧)

(இ-ள்) பாசஞா மேலான கர்த்தாவைச் சுத்த மாயாகா ணத்தாலும ரியமாகிய வாக்குக்களாலும மாயாகாரி பசுஞானத யமாகிய கலாதி ஞானத்தினாலு மறிவது

தாலும் பாரப்பரி யபரம்பரனை

பாசஞானம் ஆன்மபோதத்தாலு மவனைச் சுத்தஞானத்தா லறியப்படான அஃதெக்காரணத்தாலெனின்? இவ்விரண்டினாலு மவனை யறிந்து முத்தி யடையப் படாமையால் ஆனால் காணும்படி யாதெனின்?

பதிஞானத்தா லே நேசமொடுமு ள்ளத்தே நாடிப் பாதநீழற்கீழ்

ஆன்மாவானவ னவனைச் சலைவைக்கத்த நேசத்தாற் சிவஞானமிடமாகச் சிவனைத் தரிசித்தவனது திருவடிநீழலிற் பொருந்தி யதனைவிடாமல் நிற்கிலப்பொழு தான்மசுத்தியாம்

நில்லாதே நீங் கிப்போகின்

உலக மயக்கத்தா லதனைப் பொருந்தாமற் பிறந்து விடுவானாகில்,

ஆசைதருமுலக மெலா மலகைத் தேரா மெனஅறி ந்தகல வந்நிலை யேயாகும்

மெய்யுணர் வில்லாமையா லிவனுக்கு மெய்ப்பொருள்போலத் தோன்றும் பிரபஞ்சத்தை நிலையல்லவென்று கருதி யவ்வஞ்ஞானத்தைவிட்டு நிற்பையாகி லுனக்கு முற்கூறிய வுண்மையான நிலைமையுண்டாம் இதுவு நிற்கவரிதாகில்,

பின்னு மோ சைதருமஞ்செழு த்தை விதிப்படி யுச்சரிக்க வுள்ள த்தே புகுந்தளிப் பனூனமெலா மோட

அந்த நிட்டை கூடாதாயினப் ஸ்ரீபஞ்சாக்கரத்தை யந்த வன்னத்துக் குண்டான மாத்திரை முதலாயின வற்றை யதுவதுவாகவே யறிந்தோசையேறுமாறு குறையாமற் கருதி யுச்சரிக்கி லப்பொழுது வாச்சிய வாசகத் தன்மைப் பொருளாய் நின்ற சிவனுன்னே யான்மாவின்கண் வந்து பிரகாசித்தாணவாதி குற்றங்களைப் போக்கிச் சுவாநுபூதியைக் கொடாநிற்பன். எ-று.

விதிப்படி யென்பதனைப் பின்னுக்குக் கூறுகின்றார்.

நில் ஏவல் வியங்கோள்

அரன் எழுவாய்

புகுந்திடுவன் பயனிலை

இதற்குச் சிவஞானபோதத்தரு சுவாயம்புவத்து மறிக.

பிரணவத்துடன் ஞ்செழுத்தென்ன ச்ருதியிருக்க விதனைக் கூறிய தென்னையெனில்? அது பொதுவிதியாக வேதாகமங்களிற் கூறினார்.

"வேதநான்கினு மெய்ப்பொருளாவது, நாதனாம நமச்சிவாயவே" எனவறிக.

இதற்குச் சிவதருமோத்தர மெனவறிக. (க)

## சிவாகாயோகியருரை வருமாறு.

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரமபரனைப் பதிஞானத்தாலே நேசமொடு முள்ளத்தே நாடி - சுத்தாசுத்த மாயா காரியங்களுடனேகூடி யறியுமறிவினாலும் அவையிற்றுக்களை நீங்கிய ஆன்ம வருத்திஞானத்தினாலும் காண்பதற்கரிதாகி பரமாகிய சுத்தமாயைக்கு மேலான சிவனை சிவஞானத்தினாலே சிவராகத்துடனே யான்மாவினிடத்திலே வேறறக்கண்டு அவனே தானாய்நிற்பது நிட்டை, அப்படி நின்றவன் சுத்தான்மா.—

தத்தேகம் ஸ்வாயம்புவே — பதிஜ்ஞானேநைக யத்ரூம்
தத்பரேஷா ஹ்ருதா சாமே। தேந தத்ஜ்ஞாந நிஷ்டக
ப்ரகாசோத்தேவாப்யதேவேயம்॥

பாசநிழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதினை - பாதமென்பது பாசராம. நிழலென்றது தாபத்தினையுத்தையும் செடுப்பதாத

லாம் கொண்டாகச் சொன்னது சிவானந்தானுபவியாக நில்லா மனிவக் யந்தக்கரண வழிக்காகவுமில்,—

ஆசைதரு மூலகமெலா மலைகைத்தேராமென றறிந்தகல வந்நிலையேயாகும - ஆனமாக்களுக்கக் கசையைக் கொடுக்கு மூலகங்களெல்லாம பேயத்தேபோல அசத்திய மெனபதை யறிந்து பிரபஞ்ச வாசனையை நீங்கிநிறகவே முனசொன்ன நிஷ்டைகூடும,—

பின்னும்-இதனறியும,—

ஒசைதருமஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க வுள்ளத்தே புதுந்தளிப்ப ஞானமெலா மோட - அஞ்செழுத்தின வாசகத்தால உண்டாம வாசியங்களை யவரவர்கள வாணத்துக்கு மாசிரமத்தசகுஞ் சொன்னபடியே * யனுசந்தானம்பண்ணக் காஷ்டத்திலே அக்னி பிரகாசிக்தாறபோலச் சிவ ஞானமாவிளிடத்திலே பிரகாசித்து பாசத்திரயங்களும் போமபடிக்கு ஞானாநந்தானுபவியாக பிரகாசிப்பித்தென றிதனபொருள

* அநுசந்தானம - ஜபஞ்செய்தல

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

முன சொல்லிய சமாதி நிலை குலைந்தாற பின கூடுமுபாயங் கூறுகினறார்.

பாசஞானத் தாலும்-புத்தியாதி தத்துவ தாத்விக விருத்தி ஞானத்தினலும்,—பசுஞானத்தாலும் - பாசவிருத்தி விளங்கிய ஆனம சிறசத்தி விருத்தி ஞானத்தினுலும, பிரம நானென னுந நான பிரம மெனனும் பசுவாசனை தாககும் விபரீதத்தியான ஞானத்தினுலும,—பாரப்பரிய பரமபரனை - காணுசற

சரியை செய்யாநிற்கச் சிவகரணமாகிய பாச ஞான விஷய சரா
சதாசிவாதீத நிஷ்கள பரசிவனை,—பதிஞானத்தாலே நேச
மொடு முள்ளத்தே நாடிய பாத நீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போ
திலன் - ஆன்மாவிற் சாக்ஷாத் சிவசத்தியால் விளங்கிய சிற்சத்
தி வியாத்திய பதிஞானத்தால் சமாதிய மரியாதியிலிருந்து நி
யானித்துச் சமாதித்துச் சாக்ஷாத்கரித்துச் சிவசத்திப் பிரபை
தாரகமாயிராது விட்டுப் போதில்,—ஆசைதரு மூலக மெலா
மலகைத்தோரா மென றறிக்சகல வகநிலையேயாகும் - பிரதியக்
தமாயிருக்கும் பிரபஞ்சமனைத்தும் கானலபோற பொய்போல
தோற்று மாயாகார நிராகாரமாய்ப் போகத் திரும்பச் சமாதி
நிலைதானேயாம் —வினையும் - அதுவனநியும்,—ஓசைதரு மஞ்செ
ழுத்தை விதிப்படியுச்சரிக்க - சிவமுதல் நமவீறுகச் சபிக்க,—ஊ
னமெலாமோட - நமப் பதார்த்த பாசம் பறிய மிஞ்சினர்,—
உள்ளத்தே-சுத்தபஞ்சாக்கரத்தில் நமோவெழுத் தரைக்குஞ் சின
மாத்தி ரானமாவிலே,—புகுந்து - முதலெழுத் தரைக்கும் பா
தத்தைப் பதித்து,—அளிப்பன - ஈற்றெழுத் தரைக்குஞ் சிவத்
தை யிணக்குவன.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேலைச் சூத்திரத்தாற் பேறுமுதலியவற்றை யுணர்ந்தா
னுக்கு அப்பேறு பயப்பதாகிய சாதனஞ் செய்யுமாறு வகுத்து
க் கூறுதற் கெழுந்தது ஒன்பதாஞ் சூத்திரம்.

மேற் கூறியவாற்றால் ஏனையிருவகை ஞானங்களாலு மெ
ய்துதற் கரியனாகிய பரம்பரனை அவனது திருவடிஞான மொ
ன்றானே தன்னறிவின்கண்வைத்து நாராய்ந்து தேசமொடு திரு

வடிக்கீழ் நீங்காதே தாங்கப் பெருந்தவழிப் பற்றுச் செய்தற் கேதுவாகிய எத்திறப்பட்ட பிரபஞ்சமும் நின்றுழி நில்லாது பெயருங் கானற்றேரி னியல்பினவாகக் கண்டு கழிப்பவே, அத்திருவடி ஞானம் விளங்கி யந்நிலைகைகூடப் பெறும் அதன் பின்னு மவ்வாறு பாசத்தை யொருவி ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக் கண்ட காட்சி யொரோவழி வாதனைபற்றிச் சலியாமைப் பொருட்டு, அப்பொருள் பயக்குந் திருவஞ்செழுத்தை யவ்விதிப்படி யறிந்து உச்சரிக்க வென்பதாம்

ஈண்டு ஊன மென்றது வாதனாமலத்தை.

நில்லாதே நீங்கிப் போதி னெனவே, அவ்வாறு நிற்றலு மறுவாத மூச்சதா வீண்டு விதிக்கப் பட்டதாயிற்று

ஆகவே இச்செய்யுள் முதனூ லொன்பதாஞ் சூத்திரம் போல மூக்கூற்ற தாயவாறு கண்டு கொள்க

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இந்திரியங்களைக் கொண்டு சிவனை யறியுமதொழிந்து இந்திரியங்களெங்கி யறியவேணு மென்பானை யென்ற சங்கிராந்த வாதியை நோக்கி மேலருளிச்செய்கிறார்

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பராபரியபராபரனை - இந்திரியங்களா லறியும் பாசவறிவாலும் இந்திரியங்களை கூடிநின்றொழித்து அறியாத பசுவறிவாலும் அறிதற்கரிய வெல்லாத்தகக்கு மேலாயிருக்கிற பரமேஸ்வரனை,— பதிஞானத்தாலே நேசமொடு முள்ளத்தே நாடி - அந்தப் பதிஞானத்தாலே பதியை விருப்பத்துடனே ஆன்மாவிலே யாராய்ந்தறிந்து அவனுடைய திருவடி நிழலிலே நிற்க முன்சொன்ன நிலையாம்,—

தறிறப்பட்ட பிரவஞ்சமுற,—அலகைத்தேரானென் றறிந்தகல-
நின்றுழி னில்லாதுபெயருங் கானற்றேரி னியல்பினவாகக் கண்டு
கழிப்பவே,—அந்நிலையே யாகும் - அத்திருவடி ஞானம் விளங்
கி யந்நிலை கைகூடப்பெறும் —பின்னுமுள்ளத்தே புகுந்தளிப்ப
னானென்றலாம லூட - அதன்பின்னு மவ்வாறு பாசத்தை யொருவி
ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக் கண்டகாட்சி யொரோவழி
யாதன்பாற்றிச் சலியாமைப் பொருட்டு,—ஓசைதரு மஞ்செழு
த்தை விதிப்படி யுச்சரிக்க - அப்பொருள் பயக்குந் திருவஞ்செ
ழுத்தை யவ்விதிப்படி யறிந்து உச்சரிக்க.

இச்செய்யுள் முதனூல் ஒன்பதாஞ் சூத்திரம்போல முக்கூற்றதாயவாறு கண்டுகொள்க.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேலிருந்த முறையானே தொகுத்தவற்றை வகுத்துச
சத்தப்பிரமவாதியைமறுத் துணர்த்துகிறார்

வேதசாத் திரமிருதி புராணகலைஞானம் விரும்ப
சபை வைகரியா திக்கிறங்கண்மேலா, நாதமுடி வான
வெலாம் பாசஞான நணுகியான மாயினைக்கீழ் நாட்
டாலே, காதம்பின் ஞானபிரம மென்னுஞானங் கருதுப
சு ஞானமிவ னுடலிறக்கட்டுண, டோதியுணர்ந் தொன
றொன்று வுணர்ந்திடலாற் பசுவா மொன்றாகச் சிவனி
யல்பி னுணர்ந்திடுவன்காணே. (உ)

(இ-ள்) வேதசா சுத்தமாயா சன்னியமாகிய வைகரியிற
த்திரமிருதி ரேணறிய நாலு வேதமுந் தாகக முதலிய
புராணகலை வாறு சாஸ்திரமு மட்டாதச புராணமும

ஒன்றுகச் சிவ அந்தச் சிவனுக்கு மலமில்லாமையாலும் ச
வியல்பி னுணர்ந் தவனுணருதலாலு மிந்தப்பிரபஞ்சத்திலுண
டுவன காணே டானவுயிர்களாக்கள் செய்த வினைப்பலத்தை
யொருகாலத்திலேதானே யறிந் துள்ளபடியே பார்த்தைக் கொ
டுக்கை பதிஞானமேயாது பிரகாசத்தையுடைப் பெறுவார்களா ஞான
நிருட்டியார் காண்பார்கள் எ-று.

ஏகாரப் பிறந்தசை
சிவன் எழுவாய்
உணர்ந்திடுவன பயனிலை
இதற்குச் சிந்திப்பதும நிசுவாசத்துமறிக
போர் பதிஞான முணர்த்துதுகையா லானவிக்காவ்கை (உ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் பாச பசு பதி ஞானங்களினுடைய வியல்பு கூறுகின்
றார்.

வேத சாஸ்திர மிருதி புராணங்களை விருப்பசமைய வைகரிய
தந்திரங்களை மேலான காகமுடி யான வெல்லாஞானமும் பாச
ஞானம்-வேதசாஸ்திர மிருதி புராணங்களை விரும் பசமைய வைக
ரியாகிதந்திரங்களை மேலா காகமுடியான வுண்டானவையிற்று
களினாலே யுதிக்கும ஞானமெல்லாம பாசஞானம அதென
னவில்?—

நனுகி யானமா விளைகிழந்தாடலாலே-ஆன்மா சிவஞானத்
தைப் பொருந்தி யிவையிற்றுகளை யெல்லாந் தனக்கு வியாப
பியமாகக் காணுகையாலே—

நானபிரம மென்னுஞானம - பாசத்தைத் தீண்டி பதிஞான
த்திருலே ஆன்ம தரிசனப்பட மிள்ளவில் பதிஞானத்திரு

மந்திரங்களும், சிவதத்துவ மந்தமான தத்துவங்களும், சத்துவ முதலியவற்றின் விருத்திகளும், பாச ஞானமென்றும், நான் பிரமமென்பது முதலிய ஞானம் பசு ஞானமென்றும் படிக்கின்றார்.

இவை நணுகியானமாகக்கிழென மாறுக அந்தப் பசுவானவன் —சிவனியல்பின - சிவத்துவம் பெற்ற காலத்தில் பதியாய்,—ஒன்றாக - உள்ளபடி யொருமிக்க எல்லாப் பொருள்களையும்,—உணர்த்திடுவன் காணே - அறிவனன்றோ' சிவனோடொன்றாக வியல்பினுணர்த்திடுவனென்னு முரைக்கினுமாம்

மறைய வெளிப்பொருள்

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

மேற்கூறிப்போந்த மூவகைஞானங்களுட் பாசஞானமாவது நால்வகை வாக்கின்பகுதிய வாகிய வேதமுதலிய சொற்றப் பிரபஞ்சமும் நிலமுதல் சூக்குமீறாகிய பொருட் பிரபஞ்சமுமென்னு மிவைபற்றி நிகழும் பேதாபேதஞான மனைத்து மாமெனவும், ஏனைப்பசு ஞானமாவது இவற்றைப் பொருந்திய வாணமா இவையனைத்துந் தனக்கு வியாப்பியமென்றறிந்து நீங்கித் தானவற்றிற்கு மேற்படுதலான அங்ஙனந்தற்பற்றி நிகழுவதோர் செருக்கால் அநாதி முத்தனைப் போல் முத்தனாகிய யானும் பயவாறு பிரமமாவேனெனச் சடுதியின் மதிக்க வருவதோர் சிவ சமவாத ஞானமெனவு முணர்க வென்பதாம்.

ஞான வேற்றுமை தெரித்துக் கூறியவாறு.

அற்றேல், அறிந்து நீங்குதலின் வேற்றுமையின்மையாற் சமப்பிரமமொன்றற்றிழுக்கெனின் அஃதொன்று மாசங்கை நீக்குதற் பொருட்டு அநாதி முத்தரோடு ஆதி முத்தனிடையுந்து

நீங்குதலின் வேற்றுமை பெரிதாதல் காட்டுவார், இவனுடலிற் கட்டுண்டோதியனாந் தோன்றென்று வுணர்ந் திடலாற் பசுவா மொன்றுக்கச் சிவனியல்பி னுணர்ந் திடுவன் காணென்றார்.

பசுத்துவ நீங்கிய வழியு மவ்வாறு மதித்தல் பசுத்துவ வாதனை பற்றியாகலான் அது பசுஞானமேயா மென்பது.

நானபிரம மென்னு ஞானம் ஏகான்ம வாதம்பற்றி நிகழ் ஞான மெனினுமாம்.

நாடலா லெனவும் உணர்ந்திடலா லெனவும் உணர்ந்திடுவ னெனவுங் காரிடத்தைக் காரணமாக வுபசரித்தார்.

நாதமுடி வானவெல்லா மென்றது மது.

நணுகிய வென்னும் பெயரெச்சத் தகரம் விகாரத்தாற் றொக்கது, „தகுவரியனபு" என்றாற் போல.

ஒன்றுக்கச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே என்றதனாற் பதிஞானத் தியல்பு இது வென்பதூஉம் பெறப்பட்டது.

அஃதேல் ஞானமாக வைகரியாதித் திறங்க ளெல்லாம் பாச ஞானமெனக் கழிப்பின், வைகரியாதித் திறத்துட்பட்ட ஞான நூலை யோத லோதுவித்தன முதலியன ஞான பூசையென மேற்கூறியது போலியாய் முடியும் போலுமெனின், முடியாது; பதிஞானம் விளக்குதற்கு ஏதுவா முகத்தாற் பயன்படு தலுடைமையின்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இப்படிச் சொல்லப்பட்ட பாசஞானம் பசுஞானம் பதி ஞானமென்னு மூன்றினது முறைமையு மப்படியென்ற மா ணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

வேதசாத்திரமிருதி புராணகலைஞானம் விருப்பசபை வைகரியாதிக்கிரியைகள் மேலா நாதமுடிவானவெல்லாம் பாசஞானமா—ருக்குவேதங்களும் பலசாஸ்திரங்களும் மிருதி புராணங்களும் பலகலை ஞானங்களும் விரும்பத்தக்க வசனையும் வைகரி முதலாக நாலுவாக்குகளும் எல்லாத்துக்கும் மேலான நாதமீறாக வுண்டாக்கப்பட்ட வினைவெல்லாம் பாசஞானமாம் இவையிரண்டையெல்லாம் பாசஞானமென்று சொல்லவேண்டியது,— நனுங்கியான மாவினைகிழ நாடலாலே—ஆணமா வினையிரண்டைப் பொருந்தி அசுத்த மாயையிலுண்டாகிய திருவித காரணங்களினாலே மாறுபாந்து அறிகையினாலே,—காதலினால் நானேபிரம மெனனுஞானங்கருத்துவ ஞானமாகும் - எல்லா தத்துவங்களுங் கழன்றவிடத்து அசைவின மிருதியினாலே நானே கர்த்தாவென்று சொல்லப்படு மறிவு சுட்டறியும் பசுஞானமாகும் அதெங்ஙனேயெனில் —இவனுடலிற்கட்டுண்டே போதியுணர்ந்த தொன்றொன்றாவுணர்ந்திடலாற் பசுவாம் - இந்த வான்மா கன்மத்துக்கீடாக வெவ்வொரு தேகங்களிலே கட்டுப்பட்டு ஒன்றை யறியுமிடத்து ஒருகாலே சிலவையிரண்டைக் கறந்திருக்கும் விஷயங்களையறியுமத்தத்த வெவ்வேறிந்திரியங்களினாலே ஒவ்வொரு விஷயங்களையறிந்து நிற்கையால் இவனைப் பசுவென்று சொல்லப்படும்,— ஒன்றைச்சிவனியல்பி னுணர்ந்திடவன் காணே - இப்படியன்றி பேபரமேசுவரன் தன்னுடைய ஞானத்தினாலே சர்வத்தையு மேககாலத்திலே ஒருவரறியாமல் தனக்குள்ள வியல்பாகத் தானே யறிந்துநிற்பனென் றறிவாயாக.

இதனாற் சொல்லியது, வேதசாஸ்திர முதலானவையெல்லாம் ஆன்மபோதத்தினா லறியப்படுகையினால் பாசஞானமென்றும் கருவிகளெல்லாங் கழன்றவிடத்து நானே கர்த்தாவென்று மறிவு ஒரு சரீரத்திலே கூடிநின்று ஒவ்வொன்றாக வறிகையி

ணர்ந்த வுணர்ந்தலானும் ஒவ்வொரு இந்திரியங்களினு லொவ்
வொரு விடயங்களை யுணர்தலானும்,—பசுவாம்—ஏகதேச அறி
வையுடைய பசுவெனப்படும். பசுத்துவ நீங்கிய வழிப் புமவ்வாறு
பதித்தல பசுத்துவவாதனையே பற்றி யாதலானது பசுஞான
மேயாம்,—சிவன்—பதிஞானமாவது,—இம்மூன்றுஞ் சூக்கும வுண
ர்த்திவெனக்காணே,—ஒருவனுணர்ந்தவுணர்த்தலிற்றித் தானேமு
முழுவதுமறிந்தான் சத்தியும் போற்றியெனப்படுகை யுணர்கவெனப்பதாம்

## மறைஞானதேசிகர் உரை.

மேற் பாடாணவாதி நீர் பதிஞானத்தினாலே பதி தரிசனப்
படுவது முத்தியென்றீர், அஃதன்றுகாண் ஞானஞ் சூனி
யம் பிறந்திருக்கிறதே முத்தியென்ன, அவனை மறுத் துரை
த்ததினமூரா.

கரணங்கள் கெடவிருக்கை முத்தியாமென்னிற் க
தியாகுஞ் சினைமுட்டை கருமாதக்கிளாயிர்கள், மரணங்
கொண்டிடவுறங்கி மயங்கிமூர்ச்சிக்க வாயுத்தம் பனைப்
ணை வல்விடத்தைப்படையச் சரணங்கள் புகுந்திலபோ
ற றினைப்படையுஞ் சமாதி தவிராது மலமுந்துவும பசுஞா
னமாகு, மரணங்கள் ஒளித்தவன்றனடியையடைவிற் றங்க
ங் கயிந்திடா செறிந்த துக்களகற்றிடவே. (௯)

(இ-ள்) கரணங்கள் கெடவிருக்கை முத்தியாமெனனில் — கருவி கரணங்கள் நீவியாமற் றுக்கறவிருப்பதுதான் முத்தியென்று நீ சொல்லில்?

சுத்தியாகுஞ் சிலைமுடைக் கருமாதி துயிர்கள்

அப்பொழுது மீனிற்றோன்றிய சிலையு மண்டத்திற் றோன்றிய வுயிர்களும் உத்பீஜத்திற்றோன்றிய பெரிய மரங்களும் இவையெல்லாத்தினு மிருக்கு மான்மாக்க ளெல்லா மோக்ஷமடையவேண்டும் இஃதன்றி,

மரணங்கொண்டு டவுறங்க மயங்கி மூர்ச்சிக் கவாயுத்தம்பனை பண்ணவல்லி டத்தையடைய

இப்பாகையாற் றேகம் விட்டவர்களும் நித்திரைகொண்டு கிடந்தவர்களும் சன்னி வாத முதலியவற்றால் மயக்கம் வந்து கிடந்தவர்களும் மரமுதலியவற்றி னின்று விழுந்து மூர்ச்சித்துக் கிடந்தவர்களும் யோகசாமார்த்தியத்தாலே பிராணவாயுவைத் தம்பித்துக்கொண் டிருந்தவர்களும் பாம்பு முதலான விஷமேலீட்டினாலே யறிவின்றிக் கிடந்தவர்களு மாகிய இவர்களெல்லார்க்குங் கரணங்கள் ஜீவியாதிருக்கையால், இவர்களெல்லாரு முத்தியை யடையக் கண்டிலங்காண் ஆதலாலப் படியன்று

சரணங்களபு குநிழல்போற் றலையடையுஞ் சமாதி

ஒரு நாழிகைக் கெண்பத்தொரு அடியா யிருக்கிற நிழல் பொழுதேறிக் காலஞ் செல்லச் செல்லக் குறைந்து குறைந்து வந்து மத்தியான காலத்திற் றான்வைத்த அடியிலே நிழலடங்கி னாற்போலக் கருவிகரணங்கள் ஓய்ந்து நிற்கிற வான்மஞானத்தைப் பொருந்தியவற்றி னுண்மைகளை யுணராது அவ்வழியினகன்று பிரிந்துபோந்து தன்னுண்மையினகண் ணடங்கித் தானாயிருத்தலே முத்தி யாகுமென்று நீ சொல்லவில்லை?

தவிராத மல *

நீயிப்படிச் சொல்லுகிற தெல்லாம் பசு மிதவும் பசுஞான ஞான மாயவிடமாதலா லஃதன்றி யாணவ

ருந்தின வாணவமாயை காமியங்களை நீக்குவன இவ்வாறு நீக்கிக்கொள்ளுங்கோ ளென்றிதன்பொருள்

ஏகாரமிரண்டுமெதிர்மறை

§ காயபாசயம், சிசுவிருக்கும் பை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அந்தக்கரண விருத்தி சமூல விநாசத்தியே சாமரஸ்யம் முத்தியுந் தற்பொருளறிவு பிறபொருளறிவு முச்சூழ்க்கும் ஸவிவேகஞ் சிவயோகத்துதி வியத்தி வேண்டியதில்லையெனும் பாஷாணவாதி முதலோர் மதம் பாஷித்தது தூஷிக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அஞ்ஞானம் நானபிரமமென நிகழுஞானமேயன்றி யானமா விலைவிழுநாடி நீயெகுதன மாத்திரையே முத்தியாதலையுமென வதற்கு முன்னாக நிகழும் பாடாணவாத ஞானமுமா, சேய மைகட்டசென்ற வொருவனிழல் உச்சிப்போதினகணடங்கு ஞ சேறலொழிந்து அவனடியுளவாக தொடங்கினாற்போலக்கரணங்களிற் சென்ற தன்னறிவு பக்குவம வந்தழி யங்கனஞ் சேறலொழிந்து தனமாட்டேவக் தொன்றி நிராதாரமாய நிற்குமதுவே முத்தியாதலையுமெனப் பாடாணவாத ஞானத்தின பின்னாக நிகழும் பேதவாத ஞானமுமென்னு மிவையுட் பசுஞானம். இவ்வாறு நிகழும் பசுஞானங்களுக்கு கேதுவாகிய பசு

த்துவ வாக்கை இவற்றைக் கைவிட்டுச் சிவஞானத்தாற் சிவனை
யுந் தானையு மறியப் பெற்றாராகச் சென்றி நீங்காதென்பதாம்.

இதுவும் உம்மை இறந்தது தழீஇயிற்று.

கதியாகுமென்றது செய்யவெனனும் வாய்பாட்டு வினையெ
ச்சங்களோடு தனித்தனி சென்றியையும்.

சினைமுட்டை கருமாத்தி னுயிர்களை மருவவென்றுரைக்க
மருவவென்பது சொல்லெச்சம்.

முத்தியா மென்னி லென்பதனைத் தனையடையுஞ் சமாதி
யென்பதனோடுங் கூட்டுக.

ஞாயிற்றைக் காணப் பெறுகாசக்கு இருணீங்காதவாறு
போலத் தனையடையுஞ் சமாதி முத்தியென்பார் சிவனையறிய
ப் பெறுமையினவர்க்கு மலந் தவிராதாயிற்றென்பது.

கதியாகுமெனவுந் தவிராதாமலமெனவும் ஈண்டுக் கூறி
யது, மேலைச் செய்யுளின் உணர்க்கிடலாற் பசுவா மொன்றுக
ச் சிவனியல்பி னுணாநிற்கவெனக்குறு போல ஆசங்கை நீக்கி
அவை பசுஞான மாதலை வலியுறுத்தற் பொருட்டு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

கருவிகளெல்லா நீங்கி ஆன்மா வொன்று மறியாமல் பா
டாணம்போலக் கிடக்குமதுவே முத்தியென்ற பாடாண வாதி
யை நோக்கி யருளிச்செய்கிறார்.

கரணங்கள் கெட்டிருக்கை முத்தியாமென்னில் - அந்தக்
கரணங்கள் கெட்டுப்போய் ஒன்று மறியாமலிருக்கிறதே மோ
க்ஷமென்று சொல்லில்?—கதியாகுஞ் சினைமுட்டை கருமாத்தி
னுயிர்கள் - சினையிலும் முட்டையிலும் பெரியமரத்திலு முள்ள

பிராணிகளுக்கெல்லாம் மோக்ஷமுண்டாகவேணும் இதுவன்றி
யும்,—மரணங்கொண்டிட - ஆன்மா தேகத்தை விட்டபொழு
தும்,—உறங்க - நித்திரைகொண்ட வவத்தத்தும்,—மயங்கிமூ
ர்ச்சிக்க-மிகுந்த மயக்கத்தினாலே மூர்ச்சை வந்தவிடத்தும்,—
வாயுத்தம்பனம்பண்ண - பிராணவாயு வியங்காமல் தம்பித்தவி
டத்தும்,—வல்விட்டத்தையடைய - தீர்த்தக்கரசிய வலியவிட்ட
கையைப் பொருந்தினவிடத்து முத்தியுண்டாகவேண்டும் அவ்வி
டங்களில் முத்தியில்லாமலிருக்கையால்,—சரணங்கள் புத்தி
யுறப்போற்றினைப்படையுஞ் சமாதி - மதியான காலத்தில் அதி
கருணா அடங்கின நிழல்போல் ஆன்மா தன்னைப் பொருளொன்
றறிகிறவிடத்திலும்,—தவிராதமலம் - ஆணவமலம் விட்டுநீங்
காது,—இதுவும் பசுஞானமாகும் - இது பசுஞானம் முத்தி
யைப் பெறுகிறபடி யெப்படியென்னில் ;—அரணங்க ளெரித்
தவன்றனடியை யறிவிறந்தக் கறிந்திடா செறிந்தத்துக ளகற்றி
டா - திரிபுரத்தகனம் பண்ணின பரமேசுவரனுடைய ஸ்ரீபாத
ங்களைத் தற்போதத்தை விட்டு நின்றவிடத்திலே ஆசாரியனு
லே அந்த வுண்மையைத் தரிசித்து அந்தத் தரிசித்த ஞானப்
பிரகாசத்தினலே அநாதியே சம்பந்தித்துக்கொண்டு நிற்கிற
மலமாயா கன்மங்களினுண்டாகிய குற்றங்களைப் போக்கி

"செறிந்தத்துக ளகற்றிடா" என்றது ‘க்ஷேமச்சொல்.
‘கரணங்கள் கெட்டிருக்கைமுத்தி’ என்ற பாடாணவாதியைப்
மறுத்தற்குப் பிரமாணஞ் சங்கற்பநிராகரணம். காறுபாவ
மரணங்கருறா - மெய்யந்தவாமுத்தி சேர்ந்தவரன்றே - யனை
யகதிக்கோர முனைவருமவேண்டா - தனித்துருதுயர மெனுமிந்தி
டமே என்னுமதனுற் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது, கரணங்க ளொடுங்கினவிடமே மு
த்தியென்ற பாடாணவாதியை நிராகரிக்க கரணங்க ளொடுங்

கினவிட முத்தியெனில்? சினைமுதல வல்விட்டதைப் பொரு
ந்தினவாக வீருக்கச் சொல்லப்பட்டவை யெல்லாத்துக்கு மு
த்தியுண்டாக வேணுமென்றும் அது இல்லாதபடியாலே கரண
ங்கள் நீங்கினவிட முத்தியாகாதென்றும் சிவனுடைய ஞான
த்துடனேகூடி ஆன்மபோகஞ் சீவியாம லேகத் ஞானத்தாலே
சிவனுடைய திருவடியைப் பொருந்தினுலொழிந்து மலமு நீங்
காது முத்தியு முண்டாகா தென்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

கரணங்கள் கெட்டிருக்கை முத்தியாமெனில் - அகங்
ஙம நான பிரமமென நிகழு ஞானமே யனாதியான மாவிகை
கிழநாடி நீங்குதன மாத்திரையே முத்தியாமெனில்,—சின
முட்டை கருமாத்தி லுயிர்களமருவ - சினையிலு முட்டையிலு
ங் கருப்பாசயத்தினு மாத்தினு முயிர்கள் பொருந்த,—சதிபாகு
ம-முத்தியடைதல் வேண்டும் அங்ஙன மின்மையின் இங்ஙன
கூறும் பாடாணவாத ஞானமும்,—சரணங்கள் புகுநிழல் போ
ற றனையடையுஞ் சமாதி முத்தியெனில் - சேய்மைக்கட் சென
ற வொருவனிழ லுச்சிப்போதினக் கணங்களுஞ் சேறலொழிந்
வ னடியிலங்க தொடங்கினாற்போல கரணங்களிற் சென்றா க
னறிவு பகருவம வந்தழி யங்ஙனஞ் சேறலொழிந்து தனமா
ட்டுங் தோன்றி நிராதாரமாய் நிற்குமதுவே முத்தியெனில்?—
மரணங்கொண்டிட வுரங்க மயங்கிமூர்ச்சிக்க வாயுத்தம பனைப
ணை வலவிட்டதையடைய - மரணமாகிய பந்தாமவத்தை ய
டையுமிடத்து முறக்கத்து மயக்கமுறாறு மூர்ச்சையுறுமிடத்தும
பிராண வாயுவியங்காமற றம்பித்த விடத்தும கொடியவிடத
தைப பொருந்தினவிடத்தும்,—இதுவுங் கதியாகும-இதுவுமுத

றியாதல் வேண்டும். அங்ஙன மின்மையி னதுவே முத்தியாதலை யுமென்க கூறும் பேதவாத ஞானமு மென்னு மிவையும்,—பசுஞானமாகும் - பசுஞானமாம்,—அரனருக ளொளித்தவன்ற னடியை யறிவிரக்கங் கறிந்திடா - சிவஞானத்தா ற் சிவனையுந் தாளையு மறிவிரக்க கறியப் பெறுங்கள்,—செறிந்ததுக ளகற் றிடீர் - உமமைப் பந்தித்த மலத்தினின்று நீங்குமின்,—மலந் தவிராது - மேற்கூறிய பசுஞானங்கட் கேதுவாகிய பசுத்துவ வாதனை யிச்சிவஞான முடையார்கட் கனறி நீங்கா தென்ப தாம்.

## மறைஞானதேசிகர் உரை

சிவனை யக்காரவாதி யந்தக்கரணங்களா லறியலாயிருக் கச் சிவஞானத்தா லறியவேண்டுமென்ப தென்னெ னறுவினவ, அவனைக்குறித்த துணாத்துகின்றா

சிவனையவன் றிருவடிஞா னத்தாற்சேரச் செப்பு வது செயல்வாக்குச் சிந்தையெல்லா, மவனையலு கா வென்று மாதலானு மவனடியவ வொளிஞான மாத லாறு, மிவனுமியான் றுலக்குதிர மிறைச்சிமேதை யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக்கொத்தோ, பவ மகல வெனையறியே னெனுமையமகல வடிகாட்டி யா னமாவைக் காட்டலானும். (சு)

(இ-ள) சிவனைய வன் றிருவ டி ஞானத் தாற் சேரச்செப் புவது — ஆன்மாக்க ளந்தச் சிவனைக் கூடுமிடத் தவனது திருவடி ஞானமாகிய சிவஞானத் தாலே கூடியிருக்க வென்று வேதாகமங்க ள் கூறியிருப்ப, மனமுதலியவற்றா லடைய லாமென்று சொல்லுவ தென்னெனில் ?

செயல்வாக்கு — அவன் வாக்கு மனதிற் ககலா லவனை
ச் சிந்தையெல் — மின்றி வாக்குக் காயங்களா லடையப்படா
லா மவனையனு — ன காண
காவென்றும

‘மறையினா லயனான்மாலான் மனத்தினால் வாக்கான ம
ற்றும், குறைவிலா அளவினாலுங் கூறொணாதாகி நின்ற, விறைய
னா’ என்று முன்னாகக் கூறினாகையாலும,

ஆதலாலும — இத்தன்மையை யுடையனாதலாலும,
அவனடியவ — அவனுடைய திருவடி விளங்கா நின்ற
வொளி ஞானமா — ஞானப்பிரகாசமா யிருக்கையாலும
தலாலும

இவனுமியான — இவனான்மா வேகமென்று புத்திபண்ணு
றவக்குதிர மிறை — ஞ சத்தாதிகளோ, இந்திரியங்கள சமு
சசிமேதை யென — கங்களோ, அல்லவே!
புமசசை சுக்கில
மோ விந்திரியக
கொத்தோ

பவமகல வெ — னக்குண்டாகிய ஜனனமரணங்களை வி
னையறியே னெனு — ட்டுக் கரையேற வேண்டுமென்னு மறிவுண
மையமகல — டாகையின பொருட் டைதமயக்கந் தீர்த்து
நிற்க

அடிகாட்டி — இப்படி யான்மாவுக்குத் தனது திருவடி
யான்மாவைக — யாகிய ஞானத்தைப் பிரகாசிப்பித் தவனை
காட்டலாலும — யுணர்த்தி நிற்கையாலும். எ-று.

செயலென்பது காயத்தின் றொழில.
ஓகார மெதிர்மறை
இதற்குக் காரணத்தைக் காமிகத் தமறிக. (௪)

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.



சிவனையவன் றிருவடிஞானத்தாற் காணச்செப்புவது செயல்வாக்குச் சிந்தையெல்லா மவனை யணுகாவென்றாதலானும் - சிவனை யவனுக்குப் பிறிவற்ற பரஞானத்தாலே காணச் சொல்லுவதேனெனனில்? இந்திரிய வியாபாரஞானமும் வாச்ய வாசகஞானமும் புத்திவிருத்திஞானமுஞ் சிவனையெக்காலத்துங் கிட்டமாட்டா தாகையாலும்,—அவனடி யவ்வொளி ஞானமாதலானும் - அந்தச்சிவனுடைய ஸ்வரூபமானது பிரசித்தியான ஸ்வபரப்பிரகாச ஞானமாகையாலும்,—இவனுமிடானறு வக்குதிர மிறைச்சிமேதை யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக்கொத்தோ வம்மகல வெனையறியே னென்று மைய மகல வடிகாட்டி யான்மாவைக்காட்டலானும் - இந்த ஆன்மாவும் யானென்னெபுமுதலாகிய வுறுப்புகள் கூடிய தேகமோ இந்திரியக் கூட்டமோ வென்னுங் குற்றமகல வென்னுடைய ஸ்வரூபத்தை அறிகிறேனில்லை யென்னும் சந்தேகந் தீரும்படிக்குச் சிவன் ஞான ஞானசத்தியை யான்மாவினிடத்திலே பிரகாசிப்பித்த அதனால் ஆன்ம ஸ்வரூபத்தையுந் தரிசிப்பிப்ப ராகையாலுஞ் சிவனைச் சிவஞானத்தினாலேயே யணையச் சொன்னதென் றிதன் பொருள்

## ஞானப்பிரகாசருரை வருமாறு.



சாக்ஷாத் சிவசத்தி விளக்கு விளக்கிய சிற்சத்திக் குறிப்பதிஞானத்தாற் சிவான்ம சொரூபந்தெரியு மென்று செப்புகின்றார்.

வெளிப்பொருள்.

அடுத்தடுத்துச் சொல்லியது சொல்லிற் கூறியது கூறலென்னுங் குற்றம் வாராதோ? வாராது, சமாதிதிடம் பிறக்கும்படி சாற்றியதாகலால்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

எண்டோட் கூறிப்போந்த ஞானங்களுள் முப்பொறி முதலியனபற்றி யேகதேசமாய் நிகழுஞ் சுட்டுணர்வாகிய பாசஞானத்திறமும், தற்சொரூபமே யறியமாட்டாது பந்தப்பட்டு நையுற்று நிற்பதாகிய பசுஞானத் திறமும், தானே சுப்பிரகாசமும் பரப்பிரகாசமுமாய் எல்லாப் பொருளையு மிகந்து விளங்குவதாகிய பதிஞானம்போல விளங்குமாற்றற் செல்லாமையால், அப்பெற்றித்தாகிய பதிஞானமொன்றானே பதிப்பொருளை யங்ஙன மறியற்பாற்றென மேற்கொண்டதென்பதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

சிவனுடைய ஞானத்தாலே சிவனை யறியவேணு மென்றதென்னம்பு என்று சங்கராநந்தவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

சிவனையவன் றிருவடி ஞானத்தாற் சேரச்செப்புவது - பரமேசுவரனை யவனுடைய சீபாதமாகிய ஞானத்தாலே கூடவேணுமென்று சொன்னது அதெப்படியென்று நீ கேட்கில்?—செயலவாகக்குச் சிந்தையெல்லா மவனையுணராவென்று மாதலானு மவனடியவ வொளிஞான மாதலானும் - அன்வயம், அவனுடைய சீபாதமாகிய வந்தஞானம் விட்டுவிளங்காநின்ற ஞானமாகையாலு மனோவாக்குக் காயங்களா லவனைக் கிட்டவுஞ் செய்

வும் நினைக்கவும் ஒண்ணாதாகையாலும், இதுவன்றியும் ஆன்மா தன்னையும் இந்திரியங்களா லறியப்படாது அதெப்படி யெனில்?—இவனுமியான் றுவக்குதிர மிறைச்சிமேதை யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக்கொத்தோ - ஆன்மாவானது தோலோ விரத்தமோ மாமிசமோ நிணமோ யெலும்போ மூளையோ சுக்கிலமோ இந்திரியக் கூட்டமோவென்று,—பலபல வென்னை யறியேனென்று மையமகல - ஜனனங்க ளெல்லாம் விட்டு நீங்கும்படி என்னை யறிகின்றிலேனென்கிற சந்தேகந்தீர,—அடிகாட்டி யான்மாவைக் காட்டலாலும் - தன்னது ஞானத்தினாலே தன்னுடைய திருவடியுந் தரிசிப்பித்து,— ஆன்மாவையுந் தரிசிப்பிக்கையால் பாசஞான மறியாது ஆகையால் பதிஞானமே யெல்லாத்தையு மறியும்.

இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "சதசத்பசு ரூபரசநறை - யெதிரத்தினருளியம்புசவனறியும் - நிறைந்துநீயாய நின்றனையென்று - மறைநகைம புலனுய வாராயென்றுங் - கரணமெல்லாங் கடந்தனையென்று - மரணமையைந் தினைப்புரந்தென்று - முன்னருட்டலைவா பன்னினொன்வு - மினையடையொழிய வறிகுவதெவ்வா - றென்றநிற்கலிக் கொன்றியவின்பங் கூறுதற்கு மருட்பேறினையன்றே" என்றும், சிவஞானபோதம் ௯-சூ-௧-வெ, "நாடியோவென்போ நரம்புசீக் கோழையோ, தேடியென்னையறியேன் றேர்ந்தவகை,— நாடியரன், றன்னாலே தன்னையுங் கண்டுதமைக் காணு, மென்றுமென வறிவாரின்று" என்னுமதுங் கண்டுகொள்.

இதனாற் சொல்லியது, பாசஞானத்தினாற் பாசத்தை யறியுமதொழிந்து, பதியை யறியாதென்றும் பதிஞானத்தினாலே பதியை யறிய வேணுமென்ற முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——0——

செயல்வாக்குச் சிந்தையெல்லாம் - ஈண்டுக் கூறியபோகங் ஞானங்களுக்கு மனவாக்குக் காயமாகிய முப்பொருள் முதலியன பற்றி,—அதனையென்று மணுகாவாதலானும்-அவனை யென்று ஞானமு மணுகாமையா னேகதேசமாய்நிகழுஞ் சுட்டுணர்வாகிய பாசஞானத்திற்கும்,—இவனும-இவ்வான்மாவும்,—யானறு வக்குதிர மிறைச்சி மேதையென்பு மச்சை சுக்கிலமோ விந்திரியங் கொத்தோ- யான சூலிரத்த மிறைச்சி மேதையென்பு மச்சை சுக்கில மிந்திரியக் கூட்ட முதலியனவாகப் பலதலைப்பட்டு,—அவமகல வென்னையறியே னென்னு மையமகல - குற்றமகலத் தற்சொருபமே யறிமாட்டாமையுற்று நிற்பதாகிய பசுஞானத்திற்கும்,—அவனடி யவ்வொளி ஞானமாதலானும - முதல்வன ஞானசத்திதானே தற்பிரகாசமாய் நின்றும,—அடிகாட்டி யான்மாவைக் காட்டலானும - தன்னையு மான்மாவையும விளக்கி பரப்பிரகாசமுமாய்நின் றெல்லாப் பொருளையு மின்று விளக்குவதாகிய பதிஞானம்போல விளக்கு மாற்றல் செல்லாமையால் அவன்திருவடி,—ஞானத்தால-அப்பெற்றித்தாகிய பதி ஞானமொன்றனே,—சிவனைச்சேரச்செப்புவது - பதிப்பொருளை யவ்வண மறியற்பாற்றென மேற்கொண்ட தெனபதாம்.

சிவஞானத்தா லன்றி யறியப்படாமைக் கேது காட்டியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேல் சிவனைப் பாசஞான முதலிய வற்றா லறியப்படா
தென்பதூஉ மவ்வவைகளைக் கண்டிருப்ப னெ
ன்பதூஉ முணர்த்தினரா

கண்டுங்கண் டனைக்காணு கரணங்காணு கரணங்க
டமைக்காணு வுயிருங்காணு, வுண்டியம ருயிர்தானுந் த
னைக்காணா துயிர்க்குயிரா மொருவனையுங் காணாதாகு
ம், கண்டசிவன் றனைக்காட்டி யுயிருங்காட்டிக் கண்ணுக்
கரணங்கள் காணுமனிறபன,கொண்டரனை யுளத்திற்க
ண் டிகூடிற்பாசங் கூடாது கூடிடினுங் குயிப்படியினி
ன்றதே (௫)

(இ-ள்) கண்டுங் கண்டனைக் காணு — விஸ்வத்திற பதார்த்தங்களுக்கெல்லாங் காட்டாய் நிற்கிற கண்ணானது தன்னையு மறியமாட்டாது,

கரணங்காணு — அதுவுந் தனக்குட் கரணமாய்நின்று ஜீவிப்பிக்கிற கரணங்களையு மீதென்று கண்ணான தறியமாட்டா

கரணங்க டமைக்காணு — அவைகளுக்குக் காட்டாய்நிற்கிற கரணங்களு நாமே யெல்லாத்துக்குங் காட்டாய் நிற்கிறோ மென்னுந் தன்மையு மறியமாட்டாது

உயிருங்காணு — அந்தக் கரணங்களுந் தனக்கு மேலுமாய்ப் பிராணனுமா யிருக்கிற வான்மாவையு மறியமாட்டா.

உண்டியமருயிர்தானுந் தனைக்காணு — இந்தக் கருவி கரணாதிகளைக்கொண்டே னாவாகிய சகத்துக்க போகங்களைப் புசிக்கிறோ மென்னு முணர்வையு மான்மாவு மறியமாட்டான.

உயிர்க்குயிரா மொருவனையுங் — அந்த வான்மாவுந் தனக்கு மேலுமா யுயிர்க்குயிருமாய் நின்றுணர்த்துங் கர்த்தாவை

காருந்தாரும — யு முணரமாட்டார். ஆதலா லிவைக ளிப்படி பொன்றாக கொன்று நானவிருத்தியு மதிக விருத்தியுமாயக் காரியப்படு முறைமை யறிந்து,

கணட சிவன றனைககாட்டி — இபபடி யெல்லாத்துககுமேலா யெல்லா த்தையும வியாபிததிருககிற சிவன பககுவா ன்மாககளுககுத தறசுருபததைக காட்டி,

உயிருங்காட்டி — ஆன்மரூபத்தையுந் தரிசிப்பித்து,

கணணுக்க கரணங்கள காணுமின்றபன — அந்தச சிவன கரணஙகளிடத்தினு மனுப பிரவிஷடனாய் வியாபித்து அவைகளாற் றன காணப்படாமலதறகு வேறாய் நிறபன

கொணடானை யுள்ததிறசண்ட டிகூடிற பாசங கூடாது — இபபடிச சிவன வியாபிதது நிறகுமுறைமையை உனவிடததிலே கணடு மயககமிகறபமின்றி யவனுடைய திருவடியை யெபபொழுது நினைநதிருககி லுன்னிடத துண்டாகிய பாசஙகள் விட்டுநீஙகும.

கூடிடினவரு றிப்படியிலிருத தே — அதுவந்து மேற கூடிற்றே யாயினு முனபு போல நிறகி லந்தப பாசஙகள் வருந்தாது ஏ-று

இப்படிச் சொல்லவே சிவ ஞானமாக்களுக் குபதேசிக்கு முறை யுணர்த்தியதாயிற்று

உரை-ஐயந்தினகளை வநதது

இதறகு காலோத்தரம், வாயவ்ய சங்கிதையினு மறிக (௫)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.

—o—

ஆன்மா தன்தஞானத்திலேலே சிவனைக் காணும் சிவனுக் த

னது ஞானத்தினாலே ஆன்மாவைக் காணப்பண்ணினி லிவ்வாறு கூடாதென்னு முறைமையைக் கூறுகின்றது.

கண்டுங்கண் டிலேக்காணுங் கண்ணைங்காணு - ரூபவத் பதார்த்தங்களைக் காணுங் கண்ணானது தன்னையுங்காணாது தனக்கு முதலாகிய அந்தக்கரணங்களையுங் காணாது,—கரணங்கடமைக்காணு வுயிருங்காணு - அறியுந்தன்மையை யுடைய புத்தித்துவ விருத்தியாத்துவங்கள் தம்மையுமறியாது தமக்குக் கர்த்தாவாகிய ஆன்மாவையுமறியாது,—உண்டியம் ருயிர்தானுந் தன்னைக்காணு வுயிர்க்குயிரா மொருவனையுங் காணுதாகும் - விஷயத்தைப் பொருந்திநிற்கிற ஆன்மாவும் பந்தத்திலே தன்னையுந் தனக்குயிரா யின்னை யறறவனுகி நிற்கிற சிவனையுங் காணுது,—கண்டசிவன் றன்னைக்காட்டி யுயிருங்காட்டிக் கண்ணுக்கு கரணங்களைக்காணு நிற்பன - ஆன்மாக்களையுஞ் சர்வ பிரபஞ்சங்களையும் வேறொரு சகாயத்தையு மபேக்ஷியாமல் ஏககாலத்திலே யதாவத்தாகக் கண்டிருக்குஞ் சிவன் றனது ஞானப்பிரகாசத்தினுலே ஆன்மாவுக்குத் தன்னையுங் காட்டி யந்த ஆன்மாவையுங் காட்டித் தானந்த வான்மாவி னிடத்தில அந்நியமா யிருந்து பாசபசு ஞானுக்மயினு யிருப்பன. ஆதலால்,—கொண்டானை யுளத்திற்கொண் டடிகூடின் பாசங் கூடாது கூடிடிலுங் குறித்தடியினிறுதே - அந்த சிவஞானத்தைக் காட்டாக்கொண் டானை யான்மாவிலே வேறறக்கலந்த ஸ்வரூபமேயாகிற பாசநீங்கும் நிஷ்டை—இரித்து கரண வியாபதிடைய பொருந்தின போதத்தைப் பாசவாசனை பொருந்திந் தாமாகிலது நீங்கும்படிக்கு முன்போலச் சிவபாவனையைப் பண்ணிச் சிவத்தினிடத்திலே யுன்னுடைய போதத்தை யழுவற நிறுத்தென றிதன் பொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——0——

மேற்சொல்லிய பதிஞானமே சிவ முதலிய திரிபதார்த்தங் காணுங் கண் கண் முதலிய வற்றிற்குக் கண்ணென்பது, கண்ணுக் குபகாரம் பண்ணுதலாற் கண்ணென் றுபசரிக்கப் பட்டதென்று காண்பிக்கின்றார்.

கரணங்காணு - கரணங்களைக் காணு,—உயிருங்காணு - உயிரையுங் காணு,—கண்ட சிவன் - இவையெல்லாவற்றையும் பிரத்தியக்ஷமாகப் பார்க்குஞ் சிவன்,—தனைக் காட்டி - தனைக் காட்டி - தனக்கியற்கைக் கண்ணாகி உயிர்க்குச் செயற்கைக் கண்ணாகிய தனது சத்தியினூல் உயிர்க்கு இயற்கைக் கண்ணாகிய சிற்சத்தியை விளக்கித் தனது ஸ்வரூபத்தை யுயிர்க்குக் காண்பித்து,—உயிருங் காட்டி - உயிர்க்குயிர்ச் சுவரூபத்தையுங் காண்பித்து,—கண்ணாகி - உயிர்க்கியற்கைக் கண்ணாகிய சிற்சத்தி வியஞ்சகந் தன் சத்தி சமவாய சம்பந்தத்தா லுயிரைக் குறித்துப் பசரிச் செயற்கைக் கண்ணாகி,—காணு - காணுமல்,—அடிகூடல் - சிவசத்திக் கொப்பச் சிற்சத்திக் கண்ணைத் திறந் தொளிய ரப்பித் தியானிக்கில்,—குறித்தடியி னிறுதலே - இரும்பைப் பசம் நீங்கும்படி சிவ சிந்தனை பண்ணிச் செப்பியபடி சிவ சத்தித் தாரகமாகக் காணேனில்.

மற்றைய வெளிய பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——0——

பாசபசு ஞானங்கள் பரப்பிரகாசமாய் நிற்பினுந் தற்பிரகாசமாய் நிற்றல் செல்லாதென்பது கண்மேல்வைத் தறியக் கிடத்தலானும், ஏனைப் பதிஞானத் திற்குத் தற்பிரகாசமாய நிற்

றனுஞ் செல்லுமென்பது தானவ் விரண்டிற்கும் காட்டாய்த் தனக்கொரு காட்டு வேண்டாது நிற்றலைப்பற்றி யறியப்படுதலானும், சிவனை அவன் றிருவடி ஞானத்தாற் சேறலே பொருத்த முடைத்தென்பதாம்.

மேல்தற்குத் தரிசனங் காட்டியவாறு

காணு மென்னும் துவ்வீறு விகாரத்தாற் றொக்கது

கண்டிடு மென்பதனைக் காரணங்க ளென்பதனோடுங் கூட்டுக

கண்டிடுதல் என்பது பரப்பிரகாச மாதன் மேற்று

உண்டி யமாதலுமது

எடுத்துக்காட்டுவமை.

தனைக்காட்டி யுயிருங் காட்டிக் கண்டசிவ னென வியைபும்

காட்டிக் கண்டசிவ னென்றது அனுவாதம்

கண்ணாகி யென்பது கட்டாகி யென்றவாறு சொன்னசிவன் கண்ணு மென்றாற் போல

கரணங்களாற் காணுமல்லன் மூன்றுவது விரித்துரைக்க

கரணங்க ளெனவும் உயிரெனவும் சிவனெனவும் அவ்வப் பொருண்மேல் வைத்து உபசரித்தார்

இரண்டாங் கூற்றுக்குத் தோற்றுவாய் செய்வார், பாசங் கூடாது, கூடினுங் குறித்தடியி னிறுத்தே யென்றார்

இவை நான்கு செய்யுளானும் முதற் சூத்திரப் பொருள் விளக்கப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

அந்த முத்தியில் பதியும் பசுவும் தரிசனப்பட்டதே புண்

டாகில் இந்தப் பேதத்திலும் தரிசனப்பட வேண்டாவோ வெ
ன்ற பாடாண்வாதியை நோக்கி யருளிச்செய்கிறார்

கண்டிங்களை டனைக்காணு - அவயவங்களைக் காண்கிறக்கண்
தன்னைக் காணமாட்டாது,—கரணங்காணு-அந்தவன்றியுட் அந்
தக் கரணங்கள் தாமெல்லா விடயத்துக்கு மறிவாய நிரபினும
தன்னை யறியமாட்டாது,—உயிருங்காணுது - அத்தக்கரணங்க
ளைக் காரிப்படுத்திநிற்கிற பிராணவாயுவுந் தன்னைத் தான் கா
ண மாட்டாது,—உண்டியமருயிர்தானுந் தன்னைக்காணு- கன
மத்துக் கிடாக்கச் சரீரத்தைப் பொருந்தி சுகதுக்கங்களை யனுப
விக்கிற வான்மாவுந் தன்னைத்தான் காணமாட்டாது,—உயிரக
டுபிராமொருவனையுங் காணுதாகும்-தனக்குப் பிராணனுயுநின
றுலாத்துகிற பரமேசுவரனையும் ஆன்மாக் காணமாட்டாது.
ஆனாலந்தச் சிவனை யறியும்படி யெவ்வண்ணம்?—கண்டசிவன் ற
னைக்காட்டியுயிருங்காட்டி-எல்லாத்தையுமறியத்தக்கசிவன் பே
தத்திலிந்த வான்மாவுக்குத் தோன்றாமல் நின்று முத்தியிலத
னையுங்காட்டி யிந்த வான்மாவையுங் காட்டக்,—கண்ணுகிக
ரணங்கள் காணுமல் நிற்பன - சிவன் றன்னைக் காணுகைக்கு
ஆன்மாவுக்குத் திருஷ்டியுமாய்க் கரணங்களா லறியுமிடத்துத்
தோன்றாமலுநிற்பன. அந்தக் கரணங்களாகிய பாசஞானம் நீ
ங்கும்படி யெப்படியென்ற மாணுக்கனை நோக்கி யருளிச்செய்
கிறார்.—கொண்டரனை யுளத்திறகொண் டடிகூடிற பாசங்கூ
டாது - அப்படி வாதனை மேலிட்டால் தனக்குப் பிராணனுய்
நிற்கிற சிவனை யவனுடைய ஞானத்தினாலே தனவிடத்திலே
கண்டு கொண்டு அவனுடைய சீபாதத்தைப் பொருந்தில மயக்
கவிகற்பங்கள் பொருந்தாது,—கூடிடினுங் குறித்தடியினிறக
தே - அந்த மயக்க விகற்பங்கள் கூடித்தாயினும ஞாதிருவென
கிற தன்மை பொயஞானமாய் நிற்கவே முற்பட்ட நிலை கூடும.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், ௯-சூ, ௨-வெ, "காட்டிய கண்ணே தனைக்காணுக் கண்ணுக்குக், காட்டாய வுள்ளத்தைக் கண்காணு—காட்டிய, வுள்ளந் தனைக்காணு வுள்ளத்தின் கண்ணாய, கள்ளந்தா னுள்ளத்திற் காண்" என்னுமதனாற் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, பேதத்தில் மலசம்பந்தமா யிருக்கையால் பதியையும் பசுவையுந் தரிசிக்கப்பட்ட தில்லையென்று முத்தியிலே மலம் நீங்குகையா லவ்விரண்டையுந் தரிசிக்கப்படுமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்ணியதேசிகருரை வருமாறு.

—o—

கண்டிடுங்கண் டனைக்காணு கரணங்காணு - ஒருவிடயத்தைக் காண்கின்ற கண்ணானது தன்னியல்பையுங் காணமாட்டாது, தனக்கு முதலாகிய அந்தக்கரணங்களி னியல்பையுங் காணமாட்டாது,—கண்டிடுங் கரணங்க டமைக்காணு வுயிருங்காணு - அறியுந் தன்மையுடைய புத்திமுதலிய புறக்கரணமும், வித்தியா தத்துவமாகிய அகக்கரணமும், தம்மியல்புங் காணமாட்டா, தமக்கு அவ்விடயத்தைக் காட்டி முதலாய் நிற்குமுயிரையும் அவை காணமாட்டா அவைபோல,—உண்டியமருயிர் தானுந் தன்னைக்காணு வுயிர்க்குயிரா மொருவனையுங் காணுகாகும்-ஒருவிடயங்களைப்பற்றி நிற்கின்ற ஆன்மாவு மவ்வாறே தன்னியல்பையு மறியமாட்டாது, தனக்கு முதலா யுயிராகக் குயிரா யுணர்த்திநிற்கு முதல்வனையுங் காணமாட்டாது ஆகலின்,—தனைக்காட்டி யுயிருங்காட்டிக் கண்டசிவன் - தற்சொரூபத்தையு மான்மசொரூபத்தையும் விளங்கச்செய்து தனக்கொரு காட்டின்றி அறிந்தாங் கறிந்து நிற்குஞ்சிவன்,—கண்ணாகிக் கரண

ங்கள் காணுமென்றபன - காட்டாசித் தனக்கொரு கரணங்கள் வேண்டாது நிற்பனாகலின், —கொண்டாரை யுளத்திற் கண்டு - அச்சிவஞானத்தைக் காட்டாகக்கொண்டு முதல்வனை யவனறி வினிற்காணப்பெற்று, —அடிகூடிற் பாசநுகூடாது - திருவடி யைத் தலைகூடிற் பாசநீங்கும், —கூடிடுங் குறித்தடியினுற் தே-நீங்காதுகலந்திடினுஞ் சிவபாவனையை விடாதுசெய்து சிவ னை யவன் றிருவடி ஞானத்தாற் சேறலேபொருந்த முடைத் தென்பதாம்

இவை நான்கு செய்யுளானும் முற்கூறியபொருள் விளக்கப் பட்டது



கூ - ரு, க-அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேற் சொல்லிய முறையில் நிலைபெறாநிற்கு ஞாதாக்க ளுக்கனுக்கிரகஞ்செய்யு முறைமை யுணர்த்துகிறார்

குறிப்படியி னினறட்ட குணமெட்டுச்சித்தி கோ
கனகன் முதலவாழ்வு குலவுபதமெல்லாம், வெறுத்து
நெறி யறிவகையு மேலொடுகீழுடங்க வெறும்பொ
யென நினைந்திருக்க மேலொடுகீழில்லா, னிறுத்தவ
தோர் குணமில்லான றன்னை யொருவர்க்கு நினைப்பரி
யா னொன்றுமிலான கேடபடவந்துள்ளே, பொறுப
பரிய பேரன்பை யருளிய தன்வழியே புகுந்திடுவ னெ
ஙகுமிலாப போகத்தைப்புரிந்தே. (கூ)

(இ-ள) குறிப்ப ஞானசாரிய னுபதேசித்த முறையினின டியினின்று று,

அட்டகுணம் "தோற்றமனந்த ஞானத்தோடனந்ததரி சனமும், தோற்றமனந்த வீரத்தோடனந்தசுகத்தினுடன், மாற்றிய நாமமின்மை கோத்திர மின்மை யாயுவின்மை, யேற்றிய கோட்டமு யாவில்பலவெனப் போந்திறை யே" என்றார் பாரத்திப்புறமுடையார்.

எட்டுச்சித்தி விருத்தம் அணுவினுண்ணே ஞானுருவுகொள்ள வணிமாவாம் மலாற்றி லகிமாவுகத்தி லிபலங்கியு நதோய வறலுடலகிமாத, இனியபெருவனாயென்மெய் சிறப் புறுகை கரிமா, சிந்தித்தபுலமெல்லையுஞ் சிறப்புறுகை பிராத்தி, பிணவிழியா ராயிரவ ரொடும்புணர்ச்சி பெறுகை பிராகாமியமி சைமாவலியுமடி பேணி, மணமலர்போ லெவராலும் வாஞ்சிக்கப் படுகை வசிவசித்தைவலிபராற றடப்பரியவாழ்வே" என்றொ மத்தகுறவா எவறிக "அட்டமாசித்திமுத லனைத்துள்ளும்பே ருகளும், கட்டமாகத்திட்டும் பரத்திகாணக்கொடா, மட் டிலாமாலையாய வியாபகமாய்நியாகிக, கிட்டலாகாமுத்தியது மற்றிவற்றுறகிடையாதே"

கோகனகனமு தலவாழ்வு குலவு பதமெல்லாம் வெறுத்து — பிரமா முதலாயினோ ரனுபவிக்கும் போகங்களெல்லாவற்றையுஞ் சீயென வெறுத்து.

நெறியறுவகை யுமேலொடு கீழ் டங்க — ஆறத்துவாவினையும் பந்தமெனக் கருதி வெறுத்து

வெறும்பொ யென நினைந்திருக்க — அவைகள் அபரபோகங் கொடுத்தற்கே துவாகையால் அசத்தியமெனக் கருதி ஞானாசாரிய னுபதேசித்த நிட்டையைப் பொருந்தி நிரம்பையேயாகில் அப்பொழுது

மேலொடுகீழ் தானே பூரணனாய்த் தனக்காதிபந்தமு
லலா னிறுத்துவ மில்லாதவனுமாய்ச் சுதந்தரனுமாகலாற் றனக்
கோர் குணமில் ணை வைக்கப்படுவதொன்று வனரூபங்களு
லானறனை மில்லாதவனுமாய்த் தானே சாந்தனுமல்லால
யொருவர்க்கு நி தன்னுண்மையினை யினைப்படியென் றொருவ
னைப்பரிய னொ ராலுமறிதற் கரியனுமாயாதித்தனைப்படித்
னுமிலலான தனக்கொன்றை விரும்பிச் செய்யா தானே
மாக்களுக் குபகாரஞ் செய்யுமாறுபோல இ
வனுந் தனக்கென வோர் கைம்மாறு கருதா தானமாக்களுக்
குபகாரஞ் செய்வனாதலால்.

நேர்படவந்து இச்சிறப்பினை யுடைய சிவ னித்த முத்தா
ளொ பொறுப்ப னமாவை யனுக்கிரகஞ் செய்தற் பொருட்
ரிய பேரன்பைய டாகவந் திவனிடத்திலே தரித்தற்கரிதாகிய
ருளி சிற்சத்தியைப் பிரகாசிப்பித்து
அதனவழியே அந்தச்சிற்சத்தியுடனே கூடியிருக்கிறவாக
புகுந்திடுவனெ னுக்குத் தன்னிடத்துண்டான சுவாநந்தா
வருமிலாப்போ னுபூதியைத் தினைப்பிப்பன் எ-று
கதைப்புரிந்தே.

வெறுத்தெனபதனை யெடுத்தலைத் தீபகமாக்கி யிருபாலுங் கூட்டுக.

* கோகனகன்-சாரணக்குறி.

நினைப்பரியான எழுவாய்

புரிந்திடுவென பயனிலை.

இதற்குச் சிவதருமோத்தரத்தும், சர்வ ஞானோத்தரத்து மறிக. (௯)

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.

—o—

மேல் பிரபஞ்ச வைராக்கியமவிற்ற சிவஞானியே அநுக்கிர கம் பண்ணுவனென்பது கூறுகின்றது

குறித்தஷ்டியினிற்றட்ட குணமெட்டுச்சித்தி கோகனகமுத லவாழ்வு குலவுபதம நெறி யறுவகையு மேலோடுகீழுட்டக வெல்லாம வெறும பொய்யென வெறுத்து நினைந்திருக்க-லக்ஷி யமாகிய சிவபதத்திலே நின்று பசாசுபத முதலாகப பிரமபத மீறுக வடைவே பிருதிவி யப்பு தேசோ வாயு வாகாசம மனசு அகங்காரம புத்தி இந்த வெட்டு தத்துவங்களிற் கிரமத்திலே யெட்டு பதத்திலு மொவ்வொரு குணமதிகமாக வெண்குண மான வணிமாதியாகிய வெட்டுச்சித்தியையும,

இதற்குச்சம்மதி

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

பிரமாதிகளுடைய ஐஸ்வரியங்களையு மவர்கள் வாழுமுலகங்களையு மந்திரபத முதலான பதங்கள் மந்திரபத வன்ன புவன தத்துவங் கலைகளென்னு மாறத்துவாவு சுத்த மாயை யசுத்த மாயையென்னு மிரண்டு மாயையினுடைய காரிய மாகையாற பயனற்ற பொய்யென்று வெறுத்துச் சிவபதத்தையே யிச்சித்து நினைத்திருக்க,—

மேலொடுகீழில்லான சிறந்ததோர் குணமில்லான றன்மையொருவர்க்கு நினையபரியா னென்றுமிலா னொப்படவந்துள்ளே பொறுப்பரிய பேரன்பை யருளியதன்வழியே பெருகுமிலாபபோகத்தைப் புரிந்தே புகுந்திடுவன் - முடியுமடியுங் காணரியான இன்னதொரு குணவானென்ன றொருத்தரா லிச்சயிக்கப்போகாதவன் தன்னுடைய ஸ்வரூபத்தை இவ்வாறென்றறிவதற் கரியவன் தேகேந்திரியாதி கரணங்க ளொன்றுமில்லாதவன் சந்நிதானம்பண்ணி யான்மாவினிடத்திலே தரித்தற் கரிதாகிய சிவராகத்தைவிளைத்தந்தச் சிவராகம் வழியாகப் பூமிமுதல சத்தியலோக பரியந்தத்தில் மநுஷியாநந்தமுதல் பிரமாநந்த முடிவான யானந்தங்க ளெல்லாஞ் சரி இன்றி விளைவுகளுஞ் சிவானந்தத்தை விளைத் தான்மாவினிடத்திலே வேறறக் கலந்திடுவனென்றிதன்பொருள்.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அப்படித் தியானம் பண்ணிச் சிவசத்தி காரகமாய் நின்று செயல துரைக்கின்றார்.

தெறியறுவகையும - ஆறத்துவாவும,—வெறும் பொய்யென - அசத்தியம்போற காணுங் கனவுடிதமாக,—புகுந்து - விள

கி,—போகத்தை - சிவதத்துவ விளக்கமாகுஞ் சிவானந்தப் பெ யாச் சிவபோகத்தை.

மறையை வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

குருவினருளா லறிவதொரு குறியின்க ணுறைந்து நின்று கொண்டு, காலாக்கினி புவனமுத லநாசிருத புவன மீறுயுள்ள எவ்வகைப் பட்ட புவனமும் இதற்குமுன் னநுபவித்துக் கழித்தமையிற் காணற் சேறலுக்கண் டருவருத்து விட்டு, அறு வகை யத்துவா வுட்பட்ட மூவகைப் பிரபஞ்சமுங் காரணரூப த்திற் சித்துவ காணப் படாமையாற் பித்திகைவடிவம் கா ண்பார்க்குக் காணப்படாதா யதன்கண் மறைந்த சித்திர வடி வம் போல முழுப்பொய்யெனக் கண்டு, அவ்வாறு கண்ட கா ட்சி சலியா திருக்கப் பெறின், அப்பிரபஞ்சத்திற்கு விலக்கனை மான ஞான சொரூபம் ஆண்டினிது விளங்கித் தோன்றும். தோன்றவே, வறியார்க்கு நிதி வாய்த்தாற்போல அதனைக்கட் பெருங்காதன் மீதூரும். அது மீதூறவே "இன்பு விஞ்சினின்ற விறைவுண்டேல் விறைவுண்டா - மன்பினிலேயது" ஆகலான் அவ்வன்பின் வழியே பேரின்ப மயமாய்ப் புகுந்து உயிரின்கண் விளங்கித் தோன்றும் அத்தஞானத்திற்கு முதலாகிய ஞேயமெ ன்பதாம்.

அட்டகுணமெட்டுச் சித்தி கோகனத னென்றது பைசாச பதத்தி னட்டமா சித்தியை கோகதி எனமட்டு கேற்றமாகிய வட்ட சித்தியுடைய பிரமபதமென வதன்பெருமை கூறிய வாறு.

கோகனதன் ஆருபெயர்.

ஒற்று மிகாமை வடநூன்முடிபு.

வாழ்வு குலவுபதம் — திப்பிய மகளிரும் அதிவிசித்திரமாகிய மாடமும் மாளிகையும் முதலிய போக்கியப் பொருட் சிறப்புகளா னழுந்து பெற்ற பதம்.

ஒற்றுமை பற்றிக் குணங் குணியாக வுபசரிக்கப் பட்டது.

இதனானே ஆசைதரு மூலகமெலா மலமெனத் தேரா மென் றறிக தகலுமாறும் அநந்நியமாமாறும் வகுத் துணர்த்தி இரண்டாங் கூறு வலியுறுத்தப் பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இப்படி ஜீவபரமென் றிரண்டில்லை யெல்லாஞ் சிவமே யென்ற பரிணாமவாதியை நோக்கிச் சிவ னினமலனென்றும் ஆன்மா மலசம்பந்தியா யிருப்பனென்று மதபேதங்களொழிந்து சிவதரிசன முண்டாகாதென்றும் மேலருளிச்செய்கிறார்.

குறித்தடியின்று - ஆசாரிய னறிவித்தபடியே யறிந்து பரமேஶ்வரனுடைய திருவடியிலே தற்போதஞ் ஜீவியாமலடங்க ஞானமேயாய் நின்று,—அட்டகுணமெட்டிசித்தி-எண்குணங்களாகச் சொல்லப்பட்ட எட்டுக்குணங்களும் நுண்மை பெருமை அறவுநொய்தாயிருத்தல் மிகவுங் கனத்திருத்தல் விஸ்பிசையே கல பாரமெய்ச்சோதல் வேண்டின வுருவைக் கொள்ளுதல் எவருந்தானேயாய் நிற்றல் என்னும் எட்டுச் சித்தியும்,—கோகனகமுதல்வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து-பிரமாவினுடைய ஐஸ்வரிய முதலாகவுள்ள ஐஸ்வரியங்களையும் கொண்டாடப் பட்ட பதங்களையும் உபேட்சித்து,—தெரியவுலகேழும் மேலொடு கீழுலக-கீழும் மேலும் எங்கும் நிறைந்து நிற்கத்தக்க சடத்துவாக்களின் வழிபடங்களும்,—வெறும்பொய்யென நினைந்தி

ருகக - இங்ஙனஞ் சொல்லப்பட்டவை யெல்லாம் சுத்த வசத்தியமென்று இவையித்தனைத் சிவஞானத்தாலே யறிந்த அந்தஞானமாய் நிற்கவே,—மேலொடு கீழில்லான - முதல் நடு விறுதி மூன்று மில்லாதவனுமாய்,—நிறைந்தவனோர் குணமில்லான - சொல்லப்பட்டதொரு குணங்களுமில்லாத நிர்க்குணனுமாய்,—தனையொருவற்கும் நினைப்பரியான - தன்னுண்மையைத் தானறிவிக்க வறியுமதொழிந்து ஒருவராலு மறியப் படாதவனுமாய்,—ஒன்றுமில்லான - சர்வமுந் தானாய் நிற்கச்செய்தே ஒன்றுந் தானல்லனுமாய் நிற்கிறவன்,—நேர்பட்வந்துள்ளே பொறுப்பரிய பேரன்பையருளி - வேதத்திற் சொன்னமல பிரகாசமாய நின்றமுதல் தானே முத்தியில் பிரகாசித்து இவனுக்குள்ளே பொறுத்தற்கரிய மிகுந்த பத்தியையு முண்டாக்கி அதன் வழியே புகுந்திடுவன்,—என்றுமிலாப் போகத்தைப் புரிந்தே - அந்தப் பெரிய பத்திவழியாகத் தானுஞ் சென்றுகூடி எவ்விடத்திலு மில்லாத சிவபோகத்தைக் கொடாநிற்பன்

இதற்குப் பிரமாணம், சங்கற்பநிராகரணம், "சத்தியுஞ் சிவமுந் தாமேறுக்கருமென் - றித்திறனுணர்வுக் கெய்துவதெவாக்கோ - தமக்கேயென்னிற ருமுணராமையு - மமைப்பறவுணர்தலு மவர்க்கடையன்றே" என்றும், சிவஞானபோதம், கூ-கு, ரு-வெ, "நிற்குணனாய்நின்மலனாய் நித்தியானந்தனாய்த், தற்பரமாய்நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ, லானவறிவா யளவிறந்த சோன்றோ, வானேமுதல்களையின் வந்து" என்னுமிதனைக் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆன்மா பாசமாகிய பிரபஞ்சத்தை யசத்தென்றறிந்து நீங்கிச் சத்தாகிய சிவம் பிரகாசிக்கு மென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அடியிற் குறித்தநின்று - குருவினருளா லறிவதோர் குறியினைக் குறைத்து நின்றுகொண்டு,—அட்டகுண மெட்டுச்சித்தி-பைசாசபதத்தி னட்டமாசித்தியை நோக்கி யெண்மடங்கு சேற்றமாகிய வட்டசித்தியையுடைய,—கோகனகமுதல-பிரமபதமுதலியவற்றின,—வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து-திப்பியமகளிரு மதிவிசித்திர மாகிய மாடமு மாளிகையு முதலிய போகியபொருட் சிறப்புகளா னழகுபெற்ற பதமாகிய காலாக்கினி புவனமுத லநாசிருதபுவனமீறாகிய வெவ்வகைப்பட்ட புவனமும் இதற்குமுன்னனுபவித்துக் கழித்தமையிற் கானற்சோறனைக் கொண் டுருவருத்துவிட்டு,—நெறியறுவகையு மேலொடு கீழுட்பகவெறும் பொய்யென நினைத்திருக்க,— அறுவகையுந்தலாவுட்பட்ட மூவகைப்பிரவஞ்சமுங் காரணரூபத்திற் சித்தில காணப்படாமையான் பித்திகைவடிவங் காண்பார்க்குக் காணப்படாததா யதனகன்மறைந்த சித்திரவடிவம்போல முழுப்பொய்யெனக்கண்டு அவ்வாறு கண்டகாட்சி சலியாதிருக்கப்பெறின,—மேலொடு கீழில்லான - மேலொடு கீழில்லானாகியும்,—குறித்ததவதோர் குணமில்லான் - குறித்தறிவதொரு குணமில்லானாகியும்,—தனையொருவர்க்கு நினைப்பரியான- தனையொருவர்க்கு முணர்தற்கரியானாகியும்,—ஒன்றுமிலான - ஒன்றுமிலனாகியும்,—உளதோவந்து நேர்பட - பிரவஞ்சத்திற்கிலக்கணமான ஞானசொரூப மாணடினிது விளங்கித்தோன்றும், தோன்றவே,—பொறுப்பரிய பேரன்பையருளி-வறியார்க்கு நிதிவாய்த்ததழிப்போலப் பெருஞ்சாகன் மீதூரம்,—அதுமீதூரவே, யதனவழியே, “இன்பினிதென்ற லின்றுண்டே லின்றுடையா-மனபினிலேயத்து” ஆகலான அவ்வன்பினவழியே,— எங்குமிலா

ப் போகத்தைப் புரிக்கே - எவ்விடத்து மறித்றகசிப பேரின்ப மயமாய,—புகுந்திடுவன - புகுந்து தயிரினகண விளங்கித் தோன்றுமந்தஞானத்திறகு மூதலாகியஞேயம

இதனுனே யாசைதரு மூலகமெலாம் அலகைததோமெனறிந்த தசலுமாறு மங்கலேயமாமாறும் பகுத்தணாதத இரண்டாங் கூறு வலியுறுத்தப் பட்டது.

☞ கூ-ரு, உ-ம், அதிகரண முடிந்தது

## மறைஞானதேசிகர் உரை.

மேன மாயாவாதி ஜீவபரங்களை யொன்றெனறுேதி யிருக்க நீ சிரண்டாகக கூறிய தெனனென்று வினவ வுத்தர முணாத்துகிருா.

கண்டவிவை யல்லேனு னென்றகன்றுகாணுக் கழிபரமு நானல்லே னெனககருதிக்கசிநத, தொண்டினுேடு முளததவன்று னினறகலப்பாலே சோகமெனப பாவிக்கத தோன்றுவனவேறன்றி, விண்டகலு மலங்களெலாங் கருடத்தியானத்தின் விடமொழியு மதுபோல விமலனையுமடையும், பண்டைமறை களுமதுநானேனென்று பாவிக்கச் சொல்லுவதிப பாவததைக காணே (எ)

(இ-ள) கண்டவி ஆன்மாவானவ னித விதுவெனறு சுட்டிவை யல்லே யறியப்பட்டவைகளெல்லா வற்றையு மிதுனென்ற நா னல்லவென றதற்கு வேருய் கன்று

| | |
|---|---|
| காணுசசுழிபர முனானலலே னெனககருதி | ஞானமபோதத்துக்கெட்டாதிருககிற மேலான பரமசிவனும நானலலவென றறிகது. எனனவே, பாசத்துககும பதிககும் வேறுயிருப்பதோ ரானமா வுணடென றறியபதாயிறறு |
| கஞிககதொண் டினெ௵ முளாத தவனறு னினறக லபபாலே | அததசிவன றுனுருகாநினற அடிமைததிறததுடன கூடிநினற வானமா விடததிலெள்ளுக்கு ளெண்ணெயபோலவும் பூவினிடத்துக கந்தமானது பொருநதி நினறுறபோலவு முள்ளும் புறமபுங் கலநதுநினற வைககியததினுலே |
| சோகமெனப் பாவிககத் தோ னறுவனவே ற னறி | நானநதசிவனுகா நினறேனென றவனறிநது பாவிக்க அப்பொழுது அவவிடததில் அநநியமாய்நினற சிவன் றனே பிரகாசியாநிற்பன். |

அசசோகம் பாவனை ஆன்மாப் பரமானமாவைக் கூடின விடதது தானெனபதொரு முதலினறி யவனுடனே யிலயிததொனறுய்ப் போமெனனும் வேதாநதி மதம்போல வன்று இனனனு சிவம் பிரகாசிககவே!

| | |
|---|---|
| விணடகலும லஙகளெலாம | அநாதியாக விவனிடத்திற் செறிந்து நீங்காதிருக்கிற மலங்களெல்லாம் விட்டுப்போகாநிற்கும். அஃதெனபோல வெனனில்? |
| கருடத்தியான ததின விடமொ ழியு மதுபோல | பாவனையிற் பட்ட கருடனுற் பாமபொழியும. பாவனையே செய்யும் பலம் எனபதனுவிகதப் பாவனை பண்ணவே மலமானவைகணீங்குமென வறிக. |

விமலதையு மடையும — ஆகலா லிந்த வான்மா சுத்தனும் ஆகா வது, நின்மலாவத்தையைப் பொருந்தா நிற கும்

பண்டைமறைகளு மது நானே னென்று பாவிக்கச் சொல்லு வதிப் பாவகத்தைக்காணே. — இந்தப் பாவனையைக்காண பழையதாகவிரு க்கிற வேதங்கள் சோகம் பாவிக்கச் சொல லுகிறது நீயதற்குப் பொருள்கோ ளறியாம ல் விபரீதமாகக்கொண்டாய்காண் ஆதலா லது கூடாது என்று

ஸ - அவன், அஹம் - நான் இக்ஷைச சோகமென்ற இதுவடமொழி. இது செய்யுட்கண்ணும வரப்பெறும

“செந்தமிழச் செய்யுட் டெரிந்துணாந்துஞ் செய்யுட்கண் வந்தவடமொழியை மாறறுதே—சந்தம், வழுவாமற் கொண் டியற்று மாணபினாக குணடோ, தழுவாம விறகுந் தமிழ்” எனவறிக.

வழித்தலைப்பவோன சுழல்கின்றேனுன்னைப்போ லென்னை ப் பாவிக்கமாட்டேன் எனவறிக.

இதற்கு வாதுளம் சித்தாந்த சம்போதியினு மறிக. (எ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் வேதத்திலே சோகமென்றதனு லொன்றெனாற் றன் று பிரிவற்ற வநுபவாதிசயத்தினுலே யது நானென்றகே யெ ன்று முறைமையும் பேதமாகச் சிவனுக்கு சமனுயிருக்கு மென் னு மந்தமதிகளை நிராகரித்து சிவ ஜீவர்களுக்குத் தாதாத்மிய முங் கூறுகின்றது.

கண்டவிவை யல்லேனென்றகன்று - ஆன்மபோதத்தி னாற் பிரித்தறியப்பட்டதெல்லாமென்னுடைய ஸ்வரூபமல்ல வென்று நீங்கி,—காணாக்கழிபரமு நானல்லேனெனக்கருதி- ஆன்மபோதத்தினாலே காணப்படாமல் விருவாதீதனாய் நிற்கிற சிவனும் நானல்லனென்று புத்திபண்ணி,—கசிந்த தொண்டினொடுமுளத்தவன்றா னின்றகலப்பாலே சோகமெனப் பாவிக்கத்தோன்றுவன்வேறன்றி விண்டகலு மலங்களெல்லாம் விமலதையடையக் கருடத்தியானத்தால் விடமொழியுமதுபோல-கசிந்தசம்பந்தத்தினுடனே ஆன்மாவிலே ஜீவன் வேறின்மையாகி நின்றமையா லந்தச் சிவனானென்று பாவனைபண்ண வான்மாவிலே வேற்றுப் பிரகாசிப்பன சிவபாவனைபண்ணவே யாணவமுதற் பாசங்களெல்லா நீங்கிப்போ யான்மா நின்மலத்தவத்தைப் பொருந்துவன். அதெனப்போல வென்னில்? கருடபாவனையினாலே விடநீங்குமாப்போல,—பண்டைமறைகளு மதுநானானேனென்றுபாவிக்கச்சொல்லுவ திப்பாவகத்தைக்காணே-பழையதாகிய வேதங்களு மதுநானேனென்று பாவனைபண்ணச் சொன்னது நாமிப்பொழுது சொன்ன பாவனையைக் கண்டென் றிதன்பொருள்

ஏகார மீற்றசை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——0——

சிவபோக நிமித்தமாகுங் குலைகத சிவசமாதிகூடுதற் பொருட்டுப் பிரபஞ்சம் பொய் யென நினைக்கிருத்தனை மாத்திரம் போதமோ வென்னச் சித்தாந்த சிவோகம்பாவனைத் தீவக வேதாந்த சோகம் பாவனை வேண்டுமென்று விளம்புகின்றார்.

ஙகபிரா செய்வார் பிறருளராயவழி யவ்வினைப்பயன் பற்றி யாவொடு வினை மகிழ்ந்து கட்டுத் துணையாயத் தம்மோடு கூட்டற் பாலசாக வினைகளை யவ்வாறு செலுத்திப் பிறர் செய்யு மவ்வினை மகிழ்ந்து கவி யித்துவித்து நுகர்வித்து ஒழித்தலுஞ் செய்வாராகலான — தலைவன் சலமிலன் - அதுபற்றி யிறைவன் சலமுடையனுமல்லன்.

## மறைஞானதேசிகர் உரை.



இல்லாதார் சிறப்பினையு மில்லாதார்
சிறப்புணையு முணர்த்துகின்றார்

நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து நாக முழை புக்கிருந்துந் தாகமுதற் றவிர்ந்தும், நீடுபல காலங் கணித்தும் இருந்து நின்மலஞானத்தையிலார் நீங்கிடுவார் பிறப்பு, லேடுகரு மலாக்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே யெயிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானம், கூடுமவர் கூடிய வீடு கூடிக்குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர். (௫)

(இ - ள்) நாடுக ளிற் புக்கு ழன்றுங் கா டுகளிற் சரித்து நாகமுழை புக்கி ருந்துந் தாகமுத றவிர்ந்தும் நீடு பல காலங் கணித் நின்மலனது ஞானம் நின்மலஞானம் அதனை யில்லாதோர் பூமிப் பிரதக்கிணமாகத் திரிந்தாலும் புறப்பறவை யாறு மிருகங்களைப்போல வனத்திற் சஞ்சரித்துச் சருகு தின்றிருந்தாலும் புலிகளைப்போல மலைப்பாழிகளுட் புக்குப் போகத்தைச் சாதித்திருந்தாலும் பாம்புபோல வாயுவைப் புசித்துத் தாகங்களைத் தீர்த்திருந்தாலும் யோகிகளை

ந்துயிருந்து நின்மலஞானத்தை யிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்

பபோல நாணெடுங்காலம நித்தியத்துவம பெற்றிருக்கவென்று கருதித் திருட்டபலமாகிய விரசாயனங்களைக் கறபபபடி கூட்டிக் கொண்டிருப்பினு மஃதில்லாதோ ரிதசனை வருத்தமுற்றுச் சாதித்தார்களே யாயினு மிறுதிக்கட் பூமியிலே வந்து பிறப்பார்கள் அஃதுள்ளாற பெறுமபலம யாதெனில்?

ஏடேந்து மலர்க் குழலார் முலைத் தலைக்கே யிடைக்கே யெறிவிழியின பிற்கடைக்கே கிடந்துமிறைஞானங் கூடுமவர்

சிவஞானத்தைப் பொருந்தினவர்கள் ஏடேந்தோடும் பூவினிதழ் என்பதனுற பூவினிதழைப் பொருந்தின குழலையுடைய மாதர் முலையினுடைய குசுமமாகிற நுனியிலேயும அல்குற் றலத்திலும அம்புபோலக் கொடிதாகிய விழிகளினது கடைக்கட் பார்வைகளிலேயும அகப்பட்டு முயங்கிக் கிடந்தார்களேயாயினு மந்த விடயங்களின வசமாகார்கள் அஃதெனபோலவெனனில? தண்ணீரிலே யநவரதமுங் கூடியிருக்கிற தாமரையானது எப்படி யதனைப் பற்றுமலிருக்குமோ அப்படிபபோல ஞானிகளும பொருந்தார்கள் ஆகலா லெத்துடன் பொருந்தியிருப்பார்களெனனில்?

கூட்டரியவீடுங் கூடிக்கு ஞசித்த சேவடியுங் குமபிட்டே யிருப்பர்.

யாவராலும் பெறுதற்கரிய பரமமான முத்தியைப் பொருந்திப் பரமானந்தத் தாண்டவத்தைப் புரியாநின்றோனா னாக்கிய சிவபாதத்தையே யநவரதமு மனுசநதானம பண்ணிக்கொண்டிருப்பர்கள். எ-று.

நின்மலஞானத்தை யிலார் கடுநிலைத் தீபகம்

வியலமுமாய சாவதோமுகமா யிருக்கிற சிவஞானம பிரகாசியாவிடத்து முத்தியடையப் பெறுதெனபது கருத்து.

சேவடியுமென்ற வுமமை சிறப்பினகண் வநதது.

ஞானத்தையிலார் நிகழுநதிவோ பிறப்பில எனவும, இறை ஞானங் கூடுமவா இருப்பரெனவும, இரணடெழுவாயும இரண் டு பயனிலையுங் கூட்டுக

இதறகுப பதிரகிரியினும சாவஞானேத்தரதமம் இர த்தினத்திரயதது மறிக (௫)

## சிவாகரயோகியருரை வருமாறு.



மேல் கிரியா யோகஙகளினுலே முத்தியில்லை ஞானத்தி ஞலே யலலதெனபது கூறுகினறது

நிமலஞானத்தை யிலார் நாடுகளிற புககுழன்றுங கா டுகளிற்சரித்தும் நாகமுழைப்புக்கிருந்தும் தாகமுகதறவிரந்து ம நீடுபல காலங்க ளிந்தரராயிருந்தும் நிகழுந்திவர் பிறப்பி ல்,— சிவஞானமில்லாத பெயா புணணியபூமிகளிலே சஞ்சரித் தும புணணிய தீரத்தஙகளை யாடிப பிரயாசைப்பட்டும வன த்திலே சாகமூலபலங்களைப புசித்துஞ சஞ்சரித்தும மலைமுழ ஞ்சிலே புகுந்தும ஸ்திராசனத்திலே யிருந்தும அபபியாசவசத் திஞலே பசிக்ணணீர்தாகத்தை யடக்கியும நெடுநாகிய ப லயுகஙகள மரணமில்லாமலிருநதும காலாந்தரத்திலே சன னத்திலே வநது தோனறுவாாகள,— இறைஞானங கூடுமவ ரோடு கருமலாக குழலாா மூலைத்லைக்கே யிடைக்கே யெறிவி ழியின படுகடைக்கே கிடந்தும— குஞ்சித்த சேவடியுங் கும பிட்டே கூட்டரிய வீடுங் கூடியிருப்பா —பதியினது சிற்சத்தி பதி த்லையுளளபோ அழகுபொருந்திய மடநதையருடைய வெல்லா வவயவஙகளையுந தோய்ந்திருக்கச் சிதேயுஞ் சிவனது குஞ்சித பாதமாகிய வருட்சத்தியையும பிரியாத வணக்கத்துடனே நி

ன்று முன்சொன்ன தபோயோகங்களினாலுங் கூடப்போகா
த மோக்ஷத்தையுங்கூடிச் சிவமேயாயிருப்பரென் றிதன்பொ
ருள்.

கூடுமவரென்றது இறந்தகாலந் தருந்தொழி லிடைநிலையா
ய்க் கூடினவரென்ப பொருளுரைத்தது

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——0——

சிவசாக்ஷாத்கார சித்தியினாற் சித்த சிவ யோகிகளுஞ் சி
வப்பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரத்தினாலுஞ் சிவசமாதி சித்தியி
னாற் சித்த சமாதி சாத்திய சிவயோகிகளுஞ் சிவப்பிரத்தியக்ஷ
விஷய விருப்ப மிருந்தாலுமவர்கள் சரீராந்தத்திற் பாசமுத்தி
யடைந்து மல சத்திவிரத்தி விரியாது குவித்த சிவசத்தி காப்
ப சிற்சத்தியை விரித்துச் சிவனைச் சாக்ஷாத்கரிப்பார்க ளென்
றுஞ் சரீர மிருக்குங் காலத்து மாகாமிய மேறுமென்றும் பிரா
ரத்த கன்மமும் பலங்குன்றி வாசனாமாத்திரமாயத் தாக்கா
மற் றுச்சும் போகம் புசிப்பிக்குமென்று மிருதிரு விருத்தத்தா
லிசைக்கின்றார்

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——0——

ஏனைப் பெரும்பேறெல்லாங் கொடுக்க வல்லனவாய எத்து
ணை நன்மைகளும், இங்ஙனம் அரன்பணியி னிற்றலாகிய மெய்த்
தொண்டு செய்யும் ஞானத்தாற் றரப்படும் பேற்றைக் கொடுக்க

வல்லுவனவல்ல எல்லாப் பெரும்பேற்றையுங் கெடுக்கவல்லன வாய மகத்துணைத் தீமைகளும், இத்துணைய பெரும்பேற்றை ச் கெடுக்க வல்லனவுமல்ல, அத்துணைப் பெரியதோர் சிறப்பிற்று இவ்விறைபணிநிற்கு ஞானமென்பதாம்

அரன்பணி நிற்றலது ஆற்றல் கூறியவாறு

சாக்கிரத்தே யதீதத்தைப் பெறுஞ்செய்யுளில், சாக்கிரத் தே யதீதத்தைப் புரிந்தவர்கள் சாக்கிரத்தின்கணொப்புமை மாத்திரையேயன்றி அவரை யெல்லாரோடுமொப்பனவத் திக முறக்கவென வவரது பெருமையுணர்த்துவார், ஆகமுடி கவித் தாசாணடு நுங்கிடாவேயென ஆண்டுக் கூறினார், அதனையே அர னபணியி னிற்றலா லுச்சறபாலத்தன்சனை மற்றொன்றுஞ் செய்யக் கூடவ தொன்றில்லையென அதனொடின் பெருமையுணர்த்து வார், எண்டுமெடுத்தோதினார்

இங்ஙனங் கருத்துவகையாற் பொருள் வேறுபாடுண்மையி ற் கூறியது கூறலாகாமை கண்டுகொள்க

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

பிரபஞ்ச வியாபாரங்களை விட்டு நீங்கி அரிய தபசுகளைப் ப ண்ணினாலும் சருவமுஞ் சிவனுடைய செயலென் றறியாதவர்க ளுக்கு சனனம் நீங்காதென்றும் சருவமுஞ் சிவன்செயலென் றறிந்தவர்களுக்கு சனனம் நீங்குமென்றும் மேலருளிச்செய் கிறார்

நாடுகளிற் புக்குழன்றும்- பூப்பிரதட்சண முதலாக வெல் லா விராசஸ்தலங்களும் புக்குத் தடுமாறித் திரிந்தும்,—காடுகெ ற சரித்தும் - வனசரித்ராயத் திருந்தும்,—நாகமுழைபுக்கிரு

ந்தும் - மலை முழைஞ்சுகளிலே யிருந்து தவசு பண்ணியும்,—தாக முதல் தவிர்ந்தும் - ஆகாரம் நித்திரை பய மைதுன மென்னு முடற்குணங்களை விட்டும்,—நீடுபல காலங்கள் நித்தராயிருந்தும் - எண்ணிறந்த நெடுங்காலங்கள் நித்தராந் தவம் பெற்றிருந்தும்,—நின்மல ஞானத்தை யிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில - சிவனுடைய ஞானத்தைப் பெறுதவர்களுக்குச் சனன முண்டாகாநிற்கும், இதன்மையன்றி,—ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே வெறிவிழியின் படைக்கே கிடந்து மிறைஞானங்கூடுமவர் கூடரிய வீடு கூடிக் குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டேயிருப்பர்-இதழ்பொருந்தின மலரையுடைய கூந்தலார்களுடைய முலைமுகத்திலே யவர்கள் மருங்குலிலே காமத்தை யிலக்காகாம லம்பிலுங் கடாக்ஷகப்பட்டு பறியப்பாறகிற கொடிய கடைக்கண்களிலே கிடந்தார்களாயினும் பரமேசுவரனுடைய ஞானத்தைக் கூடினவர்கள் யாவராலுங் கூடுதற்கரிய மோக்ஷத்தையும் பொருந்தி குனிப்பையுடைய சீர்பாதத்தையுந் தொழுதுகொண் டிருப்பார்கள்

இதற்குப் பிரமாணம் திருக்களிற்றுப்படியார், ௯௩-வெ, "வீட்டிலே நின்று வினையொழிந்து நின்றிடிலென், நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென்—கூட்டிலவர், சாத்தியே நின்றிலையேற் றக்கன்றா வேள்விசெய்த, மாத்திரமே யாங்கண்டாய் வந்து" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, பிரபஞ்ச வியாபாரங்களை விட்டு அரிய தபசுகளைப் பண்ணினாலுஞ் சர்வமும் சிவனுடைய செயலென் றறியாதவர்களுக்கு ஜனனம் நீங்காதென்றும் சர்வமும் சிவனுடைய செயலென் றறிந்தவர்களுக்கு இந்திரிய வியாபாரத்தோடே கூடியிருந்தாலுஞ் ஜனனம் நீங்குமென்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

நாடுகளிற் புகுதலானும் - புண்ணிய தேசங்களிற் சென்று புண்ணியஸ்தலம் புண்ணிய தீர்த்தங்களைத் தரிசித்தாடியும்,—சார்பெனிற் சரித்தும் - வனத்திலே சென்று கந்தமூல பலாதிகளை யயின்றும்,—நாகமுழை புக்கிருந்தும் - மலையிலுள்ள குகையின் யோகத்திருந்தும்,—தாகமுந் துறந்தும் - யோகாப்பியாச பலத்தினாலே பசி கண்ணீர் தாகமுதலியவற்றிற் குணவுகளொழிந்தும்,—நீடுபல்காலங்கள் நித்தராயிருந்தும் - நெடுங்காலமரண மில்லாமலிருந்தும்,—நின்மல ஞானத்தை யிலார் - நிருமலமாகிய சிவஞான மில்லாதார்,—பிறப்பி னிகழ்ந்திடுவார் - ஜனனத்துட்படுவார்,—ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே பெருவிழியின் படைக்கே கிடந்தும் - இதழை யுடைய மலர்மாலை யணிந்த கூந்தலையுடைய மங்கையர் கொங்கை யல்குல் விழிக்கடை முதலிய அவயவங்களைத் தோய்ந்து பெற்றும்,—இறைஞானங் கூடுமவர் - சிவஞானத்தைப் பெற்றோர் கூடரிய வீடுங்கூடிக் குஞ்சிதச் சேவடியுங் கும்பிட்டேயிருப்பர் - பெறுதற்கரிய வீட்டினையும் பொருந்தித் திருவடிக்கணீங்காதே நிற்பர்

---

## மறைஞானதேசிகர் உரை.

—◆—

இத்தன்மையினை யுடைய ஜீவன்முத்தர் வாதனையினாலே
கன்மஞ்சஞ் செய்தார்களேயாயினு மதனையுறார்கள்
ஆதலா லாகாமியமு மேறாதென் றுணர்த்துகிறார்.

அங்கித்தம் பனைவல்லாரைக் கனல்சுடாதாற்போல
விடத்தமந் திரமுடையாரைக் கருவிடங்களேறா, வெங்கிடுந்

னத்தக் கன்மமெலாஞ் செய்தாலு ஞானிக ளிருவினைகள்
சென்றணையா முற்செய்வினை யிருக்குந் தங்கிப்போம்
பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த சக்கரமுங் கந்தித்
தத்துச் சுழலுமாபோல, மங்கிப்போய் வாதனையா லு
ழலவிக்குமெல்லா மலங்களுமபின் காயமொடு மாயு
மாறே. (௫)

(இ-ள்) அங்கித் அக்கினித்தம்பனை வல்லவனை அனலானது
தம்பனவல் சுடாதவாறுபோலவும்
லார்க்க னல்சு
டாதாகும்
ஔடத மந்தி ஔஷத மந்திர பலத்தினையுடைய சித்த
ரமுடையார்க்க புருஷர்களானவர்களை விடச் சத்தியான
ருவிடங்களேறு து வாதைபண்ணாதவாறுபோலவும் ஔஷ
த மந்திரமென்பதனை யிருபாலுங் கூட்டிச்
கன்மமெல்லாவையும் வாதியாதோ வெனனில்? அநேக ஜன்
ங்கள் நடுவே அக்கினித்தம்பனை வல்லவனையே சுடாதுபோ லெ
ன்வறிக.

எங்கித்தைக் ஞானவான்க ளெந்தெந்தக் கன்மங்களைக்
கன்மமெலாஞ் செய்தார்களே யாயினும் அந்தந்தக் கன்ம
செய்தாலுஞானி பலங்களைப் பொருந்தி வாதையுறார்கள்
க ளிருவினைகள்
சென்றணையா
முற்செய்வினை பூர்வத்திலுண்டான கன்மாநுகுணமான
யிருக்குந் தங்கிப் சரீரத்திலுண்டான பிராரத்தகன்ம வாதனை
போம் பாத்திர சிறிதிருந்து சுகதுக்கங்களை யுறுவிக்கின்று
முங் குலாலன்வி சிறி துழலப்பண்ணும். அஃதென்போல வெ
னைதவிர்ந்த சக்க னனில்?

றுய சந்தித்து
ச்சுழலு மாபோ
லமங்கிப்போய
வாசனையா லுழலு
மருகும

பெருங்காயமிருந்த பாண்டமானது அஃது தொலைந்துபோயிருக்கின்ற மந்தப் பாண்டம் அந்தப் பெருங்காய நாற்றமுண்டாயிருக்கும் இங்ஙன முண்டாயிருந்து மேலதனுக்கொரு பிரயோசனமில்லாதது போலவும குயவன் திகிரியிலேறின மண் கடத்தை யுண்டாக்கினபின்னும் அந்த வாதனை தானே நின்று மெல்லமெல்லச் சுற்றித் தானேயொழிந்துபோமதுபோலவும் இந்த வாதனையோடிருக்கவு மோருடலை யுண்டாக்குமோ வென்னில் அக்கினியைச் சேர்ந்த வித்தானது பின்பு முளையாத வாறு போலென வறிக

எல்லாமலங்க இந்த வான்மாச் சரீரத்தை விட்டு முத்தி
ளுமபிமானகாய யை யடையும்பொழுது முற்கூறிய வாசனுந்
மொடு மாயுமென மகமாகிய கன்மமு மாயையு மாணவமுந்
னே தான் கெடாமற் றன் சத்தியினது வலிகெ
ட்டு நிற்கவே தடைபடாமல் முத்தியை யடைவன் எ-று

கந்தித்துச் சுழலுமென்பதனை நிலைநிலையாக்கிப் பொருளுரைக்க

பலவெழுவாயும பலபயனிலையும

உம்மை எதிர்மறை

மாயுமென்றது சுத்தமாகக் கெடுமென்றதன்று, அஃது இருந்தும் வாஸனை பண்ணாதென்பது கருத்தாயிற்று

“உககொளியா தொளிக்குமிரு ளுதயத்தி னொளிமுன்னே, பசுத்துவத்திற் பசுபாச வலியடங்கும் பரமசிவன், நக்கனு

றுலுமாபோல-பெருங்காயம் வைத்தெடுத்துப்போட்ட பாண்டம் குயவன் றண்டுகொண்டு சுழற்றுங்கலை யொழிந்த திகிரியையும் இடைவே மண்பாண்டையுஞ் சுழலுங்கலையுஞ் செய்யினு மவையிற்றின்று லொருபயனு மில்லாததுபோலவென் றிதன்பொருள்.

அன்றென்ப தாமெனக்கிளவி

சிவாக்ரயோகி பண்ணின சிவஞானசித்தி
பத்தாஞ் சூத்திர வியாக்கியானம்
சமாப்தம்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

பிராரத்தம், சுபத்தமென்றும் மந்தமென்றும் தீவிரமென்றும் மூன்றுவிதம். அவற்றுள் சுபத்தஞ் சிவத்தன்மத் தொருப்பட்டிருப்பவரை வாதியாது. மந்தஞ் சிவ ஞானிகளை வாதியாது. தீவிர மெல்லாரையும் வாதிக்கு மாகலும் சிவஞானிகளை மிகுதியும் வாதியாது, ஆகாமியமு மேறாது.

பகப்பொருள் வெளிப்பொருள்

இப்பத்தாஞ் சூத்திரத்து முன்பின் சில விடங்களிலேயு மிருந்து கூறியது கூறலைக் குறித்துந் திரிபதார்த்தஞ் சூக்குமால வரூப பரீக்ஷை பண்ணுது லோகச் சொற்சுட்டு மட்டுக் கட்டுவிட்டு முட்டத் தொட்டுப் பரீக்ஷை பண்ணுதலானும் உரை விரித் துரையாது துணர்ந்து கொள்க

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

சுடுதற் கேதுவாகிய அங்கியைத் தம்பனஞ் செய்யவல்லார் அவ்வங்கியுண் முழுகிக்கிடப்பினும் அதுபற்றி யவாமாட்டுச் சூடு

நிகழாதவாறும், கொலைத்தொழிற் கேதுவாகிய விடங்களைத் தடுக்கவல்ல மந்திரமருந்துகளைப் பெற்றுடையார் அவ்விடங்களையெல்லாம் நிறையப் பருகினும் அதுபற்றி யவர்மாட்டுக் கொலைத்தொழில் நிகழாதவாறுபோல, விருப்பு வெறுப்புக்க ணிகழ்தற் கேதுவாகிய இந்திரியங்களை மேற்கூறிய முறையினின்று மடழிப்படுத்த வல்ல ஞானிகள் எவ்விந்திரியங்களினின்று யாத்தொழிலைச் செய்தாராயினும் அதுபற்றியவர்மாட்டு விருப்பு வெறுப்பு நிகழ்ந்து மேலைக்கு வித்தாதல் செல்லாமையானும், ஏனைப் பிராரத்தவினையுந் தறப்பணி நீத்தவர்மாட்டுத் தலைக்கட்டமாட்டாத வெந்தபடம்போலச் சத்திகெட்டே போம் வாசனைமாத்திரையாய் நின்று சிறிதே தாக்குமவ்வளவேயன்றி யாதனையாற் செய்யக்கடவது பிறிதில்லையாதல், காயமிருந்தொழிந்த பாத்திரத்தில் ஆய வாதனை கிடந்து கந்தித்தும் ஒருசிறிக்குபயோகமாகலின்மையுங், குயவனுவான குடத்தை வனையுமளவுஞ் சுழற்றிவிட்ட திகிரியில் அவ்வாதனை கிடந்து தன்வேகமுள்ளவளவு மதனை மெலிதாகச் சுழல்வித்து மற்றொன்றனை வனைதற்கு உபயோகமாதலின்மையும் போலுமாகலானும், வாதனைமாத்திரைக்குத் துணையாய் நின்ற வினை மலவாதனைகளும் அவ்வுடம்பு மாயுங்காலத்து வேறொருபற்றின்மையான் அதனோடொருங்கொழியு மென்பதாம்.

இங்குத் தங்கிப்போம் பாத்திரம் தீவிரவாதனைக்கும், வினைதவிர்ந்த சக்கரம் மந்தவாதனைக்கு முவமையாயின.

எங்கென்பது, எங்கித்தையென் பரீஇயிற்று.

நின்றென்பது சொல்லெச்சம்.

கந்தித்தென்றும் வினையெச்சம் எச்சப்பொருட்டாது செவ்வெண்மாத்திரையே குறித்து நின்றது "பயந்தகாத் தழிய குமரறை மூவா" என்றாற்போல

மங்கத்தைக் கன்மமெல்லாஞ் செய்தாலும் ஞானிக் கிருவினை
கள் சென்றணைபா - முன்செய் வினை யெல்லாங் கன்மங்களையும்
ஞானவான்கள் யுள்ளவர்கள் செய்யார்கள், வாதனையாலே
செய்தார்க ளாயினும் திரிபதார்த்தத்தைத் தரிசித்துச் சிவனல
ன் றொன்று நடவாது என்கிற விசாரத்தை யறிவாக வுடைய
சிவஞானிகள் சுத்தக்கங்களைப் புசிக்கும் — துண்டான விருப்பு
வெறுப்பு இவர்கள் வசமாவதொழிந்து இவர்க ளதின் வசமா
னார்கள், ஆகையால் ஆகாமியமானது சென்று பொருந்தாது. மு
ன்பு பிராரத்தம் புசிக்கச் செய்தே யல்லோ வாகாமிய மேறி
வந்தது, இப்போ பிராரத்தம் புசித்தாலுகில மீளவு மாகாமிய
மேறுதோ வென்னில்? வாகாமிய மேறுமற போகிறவழியமே
யருளிச்செய்கிறார் —இங்குத் தங்கிப்போம் பாத்திரமுங் குலா
லன் வினைதவிர்ந்த சக்கரமுங் கத்தித்துச் சுழலுமாபோல - பெ
ருங்காய மிட்டிருந்த பாத்திரத்தி லுண்டாகிய பெருங்காயம்
போனாலும் பாத்திர மீளவும் நாறின தன்மைபோலவும் குலா
லன் இருகையைக் கிரியமல் கைவிட்டாலும் முன்பு திரித்தவி
சை யுள்ளளவும் சுழன்றுறபோலவும்-முன்புள்ள பிராரத்த கன்
மமும், — மங்கிப்போய் வாதனையா லுழலவிக்கும் - ஆசாரியன்
செய்த அத்துவா சோதனையாலே திரப்போ யிருக்கச்செய்தே
யம் வாசனை மாத்திரத்தாலே ஞானவான்களிடத்துப் பிராரத்த
கன்மம் தேகத்தோடே கூடி ஜீவியாநிற்கும், அப்படி ஜீவிப்பித்த
தானாயினும் பின்னையொரு ஜனனத்துக்கு கேதுவாகாது அதே
தென்னில்? — எல்லா மலங்களும் பின்காயமொடு மாயு
ம் — அப்படி பிராரத்தம் புசிக்கச்செய்தேயும் எறின வாகா
மிய கன்மம் நசிக்கும் மாயா சேகமுமுமுன்
ஞானவான் தற்போதஞ் ஜீவியாமல் அந்த
... கோட்பாட்டாலே ...

மென்கிற மலங்களெல்லாம் வாதனையாலே சரீர முள்ளமட்டு நின்று பின் டக்கச்சரீரத்தோடேமாயும்

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், ௧௦-சூ, ௫-வெ, "ஒன்னலவேவாத நற்றவாதமயினும், பண்ணமாமாசசெலு ந்தும பாகரினு—மென்னனி, யாரடியேயாபவ னாமபுலனிற சென்று, மவாதிறப நீங்காரத்தற்கு" என்றும், ஷை ௯ - வெ, "இருள்வாங்கும் கல்மபோல ஞானிபால, முனசெய வினைமா யை மூண்டிடினும்—பின்செயவினை, மாயையுட னிலலாது மற றவனருள மெயபபொருளை, யாயவததிறலுணரு மசசு" என னுமதுங் கண்டுகொள்க

இக்கூறறசொல்லியது, சிவனைப் பெறறவர்க ளிந்திரியங்களோ டு கூடியிருந்தார்க ளாமாயினு மந்த யிந்திரியங்க ளிவர்கள் வசமாயிருக்கு மொழிந்து இவர்க ளதனவச மாகார்க ளாகை யா லவர்களுக்க காகாமிய மேருவென்றும் பெருங்காய மிட்ட பாத்திரம்போல பிராரத்த கன்ம வாதனை மாத்திரத்தாலே கூ டிவந்தக்காயினும் அதின்பேறின் ஆகாமியத்தினால மேலொரு சரீ ர தொந்தனை யுண்டாகாதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அங்கித் தம்பனைவல்லார்க் கனல்சுடாதாகும் - சுரர்க்கே துவாகிய அங்கியைத் தம்பனஞ்செய்ய வல்லார் அவ்வங்கியுண மூழ்கிக் கிடப்பினு மதுபற்றி யவர்மாட்டுச் சூடு நிகழாதவாறு ம,—அவுடக மந்திர முடையார்க் கருவிடங்களோடு - கொலை த்தொழிற் கேதுவாகிய விடங்களைத் தம்பிக்கவல்ல மந்திர மரு

உ

சிவமயம்.

# சிவஞான சித்தியார் சுபக்ஷம்.

## கக—வது பதியின் இலக்கணம்.

### மறைஞானதேசிகர் உரை.

மேற் பதினொராஞ் சூத்திர மென்னுதலிற்றோவெனின்: இப்படி பந்தத்திலே கிலேசமுற்றுப் பந்தங்களை நீங்கின ஜீவன் முத்தராகக் குபகாரஞ்செய்த சிவனது திருவடியை யான்மா - ந தவனிடத்திற் பத்திசெய்யுமா றுணர்த்துத னுதலிற்று.

மேலித் தலைச்செய்யு ளென்னுதலிற்றோவெனின்: எல்லாத்தையுங் காணுங் கண்ணுக்கு ஆன்மா காட்டாநின்றாற்போல ஆன்மாவுக்குச் சிவனுபகரிக்கு முறைமை யுணர்த்துத னுதலிற்று.

காயமொழிந் தாற்சுத்த னாயானமாகக் காட்டக்
கண் டிடுந்தன்மை யுடையகண்ணுக்குக், கேயுமுயிர் காட்டுக்
கண் டிடுமாபோல வீசனுயிர்க்குக் காட்டிக் கண்டு மளி
த்தலை, யாயுமயி ருடையனு யன்புசெய்ய வறிவிலனம
பிறவியி னடைந்தமுறையாலே, மாயமெலா நீங்கிய
ரன மலரடிக்கீழிருப்பன் மாறாத சிவானுபவ மருவி
க்கொண்டே. (க)

டுவ விதமதை யாயுமறி வுடையனு யனபுசெய்யவனனிலலைமையின னிலையினடைநத தனமைபோலே - சூரியாதிய பிரகாசஙகள தானையாகச சைதனனிய யோகததினுலே ரூபவத பகாாததஙகளைக காணுமியலபையுடைய கணணுககு இநதிரியஙகளைப பொருநதிநின்ற சேவானமாக காட்டிக் கணடிமொபோலப பரமேசுவர ஞானமாவுாரு அறிவிககவறிவன இநதவுபகாரததைப பெரிதாக விசாரிககும ஞானததை யுடையனும சிவனிடததி னிடையறாத பத்தியணணவே எடடாஞ சூததிரததிலே 'ஞானஞேயமொடு ஞாதருவு நாடாவணணம' னெற திலகூடு மானகையாலே.— ஆனமா காயமொழிநதான மாயமெல்லா நீஙகிச சுததனுகி யரன மலரடிக்கீழ மாறாத சிவாநுபவ மருவிதகொணடே யிருபபன - முனசொனனவாறு சிவனிடததிலே யிடையறாத வநதரங்கப பகதியைப் பணணிககொண டிருநத ஆனமா தேகமொழிநதவாறே ஆணவ மாயை மயககஙகளை யெலலாம விட்டுநீஙகி நினமலனுகிய சிவனிடத தொழிவறற சிவாநநதாநு பூதிபனுயிருபபனெனற திதனபொருள

இநதாசு சூத்திரத்திலே யிநதிரியஙகளுக்குத் தரிசிபபிக்கிற ஆனமாவைபபோல ஆனமாககளுககுத் தரிசிபபிககிறவன சிவனெனறு கூறியமொழியே யிவவிடத்தும கூறியது புனருததியெனனில்? அபபடியல்ல. அவவிடததுக் கூறியது சடரூபமாகிய பிரபஞசததைத் தரிசிபபிககிறத் தசுருத திடடாநதம, இவவிடததக கூறியது சித்துருபமாகிய சிவன ஸ்வரூபததைத் தரிசிபபிககிறததசுருத திஷடாநத மாகையால புனருததியில்லை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

சிவனதுபகார முணர்த்துகின்றது

காயமொழிந்தால் - பிராரத்தகன்மம் பிடித்திருத்தலுஞ் சரீரமதுமாயும் மாயத்தால் சரீராவதி மறைக்குஞ் சாமர்த்திய மாத்திரமாய மாயத் திரும்பத் தீக்ஷையிற் சேஷிப்பித்தமலமு மாயாதுமாட,—

சுத்தனாகி யான்மா - ஆன்மா மலமுத்தி மானாய்ச் சிவத்துவாருட சின்மாத்திரனாய் நிற்ப,—

காட்டக் கண்டிடுந்தன்மையுடைய கண்ணுக்கு - சடமாதலானுங் கண்காணு மென்ப துபசாரோபசாரம், முத்தியில் மலமறைப்பு நீங்குகின்ற காட்டு நாடாத ஸ்வதந்திரமாயக் காணுந் தன்மையுடைய தானுனும் பெத்தத்தில் மலமறைப்பினால் காட்டக் கண்டிடுந் தன்மையுடைய ஞானம் பிறசத்திக்கு,—

ஏயுமுயிர் காட்டிக் கண்டிடுமாபோல - பொருந்திய வானமா மனசையேவு மனசு கண்ணையேவக் கண் பிரசத்தியை விளக்கச் கிறசத்தி காண்பதுபோல,—

ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன் - பரிபூரணமாய்ப் பண்ணப்பட்டதற்குத் திரும்பப் பண்ணவேண்டுவது ரீதியில் நின்றுபாரார்த்தா விக்லியா மாதலால், காட்டித் திரும்ப விரும்பாதபடி சிவத்துவாபி வியத்திபண்ணத் தனக்குப் போசகபோக்கியமின்றி யுள்ளமை மாத்திரமாய்ப் பிராகருப் போசக போக்கியமாய்ச் சாக்ஷ சற்று சவிகற்ப விருவிகற்ப சாக்ஷாத்காரத்தாற் பதிமுதலிய முப்பதார்த்தங்களைச் சாக்ஷாத்கரிப்பன் -

இதனை யாயுமறிவுடையனாய - அப்போதவரு மிசசெயதியை யிப்போது சிவாகமக் கேள்வி சிந்தித்தலினாலவருங் கெளிவென்றுரைக்கும் பதிமுதல் முப்பதார்த்த சிவத்துவ பசுத்

ரண்டும் பிறிதொன்றற் சேறலின்றி அவ் வத்துவிதநிலை யொன்றேபற்றி முதல்வன் திருவடிக் கண்ணவாய் ஒருங்கு நிகழவே, காயமொழிதப்பின மலநீங்கிச் சுத்தனாய் நிற்குமுறைமை காயத்தோடு நிற்புழித் தானே கைகூடப் பெறுதலால், ஏனைக்கிரியையுமே எல்லாமலங்களையு மிம்மையே நீத்தொழித்து அவ்வறிவிச்சைகளோடொப்ப வொருவழிக் கொண்டு அம்முதல்வன் திருவடியைத் தலைக் கூடப்பெற்று, சிவானுபூதியே சுவானுபூதியாகக் கொண்டு வாழ்வ னென்பாம்.

• அத்துவிதநிலை விளக்குவதாகிய காணுமுபகார மாத்திரையே யீண்டுக் கூறப்புகுந்தார், இனி அது விளக்குதற் பொருட்டு ஐந்தாஞ் சூத்திரத்துட் கூறிப்போந்த காட்டுமுபகாரத்தையு மனுவதித்துடன் கூறினார்.

ஈண்டுக் காணுமுபகார மாத்திரையே கூறுதல் கருத்தென்பது முதனூலின் “உள்ளத்தைக் கண்டோட்டல்” என்பதற்கு “அவனு மவற்றது விடயத்தை யுணருமென்றது” எனக் காணுமுபகாரத்தையே வேறெடுத்துக்கொண் டோதத கண்ணழிப்புரையானு முணர்க.

காட்டுமுபகார மாத்திரையேயன்றி அதன்பினனாக வுடனின்று காணு முபகாரமும் வேண்டப்படுமென்பது எவ்விடத்தும் என்னுஞ் செய்யுளின் விளக்கக் காட்டுதும்; ஆண்டுக் காண்க.

காயமொழிக்காற் சுத்தனாகி யான்மா இத்தகையாயு மறிவுடையனுமென வினையும்

ஆகியென்றது பெயர்.

அகிலை யென்பதற்கு வேறுவே றுரைப்பாருமுளர்.

அகச்சுட்டு அதைக்க நின்றதனை யொழித்து வேறொன்றனைச் சுட்டுதல் செல்லாமையும் பிறவும் அவர் நோக்கிலர்

இருவகைப்பட்டு மொருவனே சேர்ந்துவந்து விளக்குவா ராய், மேலைச்சூத்திரத்து வேறுகூறுகையாது ஒருவாறு வலி யுறுக்கப்பட்ட மூன்றாம் கூற்றைக் காயமொழிக்காரச் சுத்தருஞ்சி யெனவும், அந்நிலைமையிற் றிலையி லடைந்த முறையாலே மாய மெலாம் நீங்கியெனவும், அதனுழிப்பாக ஈடுபடுத்துக் கொண் டாராகலின், அதனுளிப்பட்ட இச்செய்யுள் மூக்கூற்றதாய வாறு கண்டுகொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இந்தச் சரீரசம்பந்தம் நீங்கினாலான்மாக்கள் சிவனுடைய திருவடியைப் பெறுவது எப்படி? என்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

காயமொழிக்காரச் சுத்தருஞ்சி யானமாகக் காட்டக்கண்டு நந்தன்மை யுடையகண்ணுக் கேயுமுயிர்காட்டிக் கண்டுமேபோல விசனுயிற்குக் காட்டிக் கண்டுவ னிந்தையாயு மறிவுடையனா யன்பு செய்ய வனவிலமை யினனிலையி னடைந்தமுறையாலே மாயமெலாம் நீங்கி யரனடிக்கீழிருப்பன மாருதசியானுபவ மருவிக்கொண்டே - அன்னுவயம். மாயமெலாம் நீங்கிக் காயமொழிக்காரச் சுத்தருஞ்சி யானமவென்று பொருட்கூட்டுக. காட்டக்காணுந் தன்மையினையுடைய கண்ணுக்குக் காட்டுகிற முறைமையினையுடைய வானமாகக் காட்டக் காணுங் கண்ணைப்போல இவ்வானமாகக் காணும் பகுதிக்குள்ள கன்மத்தைச் சிவன் திருவுள்ளத்திலே யறிந்த ஆன்மாவுக் கறிவிக்கவறிவன இந்த உபதேசத்திலே யாராய்ந்திந்த மறவாதே பத்திபண்ணின் அந்தப் பத்தியினுடைய நிலையேதுவாக இப்பொழுது சிவனைக் கூடுகிற முறைமையாலே மலமாயா கன்மங்கள் ஞானமாகிய மயக்கங்க

செய்ய - அத்தொடர்பு பற்றிய அம்முதல்வன் திருவடிகளைத் தலைப்படுத்தற்கண் இச்சை யிடைப்படுது நிகழும் அங்ஙனமன்றி விசைகளிரண்டும் பிறிதொன்றிற் சேரலின்றி யவ்வத்துவித நிலையொன்றே பற்றி முதல்வன் திருவடிக்கண்ணவாய் ஒருங்கு நிகழவே,—அந்நிலைமை யிந்நிலையி னடைந்த முறையாலே - காயமொழிகளின் மலநீக்கச் சத்திகளும் நிறகு முறைமை காயத்தொடு நிறபுழித் தானே கைகூடப் பெறுதலால்,—மாயமெலா நீங்கி - வினைக்கிரியையுமே யெல்லாமலங்களையு மிம்மையே நீத்தொழிந்து அவ்விருவிச்சைகளோ டொப்பவொருவழிக் கொண்டு,—அரனமலரடிக்கீழ் மாறாத சுவானுபவ மருவிக்கொண்டேயிருப்பன் - அம்முதல்வன் திருவடியைத் தலைக்கூடப் பெற்றுச் சிவானுபூதியே சுவானுபூதியாகக் கொண்டு வாழ்வன்.

இக்கருத்தேயன்றே இருவகைப் பயன்களையு மொருங்கே சேரவைத்து விளக்குவாராய் மேலைச் சூத்திரத்து வேறுகூறுக வைடாது ஒருவாறு வலியுறுக்கப்படு மூன்றுங்கூறாதைக் காயமொழித் தாற சத்திகளுகி யெனவும் அந்நிலைமை யிந்நிலையி லடைந்த முறையாலே மாயமெலா நீங்கியெனவும் அதனொழிபாக வினைவிடுத்துக் கொண்டா ராகலி னதனோ டொப்ப இச்செய்யுள் முற்கூற்ற தாயவாறு கண்டுகொள்க.

---

## மறைஞானதேசிகர் உரை

மேலந்த ஜீவன்முத்தராக ஞேயத்தழுந்து
முறைமை யுணர்த்துகின்றது.

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தார்பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாராராயாக்க, வருஞானமபலஞானமஞ்ஞானமும் விகற்பம் வாசியவா சகஞானமு

ம் வயிந்தவத்தின் கலக்கம், தருஞானபோக ஞாதிரு
ஞானஞேயந் தங்கியஞானஞ் சங்கற்பனை ஞானமாகு
ம், திருஞானமிவையெல்லாங் கடந்தசிவஞான மாத
லாற் சிவன்முத்தர் சிவமேகண்டிருப்பர். (உ)

(இ-ள்) பரஞா பரனது ஞானத்திலே பரத்தைத் தரி
னத்தாற்ப சித்த சிவஞானிகள் தேகாந்தமளவு மேலா
ரத்தைத்த ன பரப்பிரமத்தையே தரிசித்துக்கொண்
ரிசித்தாற் பரமே டிருப்பார்கள்.
பார்த்திருப்பர்

இப்படிப் பரத்தைப் பார்த்திருக்கிற ஞாதாக்கள் இந்த
வுலகத்தினக ணுண்டாய மாயாபதார்த்தங்களைப் பார்த்திரு
ப்பார்களோ வென்னில்?

பதார்த்தங்க இந்த விசுவவியாபகையைப் பொருந்தியி
ள் பாரார் ரார்கள் அஃதென்போல வென்னில்? அமி
ர்தத்தைப் புசித்தவன் விடம்புசிக்க விரும
பாதவாறுபோல.

“உலகுளார் பெருந்துஞ்சு மொருபொருள் விழித்தயோ
கி, யுலகுளார் விழித்தபண்டத் துறங்குவ னுருவமாக, யுலகெ
னா மொன்றிவேறற வொளிருமொய பிலீதனஞானரு, ளலா
த்லேக் கண்ணிதயோகிக் கவனலா னேயமியாதே” என்றிக

அதனைப் பார்த்திருக்கிற குற்றம் யாதென்னில்?

பார்க்குவரு விசுவத்தி லுண்டாகிய கடபடாதி ஞா
ஞானம் பலஞா னங்களெல்லாம் பலவாகலானும் அவைகள்
ன மருஞானம் விகற்பமாக விசாரித்துப்பார்க்கி லதுவும
விகற்பம் வாச்சி ஞ்ஞானத்தா லுண்டான வாதலானும் வா
ய வாசகஞானம் ய்வழுக்காற் சொல்லப்படாநின்ற சத்தார்

| | |
|---|---|
| வயிந்தவத்தின கலக்க திருஞா ன போக ஞாதி ருஞான ஞேயங் தங்கிய ஞானஞ் சங்கற்பனை ஞா னமாகும | தத ஞானத்தையுண்டாகிற ஞானங்களெ லலாம விந்தவிற் றேறிய வைகரியாதி ஞானமும பரமமான பந்தமாதலாலும இ வைகளாகிய ஞாதிருஞான ஞேயங்களாகிய ஞானங்கள் மானமபோகத்தாற் கூடிய கிற ஞானங்களெல்லாஞ் சங்கற்பஞான மாதலாலும் இவைகளெல்லாங் கூடாத |
| திருஞான மி வையெல்லாங் க டந்த சிவஞான ம | சமயஞான மாவது அவைகளெல்லாத கையும பற்ற விசிட்டமான சிவனை பிரகா சிப்பிக்குமதாயுள்ள மேலான சிவஞானமே! |
| ஆகலாற சீவ ன முத்தா சிவ மேகண்டிருப்பா | இதுவே சிறப்பாகையினாலே சீவன்முக் தாகளக்ஞானத்தாற் றானே பரமசிவனு டன அனுசந்தானம பண்ணிக்கொண் டிரு ப்பாகள். எ-று. |

ஏகாரந் தேற்றம.

நீயாதே கேசுநீகரண வியுத்பபத்தியாலே ஞானமென னும பகுமுண்டாயிற றெனவறிக, இது வடமொழி

இந்த ஞானம பரம அபரமென விருவிதம

வாசசியவாசக ஞானம அபரமாதலாற றனிஞா

பதிஞான மேலான தாகையா லிதுவே சிறப்புடைத்தெ னபது

அஃதெங்க காரணத்தா லெனில? அந்தஞானம் பிரத்திய க்ஷம அனுமானம ஆகமமாகிய இம்மூன்றினுலும மதிப்படாத படியாற் கூறிய தெனவறிக.

இதற்குச சர்வஞானோத்தரம் சிவதருமோத்தரம யோக சம் ஹிதையம் மிருகேந்திரதது மறிக. (உ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

மேல் சீவன் முத்தர் சர்வமுஞ் சிவாகாரமாகவே காண்பர்களென்பது கூறுகின்றது

பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தார் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க வருஞானம் பலஞான மஞ்ஞானம் விகற்பம் வாச்சிய வாசகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்தரும் - பாசஞானத்துக்கும் பசுஞானத்துக்கும் மேலாயிருக்கிற பதிஞானத்தினாலே பாச பசுக்களுக்கு மேலாயிருக்கிற பதியை வேறறக்கண்டார் ரெவ்விடத்தும் பதியேகண்டிருப்பர், பதிக்கின்னியமாக வொருவஸ்துக்களையுங் காணார் வேறுவேறு வஸ்துக்களாகக் காணவருகிற ஞானமானது பலவாய மாயாவிகற்ப ஞானமாம் சொல்லும் பொருளுமாகிற ஞானம் விந்துவின் கலங்கற பிரதேசத்திலே யுண்டான ஞானமாம்,—போகஞானம் ஞாதுரு ஞான ஞேயங் தங்கியஞானஞ் சங்கற்பன ஞானமாகும் இந்ஞான மிவையெல்லாங் கடந்த சிவஞான மாதலால் சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர் - போகத்துக்குக் காரணமானது காட்டுகிறியுங் காணப்படும் பொருளுமாகிற திரிபுடி ஞானம் சங்கற்பஞானம். சிரீமத்தாகிய முன்சொன்ன சுத்தர் சுத்த மாயாஜன்ய ஞானங்களுக்கும் திரிபுடி ஞானங்களுக்கு மப்பாலாகிய சிவஞானமாகையால் ஜீவன் முத்தரானவர்கள் விகற்பமாகிய பதார்த்த ஞானத்தைவிட்டு நிர்விகற்ப ஞானமாக வெல்லாஞ் சிவமாகவே கண்டிருப்பரென்றிதன் பொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அபரோக்ஷப் போலிப் பரோக்ஷமாய்ப் பாவிக்குஞ் சிவ மாத்திர தேயநிர்விகற்ப சமாதியிற் சாத்த மனோகங்கார புத்தி சங்கற்ப காலபோத சிற்றுச சவிகற்ப நிர்விகற்ப சாத்த மாத்திர சாவார்த்த சிவ சாக்ஷாத்காரத்திற் போலப் பதார்த்தங்கள் தோற்றா. தோற்றுமாறு லக்ஷ்யஞானம் பிறவி பெருக்கும் பிராகிருத மனோகங்கார புத்தி சங்கற்ப காலபோத தூல சவிகற்ப ஞானந் துஷ்டஞ் சுத்தமன்றென்று சொல்லுகின்றார்.

பதார்த்தங்கள் பாரா ரென்பது பரமுத்தியிலென்று சிலர் படித்துப் பேசுவார்கள். சர்வ பதார்த்த காப்ப சிவ சாக்ஷாத்கார பூர்த்திப் பர முத்தியில் அவர்கள் தாழ்ந்த சமாதி நிலையைச் சாற்றுத லஞ்ஞானம். அதுவன்றித் 'தூரியனொரு சிவங் தோன்றுந் தானுந்தோன்றுந் தொல்லுலக மெல்லாந் தன்னுள்ளே தோன்றும்' என்பது முதலிய வசன விரோதமுமா மென்பதறிக.

வெளிப்படை.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இத்தகையாயுமறிவெனப்பட்ட பரஞானத்தால் அதனைத் தெளிய நோக்கி அன்பு செய்யப்பெற்றார், அவ்வொளியினையே யுணர்ந்துகொண்டு நிற்பரன்றி மேற்கூறிய பிராரத்தவாதனை தாக்குதற்குரிய ஏனைப் பதார்த்தங்களைச் சிறிதுங் காண்பாரல்லர். அவற்றைக் காண வருஞானங்களாவன? கருவிகளைப் பற்றி நின்றறியுங் காட்சியறுமென முறையெனம் பகுக்கப்பட்ட அ

ளவைஞானங்கள் அவையெல்லாஞ் சுட்டுணர்வின் பேதமாகலானும், ஏனைக் கேட்டலின் கண்ணதாகிய சாத்திரஞானம் நால்வகை வாக்கைப்பற்றி நிகழும் விகற்ப ஞானமேயாகலானும், சிந்தித்துத் தெளிதற் கண்ணதாகிய பேதஞானமும் பாவனை ஞானமாதலேயன்றி அநுபூதி ஞானமாகாமையானும், இவையனைத்தினுக்கு மேலாய் ஈண்டுக் கூறப்பட்ட விச சிவஞானமென்னறே பதார்த்தங்களைப் பார்க்கவாராத சிறப்புடைய ஞானமாகலான், இதனைப் பெற்ற சீவன் முத்தர் சிவமொன்றே கண்டிருப்பரன்றி ஏனைப் பதார்த்தங்களை நோக்கிப் பிராரத்த வாதனையிற் படுவாரல்லரென்பதாம்.

சிவமே கண்டிருப்பரென்றது முடிந்தது முடித்தல்.

ஏகாரம் பிரிநிலை.

ஈண்டு அஞ்ஞானமென்றது சுட்டுணர்வினை மேற்று.

கலக்கம் ஐயம்.

கேட்டலறிவு மேற்சிந்தித்துத் தெளியும்படி ஐயத்தை விளைத்தல்பற்றி, அதனைக் கலக்கந்தரு ஞானமென்றார்.

போகத் தங்கிய ஞானமென்றது அக்கலக்கந் தருஞானம் போம்படி யவ்வாறு தங்கிய ஞானமென்றவாறு

சீவன்முத்தர் பிறிதொன்றனைப் பாரரென வரையறுத்தோதிய விதனுனே, பிராரத்தவினை மங்கிப்போயவழியும் மங்காது நின்று நிழல்விப்பதாகிய அதன் வாதனை பற்றறக் கழியுமாறு சாதிக்கப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

சரீரத்தை நீங்கின பரமுத்தியிலே சிவானுபூதியைப் பெறுமதொழிந்து சரீரத்தோடே கூடியிருக்கச் சிவானுபூதியுண

டாவதெப்படியென்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச்செய்கிறார்

பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தார் - மேலான சிவஞானத்தாலே அசத்தியத்தை அசத்தியமென்றறிந்து நீங்கிச் சத்தியமாயுள்ள பரமேசுரனைத் தரிசித்தவர்கள்,—பரமே பார்த்திருப்பர் - அந்தப் பரமேசுரனை எவ்விடத்திலுங் கண்டிருப்பார்கள்,—பதார்த்தங்கள் பாரார் - வாதனா மார்க்கத்தாலே பிரபஞ்ச விஷயங்கள் மேலிட்டாலு மதிக்கமாட்டார்கள் —பார்க்கவருஞானம் பலஞான மருஞானவிகற்பம் - அந்த விஷயங்களோடே கூடிநின்று பார்க்கவுண்டான வறிவு வெகுவிதமானவறிவு மாட்டா மயக்க விகற்பமுமாயிருக்குமொழிந்து,—வாச்சிய வாசகஞானம் வைகந்தவத்தின் கலக்கந்தருஞானம் போகம் - வைகந்தமாகிய சுத்தமாயையினுண்டான வாசகமாகிய சத்தமும் வாச்சியமாகிய அர்த்தமுமாயிருக்கிற வறிவு சத்தந்தான் பிரமமென்றும் அர்த்தந்தான் பிரமமென்று மயக்கத்தைத் தருகிற ஞானமா மவைநீங்க,—ஞாதிருஞானஞேயம் நீங்கிய ஞானஞ் சங்கற்பனை ஞானமாகும் - காண்பானுங் காட்டுவதுங் காணப்படுகிற பொருளுமாயிருக்கிற ஞானஞ் சங்கற்பித்திருக்கிற ஞானமாம் அவைநீங்கத்,—திருஞான மிவையெல்லாங் கடந்த சிவஞானம் - அழிவில்லாத ஞானமாவது இவையெல்லாந் துக்கு மப்பாற்பட்டு வாக்கு மனோகோசரமாயிருக்கிற சிவஞானமாயிருக்கும் — ஆதலால்சீவன்முத்தர் சிவமேகண்டிருப்பர் - ஆகையினாலே ஜீவன் முத்தராயுள்ளவர்கள் வாதனையாலும் அபுத்தி பூர்வத்தாலுண்டாகிய பிராரத்தம் புசித்துத் தொலையுமளவும் கனவிலும் நனவிலு மந்தச் சிவத்தையே தரிசித்துக்கொண்டிருப்பார்கள்

இதனாற் சொல்லியது, உபதேசக் கிரமத்திலே உண்மையைப் பெற்ற ஜீவன்முத்தராயுள்ளவர்கள் பிரபஞ்ச விஷயங்க

ஆயு மசத்தமும் சத்தமாயிருக்கிற வைந்தவ ஞானத்தையும் விட்டு ஞாதுரு ஞானஞேயங்களையும் கழன்று இவையிற்றுக்கு மேற்பட்டு சிவஞானத்தாலே சிவனைத் தரிசித்து அனவரதமு மந்தச் சிவமேயா யிருப்பர்களென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் - இத்தகையாயு மறிவெனப்பட்ட பரஞானத்தா னதனைத் தெளியநோக்கி யன்பு செய்யப் பெற்றோர்,—பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் - அவ்வொன்றனையே யுணர்ந்துகொண்டு நிற்பரன்றி மேற் கூறிய பிரார்த்தவாதனை தாக்குதற்குரிய வேனைப் பதார்த்தங்களைச் சிறிதும் காண்பாரல்லர்,—பார்க்கவருஞானம் பலஞானம் அஞ்ஞானவிகற்பம்-அவற்றைக் காண வருஞானங்களாவன? கருவிகளைப்பற்றி நின்றறியுங்காட்சியனுமான முறையெனப் பலவகைப்பட்டனவை ஞானங்கள். அவையெல்லாம் சுட்டுணர்வின் பேதமாகலானும்,—வாச்சிய வாசகஞானம் வயிந்தவத்தின் கலக்கம் தருஞானம் - ஏனைக் கேட்டலின் கண்ணதாகிய சாத்திரஞானம் நால்வகை வாக்கைப்பற்றி நிகழும் விந்து ஞானமே யாகலானும்,—போக ஞாதுரு ஞானஞேயங் கலங்கிய ஞானஞ் சங்கற்பனை ஞானமாகும் - சிந்தித்துத் தெளிதற் கண்ணதாகிய போகஞானமும் பாவனை ஞானமாதலே யன்றி யறிந்திஞான மாகாமையானும்,—இவையெல்லாங்கடந்த சிவஞானத்திருஞானம்- இவையனைத்திற்கு மேலாக விளங்கு கூறப்பட்ட இச்சிவஞானமொன்றே பதார்த்தங்களைப் பார்க்கவாராத சிறப்புடைய ஞானம்,—ஆதலாற் சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்-ஆகலான் இதனைப் பெற்ற சீவன் முத்தர் சிவமொன்றே கண்

டிருபபரணறி யேனைப் பதாாததஙகளை சோககிய பிராரததவா
ககளையிற படுவரலலா.

சிவன முததா பிறிதொனறனைப் பாராரெனவர்புறத்
தோதிய விதனுனே பிராரததயினை மஙகிப்போய வழியு மகா
காதநின றுமல் விபபதாகிய அதனவாதனைய பறறறக சழியுமா
று சாதிககபபட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேற சிவசமவாதி சரீர நீஙகி முததிபெற வே
ணுமோ முததியினும நிததியததவம பெ
றறிருககலாமோ வெனறு வினவ
வுணாததகினறுா.

அநாதியுட லொனறினைவிட டொனறுபறறிகக க
னமாலா யழிநது வருதலினு லநதமில்லைய, பிறுதியரு
ள பெறறவாக ணிததவுரு வததைய பெறறிருககை மு
த்தியெனிற பெறும்பதமே யிதுவு, மிறுதியில் யிது
தானுங காயமுணடே யிருஙகன்ம மாயமல மெல்லா
முண்டா, மநாதிகரு முடலாதி காரியத்தாலநாதி மல
மறுககு மருந்தறறு வுடன்மாயுங காணே. (ரு)

(இ-ள.) அநாதியு இசசரீர மநாதி. அஃதெக காரணததாலெ
டல் வில?

ஒனறினைவிட் பழம் புடவையைப் போட்டு வேறோ புது
டொனறுபற்றிக் ப்புடவையை யெடுககுமாறுபோலக கனம
னமாலா யழிக த்துக இடாக வெடுத்த ஆவுடலை விடடு

து வருதலினால் — வாசனாத்மகமாகிய சூக்குமவுடலைப் பற்றிப் பிறந்து மிறந்தும் ஜலப் பிரவாகம்போல ஜனனங் கோடிந் தொடர்ந்து அது பிரவாஹநாதியாய் வருகையினாலே

அந்தமில்லை — உலவாக்கிழிடான மெப்படி முடிவின்றி யிருக்கும், அதுபோல விந்தத் தேகத்துக்கு முடிவில்லை

பின்னும் — பின்னொருகாலத்தின் மாயாகாரியமாகிய வடிவையெடுத்து நாச மடைந்திருக்கையா லாதியென்று சொல்லவும் பெறும்

அருள் பெற்ற வாகனிந்த வுருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனில் — அந்த வருளைப்பெற்ற முத்தான்மாக்களைப்போல நித்தியத்துவமே பெற்றிருப்பதே முத்தியென்று நீ சொல்லில?

பெறும்பரமே யிதுவும் — இந்த நித்தியத்துவம் பெற்றிருப்பது மொரு பக்ஷப் பிராப்தியைப் பெற்றிருப்பதுதானே

இன்றுதங்கிலை யிதுதானும் — இந்த நித்தியத்துவம் பெற்ற சரீரந்தானும் பொல்லாததே, அஃதெங்கே காரணத்தாலெனில்?

காயமுண்டே யிருக்கன்ம மாயை மலமெல்லா முண்டாம் — சரீரமென்ப தொன்றுண்டாகவே யதற்கேற்ற கன்மமுண்டாம் அஃதுண்டாகவே மாயையு மலமு மிவைகளெல்லா முண்டாய் விடுந்தானே.

மனுதிகரு முடலாதி — மனோவாக்குக் காயமாகிய மூவிதத்தானு மாரசஞ்சித கன்மமுண்டாகவே யதற்கேற்ற தனுகரண புவனபோக முண்டாமாதலா லிதுவு மாதியென்பப் பெறும்.

தமுத்தியே காயத்தோடே யிருப்பது. குற்றம்பொருந்தின நிலை மைய தெவ்வா றெனனில்? மாயாதேக முண்டான போதே பெரிதாகிய கன்மமு மாயையு மாணவமு மெல்லாப பந்தமு முணடு. ஆகில * விதேக + கைவல்லிய முண்டாமபடி யெவ்வா றெனனில?—அநாதிமல மறுக்கு முடலாதி மருந்து தருங்காரியத்தாலறமு லுடலமாயுங்காணே - அநாதி காதகரவாகிய சிவன ஆன்மாவுக் கருகி சமபந்த மாகிய வாணவமலத்தை யறுககுந் தேகாதி மருந்தைக் கொடுப்பன அந்த தேகேந்திரியாந்தகரண வியாபாரமாகிய போகத்தினாலே ஆன்மா வியாபியாகிய வாணவமலம பரிபக்குவமாய் நீங்கினால் ஔஷதமாகிய தேகாதிகள பொருந்தாமல கசிக்கும. ஆகலால் விதேக கைவல்லியமே பரம முத்தியென றிதனபொருள்

ஏகார மீற்றசை

* விதேக - தேகமில்லாத, + கைவல்லியம - முத்தி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சாரூப முதலிய பதமுத்தி, பரமுத்தி யன்றெனபது படிக்கின்றார

அநாதிதருமுடல - சிவனு மாயையுங் கொடுக்குஞ் சரீரம.

மறறைய வெளிப்பொருள

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

உடம்பாவது அநாதியாயுமிவைப்பற்றி நீரோட்டம் போலத் தொடர்ச்சியாய் வருவதுதலான அதற்கொரு முடிபு கூறுத

ணித்தவுருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனில்- இப்படிக்க னயம் புசித்துத் தலைத்தபின்பு வேட்டுவனி யொன்று மறியா ப பச்சைப்புழுவை யெடுத்துத் தன்சொரூப மாக்கின தன்மை போல, ஒன்று மறியாமற் கிடக்கிற வானமாயையுஞ் சிவனுடை ய ஞானமெடுத்துத் தன் ஸ்வரூபமாக்க அந்த மாயாவுடலே நித் த தத்துவத்தைப் பெற்றிருக்கிறவர்கள் ஸ்வரூபத்தை நீங்கியும் பெற்றிருக்கிறது முத்தியென்று நீ சொல்லில் ?—பெறும்பதமே யி தவும் - சரியைகிரியா யோகங்களைச் செய்தவர்கள் பெறுகிற பதமுத்தி யொழிந்து சாயுச்சியமாகாது.—இருந்தில யித்தா னுங்காயமுண்டே விருங்கன்மமாயை மலமெல்லாமுண்டாம் - இந்த முத்திதானும் பொல்லாதென்னாது. அதெப்படி யென்னி ல் ஒரு வடிவுண்டான பொழுதே வேறுவிதமான கன்மமும் அ தனுடே மாயையும் இவ்விரண்டுக்கும் காரணமாயிருக்கிற மல மும் சருவமு முண்டாகா நிற்கும் —மருதிக்கருமுடலாதி காரி யத்தா லனாதிமலமறுக்கு மருந்து - மனம் புத்தி அகங்காரம் த னமாக்கினையென்று சொல்லும் புரியட்டகதேகமுதலான தனு கரண புவன போகங்களென்று சொல்லு மருந்தைக்கொண்டே பரமேஸ்வரன் அநாதியே ஆன்மாக்களை மறைத்துக்கொண்டு நிற்கிற மலத்தைப் போக்கா நிற்பன —அற்று வுடல் மாயுங் காலே - ஆகையா லந்த ஆணவமலம் போகவே நீ முத்தியி லழி யா தென்ற மாயாசரீரமு மழிந்துபோமென் றறிவாயாக

இதற்குப் பிரமாணம் சக்கறபகிராகணம் சிவசமவாதம த்ம. "முனைந்தென்றனது முதிரொளிஞான - மறியாப்பச்சைச் சிறுபுழுக்கவாக்க - வண்டெனவுயிரைக் கொண்டியியிரது-த னைதெருங்கித் தானதுவாகி-யையவகைத்தொழிலு மெவ்வகையு னவும்-பிரியாவாறும்பெற்றது கிரியைப்பெரியோர் திரட்டிசே ரத்திடுமே" என்றும், அவன்மறப்பு "முத்தியுற்ற ஈறவரவை

யிடை - சேரவொன்றனை சாரகருமுக்தி - சாலோக்கியமோசா
யுச்சியமென்ற - பந்தமுற்ற கக்கலகழிக்க - வறிவுகொடறிவு பி
றியாபபெறறி - வேண்டுமென்றகற் ஜேணைடிவரிவவா - றிருபப
ரொனபதற குருதகாணவேண்டும்" என்றும், "இசசாருப நசசி
வொனனில - மும்மலதத்தே தமின்மையதனறே" என்னுமதுவ
கண்டுகொள்க.

இதனுற சொல்லியது, சமவாதி யருளைப்பொருந்தின வா
னமாக்களுடைய மாயாதேகந தானே முத்தியிலஙந்த ந்தத்துவ
தகைப் பெறறிருக்கு மென்று சொலல அதுபசமுத்தியாவதொ
ழிநது சாயுச்சிய மாகாதென்றும் யாதொரு சரீர தொக்கனை
யுள்ளமட்டுமெ மூன்று மலமும் நீங்காதென்றும இநத மாயாசரீர
மலத்தையபோக்க வநததென்றும் ஆகையால இந்தமமலம நீ
ஙகினபோதே மாயாசரீரமும் நீங்குமென்னு முறைமையு மறிவித
தது

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

——o——

உடலனுபவிற்றி யொனறினை விட்டொனறு கனமாலா
யழிநது வருதலா லந்தமில்லை - உடம்பால் தனுதியா யுயிரைப
பற்றி நீரோட்டம்போலத் தொடாச்சியாய் கனமத்திற் கேறப
வாசியு மழிநதும வருவதாதலா னதறகொரு முடிபுகூறுதல
பொருநதாமையான,—பிறுதியருள் பெற்ரயாக னிதத வுருவ
தகைப் பெற்றிருக்கை முத்தியெனில் - முதல்வ னருளைப பெ
ற்றவர்கள் முத்தியினு மிவைபோலனறி நித்திய சுத்தமாகள ம
யமான சிவவியசரீர முடைனுமுருவ சிவசமவாதிகள ம
தமடாது.—காயமுண்டேன் மாயை யிருங்கணம மலமெல்லா
முண்டாம்-உடம்புளதாகவே யதற்குக் காரணமாகிய மாயை

புமதனக ளிகழு முன்டிவினைகட கேதுவாகிய கனமமு மத னை இயைவிபப தாகிய ஆணவ மலமும விடடு நீஙகுதலின மையின,—இநதாறு மிரு ததிலை-இதவு மினஞமைமயைப பப கரு நிலையயாகலானும,—இதவும பதமேபெறும-ஆகவே யத னை முததியெனபதறகுக காரடரியம பதமுததியெனபதே யா மாகலானும,—மறுதிகருமுடல் காரியததா லாதி-மனமுதலிய புரியடடக வுடமபி னினறுங தோனறுவதாகிய விவவுடமபு அ ககாரிய வேறுபாடடா லாதியாய்,—அநாதிமல மறுககு மருந தாரு ளுடன மாயுஙகாணே- அநாதியாகிய மலநோய தீரததற கு மருநதாயவரும இஃது அககாரண.நீஙகியவழிந தானுமுட னீஙகுவதனறி நிறறறகோ ரியையினமையா லகதமாதற்க ணு சஙகையினமையானும.

இததனனே மாயாமலம பற்றறக கழியுமாறு தடைவிடை களாற சாதிககப படடது

## மறைஞானதேசிகர் உரை



இந்தச சீவனமுததாகளு முற்கூறிய மலவாதனை கெ
டடு நீஙகுமதற குகாரணமிட் டுணர்த்துகினறார்

தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்நதவாறே சிவம்
பிரகா சிககுமிஙகே சீவனமுத்தருக்கு, முரியமல மெள
டததாற றடிபபுணடவிடமு மொளமெளரியி னொளி
முன்ன ரிருளுஙகேறயின், வருபால்சேர் நீமருவுங க
லஙகளும்போலாகி மாயாதே தன்சத்தி மாயநதுகாயங,
திரிபுமள வும்முளதாய் பின்புகாயஞ் சேராத வகைதா
னுஙகேயுமனறே. (௪)

காயந்திரியுமன் இப்படியே தேகாந்த மளவு முண்டாய்.
வும் முளதாய்
பின்பு காயஞ் பின்பொரு சரீரமெடாதபடி பண்ணினின்
சேராதவகைதா று தானும் போம். எ-று
னுந் தேயுமன்றே.

தானும் மென்னும் உம்மை மாயையுமென விரந்தது தழீஇய வெச்சமாயிற்று.

இதனாற் சுபபிரயோதம் கிரணகமம் (௪)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.



ஆகில் தேகாந்தத்திலேயல்லது மோக்ஷமில்லையோ வென்னில் இவ்விடத்து ஞானோதய காலத்திலே ஜீவன்முத்தி, தேகாந்தத்திலே பரமுத்தி யென்பது மேற்கூறுகின்றது.

மெஞ்ஞானஞ் சேர்ந்தவாறே தெரிவரிட சிவமப்பிரகாசிக்கு மிங்கே சீவன்முத்தருக்கும் - சத்தியஞானமானது ஆன்மாவினிடத்திலே பிரகாசித்தவாறே பாசபசு ஞானங்களினாலே தெறித்தறிகரிதாயிருக்கச் சச்சிதானந்த மயமான சிவம் ஆன்மாவுக்குவேறா அபின்னியத்தியாம் அப்போதே யிந்தப் பூமியின்கண் பிராரப்த தேகத்திலேகாணே ஜீவன்முத்தராம் ஜீவன்முத்திக்கும் விதேக கைவல்லியத்துக்கும் பேதமேதென்னில்?—உரியமலமாயாகே சத்திதானமாய்ந்து காயந்திரியமளவு முளதாய்ப் பின்பு காயஞ் சேராதவகை தானுந் தேயுமன்றே - மல மென்றது மும்மலத்துக்குஞ் சாதி யொருமை ஆன்மாவின் ஞானத்தை மறைத்து விஷயங்களிற் பொருந்திப் புசிப்பிக்கும் ஆணவ மாயை காமிய மூன்றும். சத்திகள் கெடுத்தாங்கெடாமல் பிராரப்தத்தேக முள்ளளவும் நின்று பிராரப்த தேகாசத்துக்குப் பிற

கு சேர்க்கமுண்டாகாதவாறு மும்மலங்களுமுத்தனுக்கில்லை பரம
மும்மலங்களுமிருந்த ஆன்மாவுக்குச் சர்வஞ்ஞத்துவமில்லாமல்
மாயாகாரணங்களையும் பொருந்தி விஷயங்களையும் புசிப்பதனு
டாகக் காண்கையால் பெத்தனேயென்னில் பந்தமில்லாத வகைச்
சுத் திட்டாந்தங்கூறுகின்றது.—ஒண்ணிறி லெரிமுன்னிரு
ளுஞ் சேர்றினவருபால்சோதிமருவுங் கலங்க லவுடத்தாற் றுப்
புண்ட விட்டமும்போலாகி-உவமை எண்ணுமை போலாகி வெ
ண்பது பக்கந்தோறு மொட்டிப் பொருளுரைக்க கெல்ல வசந்திப்பி
ரகாசத்திலே சமீபத்திலேயிருளில்லாமல் தூரத்திலே நின்றுவு
ம் சமீபத்திலேயிருக்கப்போகக்கு வஸ்துக்கள் தெரியதுபோல ஜீவ
ன்முத்தனுக்குச் சர்வஞ்ஞதையில்லாதிருக்கினுஞ் சிவானுபூதியு
ண்டாகலா லாணவமல பந்தமில்லை. சேறுருணிறுண்டாகிய விரை
யை யுரைத்த கண்ணோத்தி மண்ணடியிலுங் கண்ணோமேலுமா
கப் பிரித்திரிந் தொன்றினுலே கலங்கி மண்ணுந்தண்ணீருமுன்
போலச் சேற்றுநீரோ யிருந்துந் தானே தெளிவதுபோல ஜீவ
ன்முத்தன வாதனையினாலே விஷயங்களுடனே கூடினாற்போ
லிருந்துந் தானே யந்தவிஷயங்களுக்கு வேருயநிர்ப்பனு. அது
போல மாயாபந்தமில்லை விடத்துக்கு மாறுன ஔடதத்தை யு
ண்டேகொண்டு பாம்பினுலே கடிபட்டுக் கொண்டா லந்த
விடமேறுமற் றண்டையானதுபோலச் சிவபாவனையைப் பண்ணி
க்கொண்டு அநேக போகங்களைப் புசித்தாலுமதனுற புண்ணிய
பாபங்களொரு தாக்கையாத கன்மமல பந்தமில்லையென் றிதன
பொருள

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சமாதி சித்திதரா லொருபிரகார மலம் நீங்கிச் சிவனுமு
த்தி சிவ சாக்ஷாத்காரஞ் சித்திக்கும். சித்திக்கப் பிறபு சரீர

குரோதல்பற்றி அதன்கட் கழிபேருவகையாமாறுபோல அர
னடியாரடியாரை யடைந்திட்டவாகரும முன்கருமமாக ஆ
சையுடன்செய்து - மாறுதசிவாநுபவ மருவிக்கொண்டரன்ம
லரடிக்கீழிருக்கப் பெற்றாற்கு அதனைவளர்க்கு நீர்மையராகிய
வத்தொண்டர் புடையாரோ டிணங்கி யவர்பணியை யுன்பணியா
கவே தற்போத முனைந்தலின்றி விருப்பத்துடன் செய்தற்கண்
உவகை மிகுதியும் காமுகரல்லாதார் திணைக்க மதனைப்பயரச்செ
யுங் கலையாதல்பற்றி யதன்கண் வெறுப்பு மிகுதியாமாறுபோ
ல,—அறிவிலாப் பிணங்களோ டிணங்கிற்பிறப்பினிலும் பிறப்பினிலும
பிணங்கிடுவர் விடுகி - அதனைக்கெடுக்கு நீர்மையராகிய அறிவி
லாரோ டிணங்கிற் பிறப்பிறப்பிற் படுத்துவராதலி னவர்கண்
வெறுப்பு மிகுதியும் உளவாம், அதனைவிட்டு நீங்கி,—கூசிமொ
ழிந் தருண்ஞானக்குறியினின்று - அடியார்தாயாவு முன்நிழ்வு
நோக்கிக் கூசி நயமொழி கூறிச் சிவஞானத்தா லிரண்டறவக
தவித்த நிலையினின்று,—கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடி
த் திரியே - அவ்வுவகை மிகுதியாற் கும்பிட்டுக் கைகொட்டிக்
கூத்தமாடித் திரிவாயாக வென்பதாம்.

இதனானே இரண்டாங்கூறு தெரித்துணர்த்தப்பட்டது
முதற்கூறு செங்கமலத் தாளிணைகள் சேரலொட்டாத திரிமல
ங்களை வாண்டே யுடம்பொடு புணர்த்து ஒதி வலியுறுத்தமை
யின் வேறு கூறிற்றிலர்.

---

கஉ-சூ, உ-அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை

சிவன் திருவேடத்தானை யுண்டாக்கிச் சர்வாணமாக
கலையு மீட்டுக்கையின்பொருட் டோர
சிறப்புவிதி புணர்த்துதினைரூர்

அறிவரியான் றனையறிய வாக்கையாக்கி யங்கங்கே
யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற், செறிதலினாற் றி
ருவேடஞ் சிவனுருவே யாகுஞ் சிவோகம்பா விக்கு
மத்தாற் சிவனுமாவர், குறியதனை யிதயத்தே யரனைக்
கூடுங் கொள்கையினா லவனாவர் குறியொடுதா மழியு,
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்று நேசத்
தாற் றொழுதெழுமின் பாசத்தாள் விடவே. (௯)

(இ-ள்) அறிவரியான் றனையறிய வாக்கையாக்கி — ஆன்மாக்களுடைய மனோவாக்குக் கெட்டாத சிவன் றனது காருண்ணியத்தாலே யாவருந் தன்னையுணர்ந்து வழிபடுதற் பொருட்டு மாயாகாரிய மாகிய வுடலைப் படைப்பித்து,

அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத்து — எண்பத்துநான்கு நூறாயிர யோனிபேதங்க டோறு மவ்விடத் தவ்விடத்திலே யான்மாக்க டோறு முயிர்க்குயிராய்நின் றதற்கேற்ற ஞானத்தைப் பிரகாசிப்பித்து நிற்றலால்

அருளாற் செறிதலினாற் றிருவேடஞ் சிவனுருவே யாகும் — சிவன் றன் றிருவருள் அவ்விடங்க டோறும் வியாபித்து நிற்கிறத்தினாலே அவனது வேடமாகிய திருநீறு முருத்திராக்கமுந் தரித்திருக்கு மடியார்களையுஞ் சிவனுடைய திருமேனியென்றே கொள்ளப்படும். அஃதன்றி,

சிவோகம் பாவிக்குமத்தாற் சிவனுமாவர் — சோகம் பாவனை பண்ணும்பொழுது அத்துவிதமாகப் பாவிக்குமதனாலே இந்த ஞானவான்களைச் சிவனென்று சொல்லப்படும். அஃதன்றி,

குறியதனுவி நயந்தேயரனை க் கூடினகொள் கையினுலவனு வா

ஆசாரியன காட்டின குறிவழியே நின்று தங்கள் மிருதயங்களிலே சிவனை யந்தரியாகமாகப் பூசித்து முடிவிலே கண்டுகொண்டு தானந்தி லேயோகமும் பிரபலித்துக் கொண்டிருந்த கோட்பாட்டினாலும் சிவனுக்கே சிறப்பார்கள்.

குறியொடுதா மியு நெறியந் ஞற சிவமேயா ய் நின்றிடுவா

இப்படிப் பலவாகத் தாங் குறித்துக்கொண்டு நின்ற குறிப்புகளுங் குறிக்கறியும் புத்தியாதிகளுஞ் சேர விலயிக்கைப் பொருந்தினவிடத்து நிட்டையைப் பொருந்தி நிற்கிற வழிபாட்டினாலும் சிவமேயாய் விடுவார்

என்றால்

இப்படி பேதங்கள் பலவாகக் காட்டுகை யின்ற திருவேடத்தாரோ டணிக அஃ தெக்காரணத்தா லெனில்?

நேசத்தார் றொழுதெழுமின பாசத்தாள விடவே

பாசத்தாள விடவே நேசத்தார்த்தொழு தெழுமின எனப் பதமாறுக. யாதாமொருவரொருவன வீட்டிற் களவுகொள்ளக் கருதுமவன அவன வீட்டுத் தாழ்க்குப் பொடிப்போட்டுத் தியதை விடுவிக்கு மாறுபோல,

இந்த வாணமாக்களையுஞ் சிவன முத்தி யடைவிக்கையின் பொருட்டு இவர்களை வணக்கஞ்செய்யவே புனனைவிட்டு நீங்கவொட்டாம லிருக்கிற அஞ்ஞானமாகிற கபாடத்தைப் பதித்திருக்கிற பாசமாகிற தாள கழன்று நீங்கி யதுபோகவே பிரகாசமுண்டாம். எ-று.

இரண்டா முருபு காலாமுருபாய் மயங்கிற்றென வறிக.

இதற்குக் காரிகமெனவறிக. (க.)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலஞ்ச சிவபத்தர்களிற்கு நிலைமையாற சிவனெனவே வழிபடுகவென்று கூறுகின்றது.

அறிவரியான றனையறிய வாக்கையாகக் யங்கயகே யுயிராக குயிரா யறிவுகொடுத் தருளாற செறிதலின்றற திருவேடனு சிவனுருவேயாகும - பாசவறிவாலும பசுவறிவாலும மறிதறகரிதாகிய சிவன றனனை யுணருமாறு தவமபணணும தேகததையும தபோவேஷததையுங் கொடுத் தந்த தேகததில ஜீவாதமாககளிடததிலே பரமாதமாவாக நின்று சிவஞானததைப பிரகாசிப்பித்தக கருணையினாலே பிரிவறப பொருந்துகையினால் சிவனுடைய வேஷத்தைத் தந்த தேகம சிவனுடைய திருமேனியேயாம. இது ஞானசரிதைபணணு மவரைச சொன்னது —சிவாகம பாவிக்குமதநாற சிவனுமாவா; பூதசுத்தியானநதரம சிர்கணடாதி மாதிருகை பஞ்சபிரம ஷடங்க காஷடததிருமசத கலா வியாசஙகளைப பணணிச் சிவோகமெனறு பாவனைபணணுமததாற சிவபாவனையும, உமையினாற் ஜீவபாவனையு முடையவரகளாவாகள். இது ஞானததிற கிரியாவானைச் சொன்னது — குறியதனுலிதயததே யரனைககூடுங் கொள்கையினு லவனுவா - அஷடகலாப + பிராசாதத்தை இருதயாதியாகப் பிரம்மாதி காரணத் தியாகக் கிரமத்திலே துவாதசாந்தமாகிய உனமனை சத்தி சுகிதரான—அகாசிருக்கை வேறறப் பொருந்து முறைமையினு லககப பரமசிவனும். இது சிவஞானயோகியைச சொனனது —குறியொடு தாமழியு செறியதனுற் சிவமேயாய் நிற்றலினவர் - ஞாதுரு ஞானஞேயமென்னு மூன்றும அழுவிழோ சந்தி சிவசமமா வெனனும பேதமறச் சிவமேயாவா ரொாரதேறறம். தேறறமாவது, சிவனேயல்லது ஜீவபாவனு சறறமில

லை யென்றது,—என்றால் - இவ்வாறு ஜீவன்முத்தரான போக ள் சிவனேயென்று வேதாகமங்கள் சொல்லுகையினாலே,—நீங் சத்தாற்றெழுந்துபோ பாசத்தாரவிடவே - சிவனன்பரா மிருந்த த வனபினாலே நீ வணங்கி வழிபடு, உன்னைப் பந்தித்திருக்கும் பாசங்களானது நீங்கிவிட

பாசத்தா ரென்றது இழிவின வந்த உயர்திணை வாய்ப் பாடு

ஏகார மீற்றசை

+ ப்ராசாதம்-உபரிகை, — அநாசிருதர்-ஒன்றையும்பொ ருந்தாதவர்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சிவோகம் பாவனை பண்ணு மவர்களுந் தாசோகம் பாவ னை சத்தருவாளுடும் பாராகுற்ற பொது பாவனை பலிக்கு மு பாயம் பண்ணலாமென்று படிக்கின்றார்

சிவோகம் பாவிக்குமத்தால - அறியாமை யறிவகற்றியெ னும் திருவிருத்த முதலியவற்றிற் செப்பியபடி சிவோகம் பாவ னை பண்ணுதலால் பாவனு சாமர்த்திய மில்லாத போது,—குறி யதஞ்லிதயத்தே யானைக் கூடிக் கொள்கையினாலே - இருதய கம லத்துற நீரா கிருதி சாதா கிருதி சதாசிவா கிருதி முற்ற சகள நி டகள சகள சாகாரத் தனமையினுற சிவனைத் தியாணிக்குளு செ யதியினாலே,—அவனுவர் - சிவ சமான சாதிசயனுவர்,—கு றியொடு நாமழியும் நெறியதனால்- நிராகார சிவ சமாதியில்,— சிவனேயாய நின்றிவோ-சிவனைப் போற் சிவனுவர்.

மறைறைய வெளிப்பொருள்.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அறிவறியான - அசிந்திதனாய்நின்ற பரம்பொருள்,—தன்னை யறிய - உலகத்துள்ளார் தன்னை யறிதற்பொருட்டு,—யாக்கை யாக்கி - திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தன்வடிவத்தைத் தன் அன்பர்க்களித்து,—அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத்து - யாங்கணு முயிர்க்குயிரா யறிவினைவிளக்கி,—அருளாற்செறிதலினால் - அருளாற் கலத்தலால்,—திருவேடஞ் சிவனுருவேயாகும் - அத்திருவேடத்தானுஞ் சிவமேயாதல் தெளியக் கிடத்தலானும்,—சிவோகம் பாவிக்குமதனால் - சிவோகம் பாவனையானும்,—சிவனுமாவர் - சிவமேயாதற் றெளியக்கிடத்தலானும்,—இதயத்தே குறிப்பதனா லரனைக்கூடுங் கொள்கையினால் - இருதயத்தானத்தி லொருகுறியினைக்கண் வைத்து முதல்வனைக் கூடுஞ் செயலானும்,—அரனாவர்,—சிவமேயாதல் தெளியக்கிடத்தலானும்,—குறியொடு தாமழியுநெறிப்பதனால் - குறியுடனே தாமென்பதொன்றின்றாகிய தன்மையானும்,—சிவமேயாய்நின்றிடுமென்றால் நேசத்தானீ தொழுதிடு - சிவமேயாதற் றெளியக் கிடத்தலானும், அதுபற்றி யவரை யானென்னவே தேற்றி வழிபடுக,— பாசத்தார்விடவே - ஏனைப் பாசப்பற்றுடையார் அதுபற்று விட்டொழிதற் பொருட்டென்பதாம்

## மறைஞானதேசிகர் உரை

சிவன் சர்வ வியாபியாயிருந்தாலுந் தன்னிடத்
தன் புடையார்க்குச் சாந்நித்திய மாகு
முறைமை புணர்த்துகின்றார்

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே, யு
ருக்கோலி மந்திரத்தா லேநினையு மவர்க்கு முளனங்கு
மெய்க்குமில னிங்குளனென் பார்க்கு, விருப்பாய வடி-
வாகி யிந்தனத்தி னெரிபோன் மந்திரத்தின் வந்தி
ப்ப னிருஞ்சுரபிக் கெங்கு, முருக்காண வொண்ணாத
பான்முலைப்பால் விம்மி யொழுகுவது போல்வெளிப்
பட் டருளுவ னன்பர்க்கே. (௪)

(இ-ள்) திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே — சிவாலயத்துக் குள் ளெழுந்தருளி யிருக்கிற சிவலிங்கத்தி னிடத்திலே சதாசிவனென்று கருதுமவர்க்கு அவ்விடத்திற் சாந்நித்தியமாக நிற்பன். திருக்கோயில் தூலலிங்கமாயிருக்க அதனைக் கூறாமற் றிருமேனியென்னக் கூறிய தென்னையெனில்?

கோயில் தேகமும் அதிலிருக்குஞ் சிவலிங்கந் தேகியுமாத லாற் கூறியதென வறிக.

சிவனெனவே யென்று தேற்றங் கூறுகையாலந் தமூர்த்தியிடத்திலே வியாபித்திருக்கும் பரமசிவனைக் கூறியதாயிற்று; வியாப்பிய வியாபக பாவத்தினாலே தேகத்துக்குந் தேகிக்கும் பேதமில்லை யெனவறிக.

உருக்கோலி மந்திரத்தாலே நினையுமவர்க்கு முளன் அங்கு — வியத்தலிங்கம் வியத்தாவியத்த லிங்கம் அவ்வியத்த லிங்கமென மூவிதமாகக் கூறிய திருமேனியை யதிட்டா சுத்தமாதலாற் சுத்தனுக்கு மாயேயம் பொருந்தா தாகையாற் சுத்தமான மந்திரமே திருமேனியாக

லாம் முப்பத்தெட்டுக் கலைமுதலியவற்றால் திருமேனியாக்கித் தியானஞ் செய்யுமவர்க்கு அந்தக் குறியிடமாகத் தானே பிரகாசியாநிற்பன.

| | |
|---|---|
| எங்குமுளனிறை | பரிபூரணமாயெங்கும் வியாபித்திருக்கி |
| குளனெனப்பாற் | ற சிவனெவ்விடத்து மில்லை சாலப்பழுத் |
| கு விருப்பாய வ | லிய ஆவாகனத் திருத்தியங்களைப் பண்ணு |
| டிவாகி | கையா லிங்கேதானே யுளனென்று றுதியி |
| | டவாகனக் கவ்விடத்திற்றானே யருச்சித்து |

ப் பிரகாசியாநிற்கும் அஃதெனபோலெனின்?

| | |
|---|---|
| இந்தனத்தி | தாபரமானவோமுதலானவிருக்க மரத் |
| னெரிபோல் | தினகண வியாபித்து நிற்கிற அக்கினியான |
| | து, அரணியைக் கடையிலேயெறிக் கடைந் |

துவிட்டத் தக்கினியானது பிரகாசித்தாற்போலவும்,

| | |
|---|---|
| மந்திரத்தின் | பிராசாத மந்திரோச்சாரணத்தினாலே |
| வந்துதிப்பன | அவ்விடத்துப் பிரகாசியாநிற்பன |

| | |
|---|---|
| இருஞ்சுரபிக் | பெரிய சுரபியினுடைய கொம்புமுதற் குளம் |
| கெங்குமுருக்கா | பீருகப் பாலானது வியாபித்திருக்கவு மவ |
| வை வொண்ணாத | விடத்திற் றோன்றாமற் கன்றுக்கிரங்கித் தா |
| பால் முலைப்பா | னே முலைக்கண்ணிலே பிறங்கி விம்மித்தோ |
| லவிம்மி பொழு | ன்றி பொழுகுமாறுபோல அந்தச் சிவனு மன் |
| குவது போல | பாக்கே யுருகி நிட்களமானவன்றானே மூர |
| வெளிப்பட்டரு | த்தீகரிக்கு முறைமையு மித்தன்மை எ-று |
| ளுவ னன்பாக் | |
| கே | |

இதனாற் ருபா சங்கமங்களிடத்தில் வியாபித்து நிற்கு முறைமை கூறியதாயிற்று. இக்கருத்துச் சூக்குமத்தும் நிசுவாசத்தும் சுப்பிரபேதத்து மறிக. (௪)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் சிவலிங்கத்தை வழிபடு முறைமை கூறுகின்றது

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனிதன்னைச் சிவனென்றே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கு-திருக்கோயி லுள்ளிருக்குஞ் சிவலிங்கமே சிவனென்று பாவித்து வழிபடுமவர்க் கந்தச் சிவலிங்கத்தி னிடத்திலே சாந்நித்தியம் பண்ணுவன்,—அங்கே மந்திரத்தாலுருக்கோலி யுளனென்ன நினையுமவர்க்குமுளன்-அந்தச் சிவலிங்கத்தி னிடத்திலே பஞ்சப்பிரம ஷடங்கமந்திரங்களினாலே யுளனென்று பாவித்த போக்கு மவ்வாறு மந்திரமூர்த்தியாகச் சாந்நித்தியம் பண்ணுவன்,—எங்குமில னிங்குளனென்பார்க்கு விருப்பாயவடிவாகி யிந்தனத்தினெரிபோன் மந்திரத்தின் வந்துதிப்பன்-சிவ னகண்ட பரிபூரணனென்ன றியாமல் மந்தமதிகளா யெங்குமில்லை, இந்த மூர்த்தியிலேயே தனக்குத் தினக்கிஷ்டமான விக்கிரகத்திலே மந்திர நியாசங்கொப்பண்ணி வழிபடக் காஷ்டத்திலே வன்னிபோல வந்து மந்திரத்திலே சாந்நித்தியமாவன். இவ்வாறு பாவிக்கவே,—இருஞ்சுரப்பக்கெஙூ முருக்காணவொண்ணாத பான் மூலைப்பால் விம்மியொழுகுவதுபோல வெளிப்பட்டருளுவ னன்பர்க்கே-பாலானது பசுவினுடைய தேகமெல்லாம் வியாபித்திருக்கும் பின்னை யோரி—டத்தில காணப்படாமற் றனதுடைய கன்றைக் கண்டபொழுது மூலையிலே விம்மி யொழுகுவதுபோல ஆத்துமா வாகிலுஞ் சிவனிறைந் திருந்தானேயாயினும் மந்திரத்து வாயிலே பிரகாசித்துப் பத்தர்கள் வேண்டியது கொடுத்தருளுவனென் றிதன் பொருள்.



## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

யோக சாமர்த்திய மில்லார்க்குத் தியானோபாய முரைக்கின்றார்

ஸ்ரீகண்ட தேசிகரால் தரிசனங் கொடுப்ப னென்று சித்தாந்தம்

மறைந்த வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

பகுத்துணர்தலின்றிச் சிவலிங்கமுதலிய திருமேனியே சிவனெனக் கண்டு வழிபடுஞ் சரியையாளர்க்குச் சிவன் ஆண்டு வெளிப்படாது நின்று அருள்செய்வன். அருவப்பொருளாகிய சிவனை ஈசானாதி மந்திரங்களாற் சிவலிங்கமுதலிய திருவுருக்கோலினுமெனக் கருதி மந்திரநியாசத்தால் வழிபடுங் கிரியையாளர்க்கும், யோகிகளுள்ள மெங்கணு மில்லமாக வாழுஞ் சிவன் இத்திருமேனியிலுமிருந்து பூசைகொண்டருளுவனெனக் கருதிச் சாத்தியமந்திரங்களால் வழிபடும் யோகிகட்கும், கடைந்தவழித் தோன்றுமெரியுங் கறந்தவழித் தோன்றும் பாலும்போல அவ்வம் மந்திரங்களாலவரவர் விரும்பிய வடிவாய் அத்திருமேனிகளில் அப்போதப்போது தோன்றிநின்று அருள்செய்வன். அவ்வாறுபோ லேகதேசமாகக் குறித்தலின்றி அன்புமாத்திரையானாண்டு வழிபடு ஞானிகட்கு, கன்றை நினைந்த புனிற்றாவின் முலைப்பால்போல, கருணை மிகுதியால் அவ்வடிவே தானாய் எப்போது மாண்டு வெளிப்பட்டு நின்று அருள்செய்வன்; ஆகலான் அஃதறிந்து வழிபடுக வென்பதாம்.

ஆகலானஃதறிந்து வழிபடுகவென்பது குறிப்பெச்சம்.

உங்கேயென்பது யாண்டுஞ் சென்றியையும்

மந்திரத்தா லுருக்கோலி யெனமாறுக.

கோலியென்பது பெயர்.

உள்ள உள்ளம்

இலனென்பது இலலென்னு மிடைப்பெயரடியாகப் பிறந்த குறிப்புவினைமுற்று

இங்குமென்னுமும்மை இறந்தது தழீஇயிற்று.

அன்பாகக்கு விம்மி யொழுகுவதுபோ லெனவே யோகிகட்குக் கறக்கவொழுகும் பால்போலென்பது பெறப்பட்டது.

அன்பரென்றது ஈண்டு ஞானிகண்மேற்று, "அன்பரொடு மரீஇ" என்புழிப்போல

திருவேடஞ் சிவனெனத் தெளியுமாறு தொழப்படுவாரது கருத்துவகைபற்றிக் கூறினார், சிவாலயத்தைச் சிவனெனத் தெளியுமாறு தொழுவாரது கருத்துவகைபற்றிக் கூறினாரெனவுமுணர்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேற் சிவலிங்கப் பெருமானிடத்திலே சிவன் விசேஷமாகப் பிரகாசித்து நிற்கிற முறைமை யருளிச்செய்கிறார்.

திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனிகளைச் சிவனெனவே கண்டவர்களுஞ் சிவனுறைவனங்கே - அழகிய சிவாலயத்துக் குள்ளே எழுந்தருளி யிருக்கிற சிவலிங்கப்பெருமான் றனைச் சிவனென்றே யுபதேசத்தினாலே பதித்தவர்களுக்கு மவ்விடத்திற் சிவன் பிரகாசித்து நிற்பன்,—உருக்கொலி மந்திரத்தா

லே கிரியையுமவர்க்கு முள்ள - அநந்தத் திருமேனியிலே மந்தி
ரங்களாலே திருமேனியாகக் கொண்டவர்களுக்கு மங்கே பிர
காசியாநிற்பன்,—எங்குமிலிங்கருள் னென்பார்க்கு விருப்பாய
வடிவாகி - காணப்பட்ட வெல்லாவுருவங்களுந் தானாயிருக்க
ச்செய்தே தற்சொரூபந் தோன்றும னிற்பன். இந்தச் சிவலிங்
கப் பெருமானிடத்திற் றோன்றி நிற்பனென்கிறவர்களுக்கு வி
ருப்பத்துடனே யந்தத் திருமேனியி லெப்பொழுது மிருப்
பன் அதெங்ஙனெனனில்?—இந்தனத்தி னெரிபோல மந்திர
த்தின் வந்திந்த - காட்டத்தி லுண்டான வக்கினியானது மு
ன்பு காணப்படாமனின்று பின் பிவனாலறியப்பட்ட தோருபா
யத்தினு லந்தக் காட்டத்தி லுண்டானாற்போலத் தோன்றி,—
இருஞ்சுரபிக் கெங்குமுருக் காணவொண்ணாத பான முலைப்பால
விம்மி யொழுகுவதுபோல வெளிப்பட்டருளுவனென்பாக்கே -
பெரிய சுரபிக்குக் கொம்புமுதல் குளம்பீறாக வெவ்விடத்திலும
பால் வியாபகமாய் நிற்பினு மவ்விடங்களிற் பாலினது ஸ்வ
ரூபந் தோன்றாமனின்று முலைக்கண்ணிலே விம்மித் தோன்றித்
தாரையாகப் பொழியுமதுபோலச் சிவலிங்கத்திலே பிரகாசியா
நிற்பன் அவ்விடத்திலே வழிபடுகிற பத்தர்களுக்கு

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம் ௧௨-சூ, ௪-வெ,
“கண்டொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிபோற், றண்ட
ல்போ னின்றங் குளதாமாற—கண்டவருந், தானதுவா யன
ருளுஞ் தானதுவாய்த் தோன்றுமே, தானதுவாய்க் காணாத
தவர்க்கு” என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, காட்டத்தி லக்கினியானது முன்பு
தோன்றாமனின்று ஒருத்தரணிகொண்டு கடைய வவ்விடத்
திலக்நி தோன்றிய தன்மைபோல எவ்விடத்திலும் தோன்றும
ல்நின்ற சிவனும் பெரியோர்கள் சிவலிங்கப் பெருமானிடத்திலே

கண்டு வழிபட, அவ்விடத்திற் பிரகாசியா நிற்பனென்னு முறைமை யறிவித்தது

## சுப்ரமணயதேசிகருரை வருமாறு.

—0—

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனிதன்னை - பருத்தன ரகலின்றி ஆலயத் தெழுந்தருளியிருக்கும் சிவலிங்கமுதலிய திருமேனியே,—சிவனெனவே கண்டவர்க்கு - சிவமெனக் கண்டுவழிபடுஞ் சரியையாளர்க்கு,—சிவனங்கேயுறைவன - சிவஞானம் வெளிப்படாது நின்று அருள்செய்வன,—மந்திரத்தா லுருக்கோலின்றென நினையுமவர்க்கும-அருவப் பொருளாகிய சிவனை ஈசானுதி மந்திரங்களாற் சிவலிங்க முதலிய திருவுருக் கோலினனெனக்கருதி மந்திரநியாசத்தால் வழிபடுங் கிரியையாளர்க்கும்,—உள்ளெனக்கு மிலனிங்கேயுளனெனப்பார்க்கும்-யோகிகளுள் ளெங்கனு மிலமாகவாழும் சிவனித் திருமேனியிலு மிருந்து பூசைகொண்டருளுவனெனக்கருதிச் சாத்தியமந்திரங்களால் வழிபடும் யோகிகட்கும்,—இந்தனத்தினெரிபோல் பானமுலைப்பால் கறக்கவொழுகுவதுபோல் மந்திரத்தில் விருப்பாய வடிவாகி வந்தித்தும - கடைந்தவழித் தோன்றுமெரியும் கறந்தவழித் தோன்றும் பாலும்போல அவ்வம்மந்திரங்களா லவரவர் விரும்பிய வடிவாய்த் திருமேனிகளி லப்போதப்போது தோன்றி நின்றருள்செய்வன,—அன்பர்க்கு-அவர்போலச்சதேசமாயக்குறிக்கலின்றி யன்புமாத்திரை யாண்டுவழிபடும் ஞானிகட்கு,—மிருஞ் சுரபிகன்றுக்கு முருகசாண வொண்ணுத பானமுலைப்பால் விம்மிபொழுகுவதுபோல வெளிப்பட்டருளுவன - கன்றை நினைந்த புனிற்றுவின் முலைப்பால்போல அக்கருணை மிகுதியால அவ்வன்பேகாருய் எப்போது மாண்டு வெளிப்பட்டு நின்று அருள்செய்வானுகலா னஃதறிந்து வழிபடுக வென்பதாம்

# மறைஞானதேசிகர் உரை.



*இங்ஙன மிலிங்கத்தினையுந் திருவேடத்தாரையும் வழிபடுமெ வழிபாடு முணர்த்தி ஞானாசாரியனைச் சிவனெனவே வழிபாடுசெய்யு முறைமையு மூன்று திருவிருத்தத்தா லுணர்த்துகின்றார்.*

ஞானயோ கக்கிரியா சரியைநாலு நாதன்றன் பணி
ஞானி நாலினுக்கு முரியன், ஊனமிலா யோகமுத
ன் மூன்றினுக்கு முரியன் யோகிகிரியா வானருளெ
ண கிரியை யாதி, யானவிரண் டினுக்குரியன் சரியையி
னி னின்றோ னசசரியைக் கேயுரிய னதலின்ஞானியாக்கு,
மீனமிலா ஞானகுரு வேகுருவு மிவனே யீசனிவன ன்
றென்று மிறைஞ்சி யேத்தே. (௫)

(இ-ள்) ஞான யோகக்கிரி யா சரியை நாலு நாதன்ற ன்பணி — சிருட்டி காலத்திற் பரமேசுரன் திவ்வி யாகமங்களை நாலு பாதமாகப் பிரித்துத் திகா ரானு குணமாக வருளிச்செய்தருளு சிவன் கற்பித்த தொழில்களே!

ஞானி நாலினுக்கு முரியன் — மேலான பாதத்தின் வழிநின் றனுட்டித்த ஞானி ஞானம் யோகங் கிரியை சரியையென்கூறிய நாலுபாதத்துக்கு முரியவன்,

ஊனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன் யோகி — யோக பாதத்தின் வழிநின் றட்டாங்க யோகத்தை யனுட்டித்த யோகி குற்றமில்லாத யோகபாத முதலிய மூன்று பாதத்தின் வழிநின் றனுட்டித்தற் குரியவன்,

கிரியாவான குருவென்றுஞ்சிரியை யாதியான விர வடிநூக குரியன

கிரிபா பாதத்தின வழிநின றனுட்டிக்கு மவனகுரு கிரியை சரியையாகிய விரணடி னையு மனுட்டிததற குரியவன,

சரிபையினி னி ன குரு வ சசரி யைக்கேயுரியன

சரியைத தொழிலிலேனின றனுட்டிததவ னாதச சரியைமாததிரமே யனுட்டிததற குரியவன, இவவாறு பேதிததுக கூறிய தெனனெனில் ?

உபாததியாய ரானவா மாணுககர் பககுவத்துக்கு இடாகக சர்பிககுமாறு போலச சிவனு மானமாககளுடைய பககுவத்து க கிடாக நாலுபாதஙகளாகப் பிரிததுக கூறியதென வறிக

ஆகலினு லியா ரகரு மீனமிலா ஞான குருவே கு ருவு மிவனே

ஒவவொருவ ரொவவொரு பாதத்தினவ ழி நின றனுட்டிததற் குரித்தாதலால எல லாப பாதமு மனுட்டிததற குரிய மேலான ஞானசாரியனு மிவனென வறிக.

ஈசனிவன குரு னென றுமிறை ஞசி பேததே

இநத ஞானசாரியனே சிவனெனக கருதி வணஙகித துதியுஞ செயக எ-று

ஏகாரந தேற்றம.

இதறகுக கிரநதமம் வாயவவிய சஙகிதையினு மறிக (௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல மகேச்வரரை பினனுரை யினனா வழிபடுகவென னு முறைமை கூறுகினறது.

ஞானயோக கிரியாசரிகை நாலும் நாதனறன் பணி-நிர்ப தாரத்தையும ஞான முதலாகிய நாலுபாதத்தையு முபதே சிககிறது சிவனுடைய கிருததியம,—ஞானிகாலினுககு முரியன-

ஞானாசாரியனந்தச்சிவனே யாகையால் திரிபதார்த்தத்தையும் ஞானமுதலாகிய நாலுபாதத்தினையு முபதேசிக்கச் சுவதந்திரன்,—ஊனமில்லா யோகமுதல் மூன்றினுக்கு முரியன்யோகி-யோகாசாரியன் அடயோகமல்லாத சிவயோகமாகிய யோகமுதலான மூன்றுபாதத்தினையு முபதேசிக்கக் கர்த்தன்,—கிரியாவான்றொண்சரியையாதியா னிரண்டினுக்கு முரியன்-கிரியாசாரியனானவன் கிரியைசரியை யிரண்டுபாதமு முபதேசிக்கக் கர்த்தன்,—சரியையினின்றோன் சரியைக்கே யுரியன்-சரியாபாதத்தை யனுஷ்டிக்கிறவனாகச் சரியாபாதத்தைத் தானனுஷ்டிக்கவே கர்த்தன், பிறர்க்குபதேசம்பண்ணக் கர்த்தனல்ல,—ஆதலினாலெவர்க்கு மீனமில்லா ஞானகுருவே குருவு மிவனே யீசனிவனென்று மிறைஞ்சிடத்தே-ஆதலினாலே சரியையை பண்ணுகிறவன் கிரியையைப் பண்ணுகிறவன் யோகத்தைப் பண்ணுகிறவனிவர்கள் மூவர்க்கும் பாசஞானமின்றிச் சிவஞான மூர்த்தியாயுள்ள ஞானாசாரியனே யாசாரியன்? இவனே ஈசுவரனென்று நமஸ்கரித்துத் தோத்திரம்பண்ணி வழிபடுக வென்றிதன் பொருள்.

இதனாற் சரியாவான் கிரியாவானையும் யோகியையும் ஞானவானையும் கிரியாவான் யோகியையும் ஞானவானையும் வாஞ்சிரமானுகுணமாக வணங்கி வழிபடுகவென் றிதன்பொருள்

இவர்களில் ஞானிக்கு வாஞ்சிரம மில்லையெல்லாராலும் பூசிட்டனென்று சர்வசாத்திரசித்தம்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆகையால் நிராலம்ப சிவயோக சமாதிமானாகிய ஞானி நிராலம்ப சிவயோகமாகு ஞானநுட்டானத்தோடு சாலம்ப சிவ

யோகமாகும் யோகக்கிரியா சரியாவுடனான மூன்றிற்குரியன;
மற்றையர் மூவரும் தங்கள் தங்கள் மரியாதிக்குரியரென்று மக்
ஞல நிராலம்ப சிவயோகக்குருவே குருவென்று நிகழ்த்து கின்
றார்

வெளிப்பொருள்.

# சிவஞானயோகியருரை வருமாறு.

மேலைச் செய்யுளிற் கூறிய நால்வகைக்கருத்தும அவரவர்
மாத்திரைக்கேயுரித்தாயிருக்கச சரியையாளரைப்போல ஞானி
வழிபடுதலெற்றுக்கெனின்? நாலுபாதத்தினிகழும் கிரியையெ
ல்லாம் கத்தாவின் றுணைமப்பணியாகலால், உலகின் மருவாத
வின்பத்துள் வைத்த குருவினுபகாரத்தைக் கருதி நால்வகைத்
தொழிலும் ஞானி செய்கவே கடப்பாடெனபது உட்டொழில்
செய்வார் புறத்தொழிற்கு முரியரென்னு முறைபற்றியும், ஏனை
யோர் தத்தம் தொழிற்கேயுரியரென்பது புறத்தொழில் செய
வார் உட்டொழிற் குரியரல்லரென்னு முறைபற்றியு முணர்ந்து
கொள்ளப்படுவன. இனி ஈநால்வகைப் பாதத்தினிற்கு மாணு
க்கர்க்கு ஆசிரியனமார உபதேசித்தற்கட்படு முரிமையும் இவவா
றே வைத்துணர்க்க; எல்லார்க்கு முபதேசித்தற்குரிய ஞானகு
ருவே தலைபாய குருவென்றும், ஈண்டுக் கூறிய தாபரசங்கமங்க
ளும் இக்குருவடிவின் வேறல்லவென்றுந் தேறி, அவவிரண்டிலு
ம வழிபடுக வெனபதாம்.

மேற்கூறிய நால்வகைக்கருத்துக்கு முரியராவாரைக் கூ
றுவார், அவற்றையுளளடக்கி நிற்கும் ஞான முதலியவற்றை
யுடையார்து இயல்பினமேல் வைத்துக் கூறினார்.

சொற்பல்கா த மாட்டேற்றினமேல்வைத் துணர்ந்து கோடற்பொருட்டு, ஆகலினுலிறைஞ்சி யேத்தே யென்பதனையும் ஈண்டெடுனகூறினார்

திருவேட மாலயங்களெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சுதற்கட்படும் விசேடங் கூறியவாறு

ாசனிவனெனபுழி இவனெனபது பகுதிபபொருள் விகுதி

ாணடு ஈசனென்றது திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியை.

என்றுமென்னு முமமையை எதிரது தழீஇயிறுகைந் திருவேடமு மிவனேயென றிறைஞசிடேதனெனவு முரைத்துக்கொளக

இவைமூன்று செய்யுளானும் மூன்ருஞ்சூறு தெரிந்துணாத்தி வலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——()——

ஆசாரியனை வழிபடுகிற முறைமை மேலருளிச் செய்கிருர

ஞானயோகக் கிரியாசரியைநாலு நாதனறன பணி - ஞானமும் யோகமும் கிரியையும சரியை யும் இவை நாலும பசுக்களான மாக்கனை யிரட்சிக்கைப பொருட்டாகப பரமேஸ்வரன கற்பித்தருளின பணிவிடை, முன சொல்லிவந்த நாலு பாதத்திலும நிறகிற நாலுபேருக்கு மறிவொத திருக்குமோ வென்ற மாணாககனை நோக்கி ஓதுகிராதென றருளிச் செய்கிருர.—ஞானிநாலினுக்குமுரியன - ஞானபாதத்திலே நிற்கிறவ னிந்த நாலு பாதத்துக்கு முரித்தா யிருப்பன,—ஊனமிலாயோக முதனமூன்றினுக்குமுரியன யோகி - யோகபாதத்திலே நினறவன குறறமில

லாத யோகமுதல மூன்றினுக்கு முரித்தா யிருப்பன,—கிரியா வானருளெனுங் கிரியையாதியான விரண்டினுக்கு முரியன - கிரியாவிதியானவனருளாகிய கிரியையாதியான விரண்டினுக்கு முரித்தாயிருப்பன,—சரியையி லினரருளெனுஞ்சரியைக்கே யுரியன - சரியையிலே நின்றவன சரியை யொன்றினுக்குமே யுரித்தாயிருப்பன,—ஆதலினூ லியார்க்கு மீனமிலா ஞானகுருவே யருருவும்-தான நாலுபாதத்துக்குங் கர்த்தாவிருந்து இதனாற் சொல்லியக்கவாக்கட்டு நாலுபாதத்தையுங் கொடுக்கிறவனாகையாலே குற்றமில்லாத ஞானாசாரியனே ஆசாரியனும்—இவ்வேராசனியனெரன்னாறு மிறைஞ்சியேத்தே-பரமேசுவரனை முன்னின்ற ஞானாசாரியனை முன்னேயென்று அட்டாங்க பஞ்சாங்க பாவத் தண்டனப் பண்ணித் தோத்திரங்களுஞ் செய்து வழிபடுவாயாக.

இதனாற் சொல்லியது, ஆன்மாக்கள் பக்குவத்துக்குத் தக்கதாக ஞானயோக கிரியா சரியையென்கிற நாலு பாதத்திலும் நிறுத்தி அதற்குத்தக்க முத்தியையுங் கொடுக்கிறவனான ஞானாசாரியனென்று மிவனே சிவனென்றும ஞானவான்களுக்கு ஞானம் பிரகாசித்தாலுங் குரு வழிபாடு செய்யவேண்டு மென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஞானயோகக் கிரியாசரியை நாலுநாதனருள் பணி - ஞானயோகக் கிரியா சரியையென்னு நான்குபாதத்தினுமுள்ள கிரியையெல்லாம் கர்த்தாவினது உண்மைப் பணியாகலான,—ஞானி நாமினுக்கு முரியன - ஞானி ஞானமுதன் முன்கினுக்குமுரியன,—ஊனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியனயோகி - யோகி அறிவில்லாத யோகமுதன்மூன்றிற்கு முரியன,—கிரியா

கருள

வானன்றே ஞானசரியை யாதியான விரண்டினுக்கு முரியன — சரியாவார் ஞானசரிய கிரியை முதலிய விரண்டினுக்கு முரியன,—சரியையி லின்றே லச்சரியைக் கேயுரியன — சரியாவான் சரியை யொன்றிற்கே யுரியன,—ஆதலினால் யார்க்கு மீனமில்லா ஞானகுருவே குருவாம்—ஆகலின் எல்லார்க்கு முபதேசித்தற்குரிய ஞானகுருவே தலையாய குருவென்றார்,—இவனே யீசனிவனன்றோ வென்றும் இறைஞ்சியேத்தே—என்றுக் கூறிய தாபாசத்தமைச்சரும் இக்குருவடிவின் வேறல்லவென்றுந் தேறி யவ்விரண்டினும் வழிபடுக வென்பதாம்

இவை மூன்று செய்யுளானு மூன்றாஞ்சூறு தெரிந்துணர்த்தி வலியுறுத்தப் பட்டது

---

☞ கஉ - சூ, ௩-ம், அதிகரணமுடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இந்தவாசாரியனைச் சிவனெனப் பாவிப்பதெவற்றிற்கோ வெனில் இந்தப்பாவனை யில்லாவிட்டால் அவனுபதேசித்த மந்திர முதலானவை பலியாதாதலா லாசாரியரை வழிபாடுணர்த்தியதென் றுணர்த்துகின்றார்

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தயோகத்தான் மணிபிரத குளிகையினான் மற்று மற்றுந், தந்திரத்தே சொன்னபடி செய்யவேத சகலகலை ஞானங்க டிரிகால ஞான,மந்தமிலா வணிமாதி ஞானங்களெல்லா மடைந்திடுமோ சானருளா லடிசேர் ஞானம், வந்திடுமற றொன்றாலும் வாரா தாகு மற்றவையு மிவனருளால மருவு மன்றே. (௯)

(இ-ள்) மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்த யோகத்தால் மணிமந்திரக் குளிகையினன் மற்றுமற்றுந் தந்திரத்தே சொன்னபடி செய்ய

மந்திரங்களாலும் ஔஷதங்களாலும் கனகக்குச் சித்தித்த யோகங்களாலும் ஒளியையுடைய இரசகுளிகையாலும் வேறுவேறு சாத்திரங்களினாலே சொன்னபடியே செய்தால்

வேதசகலகலை ஞானங்கட்டிரிகாலஞான மங்கமிலாவணிமாதி ஞானங்களெல்லா மடைந்திடும்

நாலுவேதமுஞ் சகலகலைஞானமும் பரகாயப்பிரவேச முதலியவற்று ளுண்டாகிய திரிகாலஞானமும் பைசாச முதலாயினர்க்கு மேன்மேல் விசிட்டமான அணிமாதியான வெட்டுச் சித்திகளு மிவையெல்லா முண்டாகா நிற்கும்

ஆசானருளா லடிசேர்ஞானம் ஒன்றிமற்றொன்றேனும் வாராதாகும்

ஆசாரியன் கடாக்ஷத்தாற் றிருவடி ஞானமுண்டாம், இதனையொழிந்த இவை வேறொருவராலும் வேறொன்றினாலும் உண்டாகமாட்டா.

மற்றவையு மிவனருளால் மருவுமன்றே

முன்பு சொன்னவைகளெல்லா மிந்தவாசாரியன் பிரசாதத்தினாலுண்டாகா நிற்கும். எ-று

மற்றுமென்பதனால் தீர்த்தத்தினிடத்துந் தேவலிடத்து நகாலவிதானஞ் சொல்லுஞ் சோதிடரிடத்தும் பிராமணப் புத்தி பண்ணவேணுமெனக் கூறியது.

வாய்த்தயோகமென்பது ''வாயுரைச் செயித்த செயஞ் வாய்த்தற் கடையாளங்கள், வாயுராரோக்கியாதி யவற்றைய

…வுடலங்காட்டு, மாயமும்மனத்தினில்லை வசமுறும் புலன்களொன்றாங், காயத்தின் மலநீமற்று நோய்தெனக் கழியுமன்றே'' என்கையா லறிக

இதற்குக் கந்தகாலோத்தரமும் பிரவு முளவெனவறிக (௬)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேலிரண்டு விருத்தத்தினாலே அந்த ஞானாசாரியனே சித்தி முத்திக் கொடுப்பவனாதலா லவனையே வணங்கி வழிபடுக வென்று முறைமை கூறுகின்றது

மந்திரத்தால் மருந்துகளால் வாயுத்தயோகத்தால் மணியிரதகுளிகைகளால் மற்றுமற்றுந் தந்திரத்தே சொல்லப்படு செப்பிய வேதசகலகலைஞானங்க டிரிகாலஞான மந்தமிலாவணிமாதி ஞானங்களெல்லா மடைந்திடும்-இது வெளிப்பொருள்;—

ஆசானருளா லடிசேர் ஞானம் வந்திடு மற்றொன்றாலும் வாராதாகும்- ஞானாசாரியனனுக்கிரகத்தினாலே சிவசாயுச்சியத்தை யடையுஞ் சிவஞானமான துண்டாம், வேறே ருபாயங்களினாலு முண்டாகாது;—

மற்றவையு மவனருளால் மருவுமன்றே - முன் மந்திராதியுபாயங்களினாலே வேதாதியான வித்தைகளும் அணிமாதி அஷ்டமகா சித்திகளும் அந்தஞானாசாரியனுடைய கருணையினாலே பொருந்துவதா மென் றிதன்பொருள்

"அன்றென்கிலீ யாமென்றதருவே"

ஏகாரம் - ஈற்றசை.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

மந்திரத்தார சாலப்பயோக முதலிய தந்திரத்தார சாக்கிர சுவாவதித்த திரிகால ஞான முதலிய பல முண்டாம், நிராலம்ப சிவயோக சொரூப தேசத்தார சிவத்துவம் பொருந்தும், நிராலம்ப சிவயோகப் பொருட் சித்தாந்த மகா வாக்கிய ஞானம் வரும், மற்றொன்றால் வாராதென் றுரைக்கின்றார்

வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

ஏனை ஞானங்களெல்லாம் ஆசிரியனையின்றியு மமையும், திருவடிஞானம் ஒருவாற்றானு மாசிரியனை யின்றி யமையாது, ஆகலால் இவனேயீச னிவனன்றென்று மிறைஞ்சி யேத்தென்பதாம்

ஆகலாலிவனேயீச னிவனன்றென்று மிறைஞ்சியேத்தென்பது குறிப்பெச்சம்

அவ்வாறேத்தற்குரிய பெருமை கூறியவாறு

மற்றவையு மவனருளான மருவுமென்றது இயைபின்மை நீக்குதற் பொருட்டு

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

எல்லா ஞானங்களுஞ் சாத்திரஞ்சொன்ன முறைமையிலே செய்யவுண்டாம் சிவஞானத்திறலே சத்தியத்தைத் தரி

சித்துச் சிவானுபவத்தை யனுபவிக்கிற சாயுச்சியம் ஞானாசாரியனாலொழிந் துண்டாகாதென்று மேலருளிச்செய்கிறார்.

மந்திரத்தான மருந்துகளால் வாயத்தயோகத்தான மணியிரதகுளிகைகளான மற்றுமற்றுந் தந்திரத்தே சொன்னபடி செய்ய-இன்னவின்ன மந்திரங்களாலே யின்னதின்ன துண்டாமென்று சொல்லுகிற மந்திரங்களாலும், இன்னவின்ன ஔஷதங்களாலே யின்னதின்ன துண்டாமென்கிற ஔஷதங்களாலும், பிராணாயாம முதலாகச் சொல்லப்பட்ட நல்லயோகங்களாலும், ஒளியுடைய விரதகுளிகையினாலும், இவையொழிந்தும் வேறும் வேதசாஸ்திரங்களிலே சொன்னபடி செய்தால்,—வேத சகலகலை ஞானங்கள் திரிகாலஞான மந்தமிலாவணிமாதி ஞானங்களெல்லா மடைந்திடும் - நாலு வேதத்தையும் பல கலைஞானத்தையும் அறிபத்தக்க வறிவுகளும் செல்காலம் வருங்காலம் நிகழ்கால மென்கிற மூன்றையு மறியுமறிவும் முடிவில்லாத அணிமா மகிமா லகிமா கிரிமா பிராத்தி பிரகாமியம் ஈசத்துவம் ஆக விவை யெட்டுமாக விங்ஙனஞ் சொல்லப்பட்ட வறிவுகளெல்லா முண்டாகாநிற்கும் சிவஞான மிவற்றினாலுண்டாகாது அந்த ஞான முண்டாம்படி எப்படியென்னில்?—ஆசானருளா லடிசேர ஞானம் வந்திடு மற்றொன்றாலும் வாராதாகும் - ஆசாரியனுடைய கடாட்சத்தினாலே சிவனுடைய ஸ்ரீபாதத்திலே பொருந்தி யிரண்டறக் கலந்திருக்கிற ஞானம் பிரகாசிக்கும், இப்படி யொழிந்து வேறொன்றினாலு முண்டாகாது இந்த ஞான மொழிந்து,—மற்றவையு மவனருளான மருவுமன்றே - முன்பு சொன்னவைதானு மிந்த வாசாரியனுடைய வனுக்கிரகத்தினாலே யுண்டாம்.

இதனாற் சொல்லியது, சாஸ்திரங்கள் சொன்ன முறைமையிலே மந்திர முதலானவற்றினாலே வழுவறச் செய்தாலவ

ரவர்க்கு வேண்டின் ஞானங்க ளுண்டாமென்றுஞ் சிவஞானங் குருகடாட்சத்தா லொழிந் துண்டாகா தென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

———0———

மந்திரத்தால் - மந்திரங்களாலும்,—மருந்துகளால் - மருந்துகளாலும்,—வாய்த்த யோகத்தலால் - பொருந்திய யோகத்தாலும்,—மணியிரத குளிகையினால் - இரசக குளிகையினால்,—மற்றுமற்றுந் தந்திரத்தே சொன்னமுறைசெய்ய - வேறுவேறு சாஸ்திரங்களிலே சொன்னபடி செய்தற்கும்,—மேவுஞ் சகலகலை ஞானங்கள் - வேதாகம முதலிய கலைஞானங்கள்,—திரிகால ஞானம் - திரிகால ஞானங்கள்,—அந்தமிலா வணிமாதி ஞானங்களெல்லாம் - முடிவில்லாத அணிமாதிமுதலிய ஞானங்களெல்லா மறிதற்கும்,—ஆசானருளா லணைந்திடும் - ஆசாரியனையின்றி யடையவும்,— அடிசேர் ஞானம் வந்திடு மற்றொன்றாலும் வாராதாகும் - திருவடிஞானம் ஒருவாற்றானு மாசிரியனையின்றி யடையாது ஆகலான்,—அவனருளான் மற்றவையு மருவுமன்றே - குருவருளா னெல்லா மருவப்பெறு மாதலி னிவனையே சனிவனரு ளொன்று மிறைஞ்சியேத்தே

---

## மறைஞானதேசிகர் உரை.

அகப்பாவன் பலத்தா லாசாரியனைப் பரம
சிவனெனக் கருதினாற் கனுக்கிரகஞ்செய்
யுமுறைமை யுணர்த்துகின்றார்

பரம்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன்றா னென்று, மரண

மாசிலுபசார மஞ்சனம் பூ கந்த, நேசமிகு தூபமொளி நீர
முந்—தூசடை ககா, யாடிகுடைகவரி யாலவட்டம் விசிறி, யா
டலொடு வாசகிபமீ ரெட்டாகும்

நிலையுடைய வனுதினமு நினையெனது மனமே, தொலைவிலரு
டருமகலு மலமுமுறு துயரு, மலைவுடைய யுனதுயட மதியுடை
யவருளு, முலைவின மறை ஞானமுனி யுரைசெயதிருமொழியே

---

## சிவாகரயோகியருளா வருமாறு

—0—

பரமபிரமம மிவனெனறும பரசிவனு மெனறும பா
ஞானமிவனெனறும பராபரனு மெனறு மரனருஞ்சீர நி
லையெல்லா மிவனே யெனறு மருடகுருவை வழிபடவே - சிவ
னுககுச சததியினுலும விநதுவினுலும அஞசவததையுணடு, அ
நத அஞசவததையி னினற நிலைகளெல்லாம இநத வாசாரி
யனே எனறு வழிபடுக அவைகளாவன குணநாமக கிரியைக
ளொனறு மினறி நிரவிகறப ஞானஸவரூபமாகப பெரிராயினி
னறது பரமபிரமம, பினபு பஞசக்கிருததியோனறிச சிவனென நி
னற நாலுசததிகளுந தனனிடததி லுணடாகச சுததமாக நின
றவவதரம பரசிவன, ஞானசததி மூரததிமானுயானமாககளு
டைய கனமஙகளையு மதின பககுவஙகளையும பாரதநதிரியஙக
ளையுங கணடு நிறகு மவசரம பரஞானம, பரமாகிய சுததாசு
ததமாயைககு மேலாயக கிரியாசததி மூரததிமானுயச சுதத
மாயையில காரியஙகளை யுணடாககு மவசரம பராபரம, சதா
சிவன மகேசுவரன ருததிரனெனனு நாமஙகளை யுடையதாய
சுததாததுவ மிசிராததுவ அசுததாததுவ கிருததியஙகளைப ப
ணணுவது அரனருஞ சீரநிலை இவவாறு பஞசாவஸ்* தாரூ
சயூதனுய் நினற சிவ மிநத வாசாரியனேயெனறு கருணையினு
லே கொண்ட குருமூரத்தி சித்தத்தின வழித்தாய நடக்க

வே;—அவனிவனாகு ஞானியை யிரங்கி - அந்தப் பரசிவனிந்த வாசாரியனே யாகிக் கருணைபூத்து,—வாரண மாமை மீனண்டஞ் சினையை யியல்பினொடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும் பரிந்தவைகாக்குமாபோற் சிவமேயாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந்தானே - கோழியு மாமையு மீனும், முட்டையுஞ் சினையையும் பரிசினாலே யணைத்தும் நினைந்தும் பார்த்து முதலிருந்து ஆவரணங்க ணீங்கத் தன்றன் சுவரூபமாக்கிக் கொண்டவைபோல வாசாரியனும் பரிசதீக்கையினாலே மாயையையும் மானச தீக்கையினாலே கன்மத்தையும் + சாட்சுஷ தீக்கையினாலே யாணவமலத்தையும் நீக்கிச் சிவமே யாக்குவன்

ஏகாரத்தினாலே சிவகுண சங்கிராந்தி சமுற்பத்தி சமாவேச சிவசமமென்னு மூர்த்திக ளல்லாமல் சிவதாதாத்மியமென்றதெனவறிக

ஆக்குவனென்பதற்கு ஆக்குமென்பது வினைமுற்று

* அநுசயூதன் - கலந்தவன், + சாட்சுஷம் - கண்ணினது

ஒருமலமு மிருவினையுங் குணங்கண் மூன்று
முட்கரண மோர்நான்கும் புலன்க ளைந்தும்
வருபகைக ளோராறும் பவங்க ளேழு
மாயந்திடப்பே ரின்பமெட்டும் வகைய தாகத்
தருவதுவாய்ப் பரஞான மூர்த்தி தானே
தாரணிமேற் குருவுருவந் தரித்து வந்தோன்
திருவருளாற் சிவஞான சித்தி யென்னுந்
தொன்னூலுங் குறைவிரித்தோன் றெரிந்த வாறே

இரவியெழுந் திருளதனை நீக்குவபோ லென்று
மிறைஞ்சுமடி யவாமனத்தி னிருளதனை நீக்கக்
கருணைபொறை தவங்கருமங் கல்விசிவ ஞானங்
காசினியி லொருவடிவாய்க் காட்டியபோற் றோன்றிய

பரசமய கோடாரமே னிருநெறி கொண்டு
பலகலையு முணர்ந்துசைவ பரிபால னாகித்
திரமருவு சிவஞான சித்திக்கரு பொருளைத்
தெளிந்திடவே விரித்துரைத்தான் சிவாக்கிர தேசிகனே

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

குருவினது பெருமை கூறுகின்றார்

பரம - சுத்த சிவனென்றும,—பிரமம - சுத்தசிவ மத்திய நிர்த்தசிவம,—இவனென்றும,—பரசிவனென்னென்றுர-இருபர சிவனென்னு மிலய சிவனென்றும,—பராபரனென்றும - அநாகத சிவ னென்னும் போக சிவனென்னறும,—பரஞான மிவ னென்றும - ஞானக்கிரியாப பிரவ்ருத்தி மாகிய சதாசிவ னென்னு மதிகார சிவனென்னறும,—அரன றருஞ சீர நிலை யெல்லாம - மகேசுரன உருத்திரன மால் பிரமன முதற சிவபேத மனைத்தும,—இவனென்றும,—ஆரோபித சிவாத்து விதகதிஞலே,—அருட்குருவை வழிபடவே - அந்தச்சிவ னிந்தக குருதேகத்தி லாவேசித திந்தக குருவாயே கிருபா சமுத்திரனுகிய தேசிகனைப பாவனைபண்ணு,—அவனிவனென்றே - அந்தச சிவன இந்தக குருதேகத்தில ஆவேசித திந்தக குருவாய

இரங்கி வாரணமுதற பதப பொருள வெளிப்பொருள

இம முத்திருட்டாந்த தாட்டாந்திகப் பொருளுணர்ந் துணாககு மிட்டத தயிராகியியற்கையாய் மலத்தின மறைந்த சிவத்துவஞ சிவஞால விளங்குமெனனும பொருள விளங்கிறது

சொல்லி னவிற் றரிசறுஞ் சோதகிரத்
தொல்லு மேறசிவ ஞான முத்திதிடுஞ

செல்லு மெய்யரு ணந்திசெய்சித்திக்கு
நல்ல ஞான ப்ரகாசன் விற்றுரை

## சிவஞானயோகியருரை வருமாறு

—0—

சிவபேதமின்றித் தங் குருமூர்த்தமேயென்றத் தேறி ஞானாசாரியனை வழிபடுக, அங்ஙனம் வழிபடப்பெற்ற சிவன் இக்குருவை யாவேசித்து நின்று நாடோறுஞ் செய்யும் பரிசமுதலிய மூன்றும் அவ்வுயிரைத் தன்வண்ணமாகச் செய்தருளுவ னென்பது.

அவ்வா றேத்தினோர்க்கு வரும் பயன் கூறியவாறு

பரப்பிரமமென்றது சொரூப சிவத்தையெனவும், பரசிவமென்றது தடத்த சிவத்தையெனவும், பரஞானமென்றது ஞானசொரூபரான அகிலையுடையாரையெனவும், பராபரனென்றது எனைத்தாபர மூர்த்தத்தையெனவும், அரனாருஞ்சீர் நிலையென்றது அறுபத்துமூன்று நாயனமார் முதலிய சிவபத்தர் பொருட்டாக அண்டாண்டு வெளிப்பட்டருளிய வரையும் மூர்த்தங்கள் எல்லாவற்றையு மெனவும் கொள்க.

பரஞான சிவனென்றும் பராபரனென்றும் வழிபடுதலதிகாரப் பட்டமையின் ஏனையவு முடன்கூறினார்.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

சிவனே யாசாரியனென்றும் ஆசாரியனை வழிபாடு செய்யப் பரமேசுவரனிவனைத் தானாக்குவனென்று மேலருளிச்செய்கிறார்.

பரம்பிரமசிவனென்றும் - எல்லாத்துக்கு மேலாயிருக்கிற பரமசித்த வாசாரியனென்றும்,—பரசிவனென்றும்-எல்லா

தநக்கு மேலான சிவனிந்தவாசாரியனென்றும்,—பரஞானமி லனென்றும் - மேலானஞானமுமிந்த வாசாரியனே யென்று ம்,—பராபரனென்றும் - எங்கும் பரிபூரணனான பரமசிவ னே இந்த வாசாரியனே யென்றும்,—அரனறுஞ்சீர் நிலையெல லாமிவனே யென்றும் - பரமேசுவரனுக்குண்டாகப்பட்ட சிற ப்புடைய நிலைமைக ளெல்லாமிந்த வாசாரியனே யென்று ம்,—அருட்குருவை வழிபடவே யவனிவன்றானே யிரங்கி - ஞானாசாரியனை வழிபடவே அந்தப் பரமேசுவர னிந்தவாசா ரியன் றானேயாய் கிருபை ஜனித்து,—வாரண மாமையீனுட ன் சினையை யியல்பினொடும் பரிசித்தும் நினைத்தும்பார்த்தும்- நினைநிறை - கோழியு மாமையு மீனு முட்டையுஞ் சினையு முறைமையாக, கோழி தன்னுடைய முட்டையைப் பரிசித்து ம், ஆமை தன்னுடைய முட்டையைத் தூரத்தே கிடந்து நினைத் தும், மீனானது சினையைப்பார்த்தும்,—பரிசித்தைதானாகுமா போல - முன் சொன்ன மூன்றும் பிரியப்பட்டு, கோழிமுட் டையைக் கோழியாக்கின தன்மைபோலவும், ஆமை முட்டை யை யாமையாக்கின தன்மைபோலவும், மீன் சினையை மீனாக்கி ன தன்மைபோலவும்,—சிவமேயாக்கும் பரிசித்துஞ் சிந்தித்து ம் பார்த்துந்தானே-பாதங்களாலே பரிசித்தும், திருவுளமப ற்றியும், திருக்கண் சாத்தியும் இந்த வான்மாவை யத்தச் சிவமே யாக்குவ னிந்த வாசாரியன்.

ஞானயோகத்தால் பரமபிரமமென்கிற திருவிருத்த மூன றுக்கும் பிரமாணம் சிவஞானபோதம், கஉ-சூ, எ-வெ, " தன னை யறிவித்துத் தானாகச், செய்தானைப், பின்னைமறத்தல் பிழைபலது—முன்னவனே, தானேதானாச்செய்துந் தைவமெ ன்றுந் தைவமே, மானே தொழுகை வலி" என்னுமதுகண்டு கொள்க.

இதனாற் சொல்லியது, அந்த உண்மையைத் தரிசித்த ஜீவன்முத்தரா யுள்ளவர்கள் பரப்பிரமமுதலான திருமேனிக ளெல்லா மிகந்த வாசாரியன் றானேயென்று தேகாந்தமுள்ளளவுங் குரு வழிபாடுசெய்து வரக்கடவர்களென்றும் அப்படிச் செய்ய வே கோழியு மாமையு மீனு மண்டத்தையுஞ் சினையையும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துங் காக்கின் முறைமைபோல் விந்த வானமாவையும் ஆசாரியர் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தற்சொரூபமாகிய சிவமே யாக்குவனென்னு முறைமையையு மறிவித்தது

சுத்த மசத்துஞ் சகசத்துஞ் சத்திய மாகிநிற்குஞ்
சித்தன் றிருவடி பலவாண னென்னுளாஞ் சோரத்தனாற்
சுத்தம பயின்ற பதிபசுபாசத்தைச் சொல்லுஞ் சத்த
மத்த மதாக்கு ளதுபோகவு காணடற் சரிதல்லவே

செய்ய சிவஞான சித்திக சடற பொருட்கு, உய்யு நெறி தோன்ற வுளங்கொண்டு—மெய்யுமிசை, கூட்டுநெறி தோன்ற வுரைபகர்ந்தான ஞானவழி, காட்டு மிராம வழகன.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

பரம்பிரம சிவனென்றும - சொரூபசிவமே சிவனென்றும,—பரசிவனானென்றும - தடத்தசிவமே சிவனென்றும்,—பரஞானசிவனென்றும் - பரஞானத்தை யுடையா னிவனென்றும,—பராபரனானென்றும் - வினைத் தாபரமூர்த்தங்களே சிவனென்றும்,—அரனாருசி நிலையெல்லா மிவனேயென்றும், அறுபத்துமூவர் நாயன்மார் முதலிய சிவபத்தர் பெருமையாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளி மறையுமோதத்தக்க வெல்லா மாகிய சிவபேதமனைத்தும் குருவெனத்தேறி,—அருட்குருவை வழிபடவே - ஞானாசாரியனை வழிபடுக அங்ஙனம் வழிபடப் பெறில்,—அவனிவனானேயே - சிவன இக்குருவை யாவேசித்து

